# அறுந்த தந்தி

(சிறு கதைகள்)

கி. வா. ஜகந்நாதன்





கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் :: சென்னை - 4



[விலை ரூ. 2-8-0

முதற் பதிப்பு: 1947.
இரண்டாம் பதிப்பு: 1951.

# பொருளடக்கம்



PRINTED AT
THE MADRAS LAW JOURNAL PRESS,
MYLAPORE, MADRAS.

# முன்னுரை

தமிழ் நாட்டில் இன்று வந்திருக்கும் சிறு கதை களுக்குக் கணக்கு வழக்கே இல்லை. பத்திரிகைகளில் வாரந்தோறும் கதைகள் வந்த வண்ணமாகவே இருக் கின்றன. "இந்த வெள்ளத்துக்கு அணைபோடுவார் ஒருவரும் இல்லையா?" என்று அங்கலாய்க்கும் அன் பர்களும் இருக்கிறார்கள். சிறுகதையைப் பற்றிக் குறைவாகப் பேசினவர்கள், அதற்குப் பிராயச்சித் தம் செய்துகொள்வதுபோலச் சிறு கதைக்காகவே பத்திரிகைகள் வெளியிட முயல்கிறார்கள்.

இதற்குக் காரணம் என்ன? சிறுகதை, தமிழ் நாட்டார் உள்ளத்தில் அவ்வளவு தூரத்துக்கு இடம் பெற்றுவிட்டது. பொதுஜனங்கள் வேண்டும் வேண் டும் என்பதை, வேண்டாம் வேண்டாம் என்று சொல்வதனால் ஒரு பயனும் உண்டாகப்போவதில்லை. எழுத்தாளர்கள் சிறு கதைகளை எழுதிக்கொண்டு தான் இருக்கிறார்கள்; வாசகர்களும் அலுப்புச் சலிப் பில்லாமல் படித்துக்கொண்டுதான் இருக்கிறார்கள்.

"இப்போது வெளியாகும் சிறு கதைகள் எல் லாம் கால வெள்ளத்தில் நிலைத்து நிற்குமா?" என்று சிலர் கேட்கிறார்கள். அது வேறு விஷயம். ஆயிரம் கதைகள் வந்தால் ஒன்றாவது தேறட்டுமே. தமிழ் நாட்டுச் சிறு கதைகளில் அந்தத் தகுதியை உடை யன இல்லாமல் போகவில்லை.

வாசகர்களுக்குச் சிறுகதை படிக்கும் ஆர்வம் இருக்கும் வரையில் சிறுகதைச் சிருஷ்டி நிற்கப்

போவதில்லை. வேண்டாம் என்று சொல்லும் சில ருக்காக அதன் வேகம் குறையவும் குறையாது.

"சிறுகதை மாத்திரம் போதுமா? மற்றத் துறைகளில் நவீன இலக்கியம் முன்னேற வேண்டாமா?" என்று கேட்பவர் ஒரு சாரார். அவர்கள் கேள்வியில் ஒரு விதமான ஆர்வம் இருக்கிறது. மற்றத் துறைகளிலும் முயற்சி தீவிரப்பட வேண்டும் என்று வற்புறுத்திச் சொல்லட்டும். அதை வரவேற்போம். அப்படியின்றி, இப்போது உண்டாகியிருக்கும் சிறுகதை ஊக்கத்தைக் கண்டு கசந்து, "சிறுகதை வேண்டாம்" என்று காதைப் பொத்திக்கொள்வதற்குக் காரணம் தமிழன்பாக இருக்க முடியாது.

சிறுகதைகள் எழுதுவதில் உற்சாகங் கொண்ட பெருங்கூட்டத்தில் நானும் ஒருவனாக இருக்க ஆசைப் பட்டேன்; சிறந்த சிறுகதைகளை எழுதவேண்டும் என்ற ஆசை இன்னும் என்னை விட்டபாடில்லை. எழுதிக்கொண்டுதான் இருக்கிறேன்.

என் கதைத் தொகுதிகளில் இது மூன்றாவது. இதில் பலவகைக் கதைகளும் இருக்கின்றன. எல்லாக் கதைகளும் எல்லாருக்கும் பிடிக்கும் என்று நான் சொல்ல வரவில்லை. ஆனால் ஒன்றுமே பிடிக்கவில்லை என்று சொல்லும் நிலை இந்தத் தொகுதிக்கு வராது என்ற தைரியம் எனக்கு உண்டு.

24-9-47. கி. வா. ஜகந்நாதன்

# அறுந்த தந்தி

## 1

ராமபத்திர சர்மா கர்நாடக சங்கீதக்கலைப் பயிற்சி பெற்று நல்ல தேர்ச்சியடைந்து சிறந்த வித்து வான்களுடைய கோஷ்டியில் ஒருவராக விளங்கினார். இளமையிலேயே இவ்வளவு தூரம் அவருக்குக் கியாதி உண்டானதற்கு முக்கியமான காரணம் அவர்பால் இருந்த குருபக்திதான் என்று எல்லோரும் சொல்லிக் கொள்வார்கள். சுக பாவம் நிரம்பிச் சொன்னபடி கேட் கும் சாரீரம். "போன ஜன்மத்தில் ஈசுவரனுக்குக் குடங் குடமாகத் தேனபிஷேகம் செய்திருக்க வேண்டும்" என்று குடு குடு கிழங்கள் பேசிக்கொள்ளும்.

எல்லாவற்றையும்விட அவரிடத்தில் ஒரு சிறப்பு இருந்தது. அவர் வெறும் சங்கீத வித்துவான் மாத்திரம் அல்ல; சாகித்தியத்திலும் வல்லவர். புதிய புதிய மெட்டுக் களில் அவர் தமிழில் இயற்றி வந்த கீர்த்தனங்கள் சங்கீத வித்துவான்களுக்கும் தமிழறிஞர்களுக்கும் ஒருங்கே இன் பத்தை உண்டாக்கின. தமிழ், வடமொழி, தெலுங்கு என்ற மூன்று மொழிகளிலும் அவருக்கு நல்ல ஞானம். தமிழிலே அவரைப் பண்டிதரென்று சொல்வதுதான் நியாயம். பழைய கீர்த்தனங்களை எதிரே வைத்துக் கொண்டு பதத்துக்குப் பதம் போட்டுக் கீர்த்தனமென்ற பெயரோடு ஜீவனற்ற பாட்டுக்களை இயற்றுபவர் அல்லர் அவர். தமிழ் மரபும் இசை மரபும் பிறழாத அமைப்பை அவருடைய கீர்த்தனங்களிலே காணலாம். பழைய கீர்த்த னங்களில் இன்றியமையாத சிலவற்றின் மெட்டுக்களை மாத்தி ரம் பின்பற்றிச் சில உருப்படிகளைச் செய்தார். மற்றப்படி எல்லாம் புதிய புதிய வர்ணமெட்டுக்கள். அவர் அமைத்

திருந்த சில முடுக்குகள் அநாவசியமாக ஸ்வரங்களை இட்டு நிரப்பும் அவஸ்தைக்கு இடமில்லாமல் செய்தன.

சாஸ்திர அறிவு, சாரீரம், சாகித்திய சக்தி எல்லாம் பொருந்தியவர்களைக் காண்பது மிகவும் அரிதான இந்தக் காலத்தில் ராமபத்திர சர்மாவின் புகழ் பெருகி வந்தது ஆச்சரியம் அன்று. அவர் வீணையிலும் அபார சாமர்த்தியம் வாய்ந்தவர். சொல்லப்போனால், அவர் முதல் முதலில் கற்றுக்கொண்டது வீணைதான். சிறந்த வீணை வித்துவானவாரென்றுதான் அந்தக் காலத்தில் அவரை அறிந்தவர்கள் எண்ணினார்கள். ஆனால் வீணையை மிஞ்சிவிட்டது அவர் சாரீரம். சாரீர வீணையிலே அவர் சஞ்சாரம் செய்த போது அநாயாசமாக உதிரும் ரவைகளையும் தண்ணென்று வரும் ராகபாவங்களையும் கேட்டவர்கள் பிரமித்துப் போனார்கள்.

அவருடைய குருவைப்பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். நாகபட்டினம் குருமூர்த்தி ஐயரைத்தான் சொல்கிறேன். போன தலைமுறையில் தஞ்சாவூர் ஜில்லாவில் அவருக்கு ஈடான வித்துவானே இல்லை. சங்கீதக் கச்சேரிகளில் தம் திறமையைக் காட்டிப் புகழ் பெற்றதைக் காட்டிலும் அதிகமாக அவர் நிலையான உபகாரங்களைச் செய்து கீர்த்தியை அடைந்தார். ஆம்; அவரிடம் சிக்ஷை சொல்லிக்கொண்டவர்களுக்குக் கணக்கு வழக்கில்லை. குறைந்த பக்ஷம் நூறு பேர்களுக்கு அவர் இசைப் பயிற்சியை உண்டாக்கி யிருக்கலாம். அவரவர்கள் அங்கங்கே தங்கள் தங்கள் அதிருஷ்டத்துக்கு ஏற்றபடி ஜீவனம் செய்துகொண் டிருக்கிறார்கள்.

பெரிய மனிதர் வீட்டுக் குழந்தைகளுக்குக் காலையும் மாலையும் சங்கீத 'ட்யூஷன்' சொல்லிக்கொடுத்து, முப்பதோ நாற்பதோ சம்பாதிக்கிறாரே அந்த முத்துக்கிருஷ்ணயர் அவருடைய சிஷ்யரே. பிடில் வாத்தியத்திலே புகழ் வாய்ந்திருக்கிற பத்மநாப முதலியார் அவரிடம் தயாரானவர். இப்படிப் பலபல நிலையிலும் பலபல தரத்திலும்

அவருடைய மாணாக்கர்கள் தமிழ்நாட்டிலே நிறைந்திருந்தார்கள். அந்த மாணாக்கர் பெரும்படையிலே பொறுக்கியெடுத்த நாலைந்து பேர் சங்கீத சிங்கங்கள். அவர்களுக்குள் முதல் ஸ்தானம் வகிப்பவர் ராமபத்திர சர்மா.

இப்போது குருமூர்த்தி ஐயர் சென்னையிலேதான் இருந்து வருகிறார். பல்லுப்போன கிழவராகிவிட்ட அவருக்குப் பழைய ஞாபகங்களும், அவ்வப்போது தம்மை வந்து பார்த்துப் போகும் சிஷ்யர்களின் சல்லாபங்களும் வாழ்விலே சுவையை அளித்துக்கொண் டிருக்கின்றன. அவருடைய வித்தை ராமபத்திர சர்மாவிடம் நன்றாக ஊன்றி முளைத்துப் படர்ந்து பூத்துக் காய்த்துக் கனிந்து குலுங்குகிறது.

அவர் பிள்ளை சம்பாதிக்கிறான். இங்கிலீஷ் படித்து உத்தியோகத்திலே இருக்கிறான். சிறு வயசிலே சங்கீதம் கற்றுக்கொள்ளும் முயற்சியில் அவனும் ஈடுபட்டான். குருமூர்த்தி ஐயர், யாரோ சிஷ்யரைக் கொண்டு கற்பித்தார். பாவம்! அவனுக்குச் சாரீரம் நன்றாக இல்லை. 'குரல் இல்லாதவனுக்கு விரல்' என்று சொல்வார்களே, அப்படி வீணையிலே விடலாமென்று வித்துவான் நினைத்தார். கொஞ்சகாலம் தீவிரமாகத் தாமே சொல்லித் தந்தார். ராகவனுடைய விரல் பேனாவைப் பிடிக்க அமைந்ததேயன்றி வீணைத் தந்தியை வருடத் தகுந்ததாக இல்லை. என்ன செய்வது? 'எல்லாம் விட்ட குறை தொட்ட குறை இருந்தால்தான் வரும்' என்று சொல்லி அந்த ஆசையை விட்டு இங்கிலீஷ் படிப்பிலே போட்டுவிட்டார். பி. ஏ. வரைக்கும் ராகவன் படித்தான். இப்போது ஓர் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியில் உதவி மானேஜராக இருந்து மாசம் நூற்றைம்பது ரூபாய் சம்பாதிக்கிறான். சங்கீதத்தைத் தொழிலாக வைத்துக்கொள்ளாவிட்டாலும் தகப்பனாருடைய பழக்கத்தாலும் சதா அவரிடம் பழகி வந்த மாணாக்கர்களின் பழக்கத்தாலும் சங்கீத சாஸ்திரங்களின் முடிச்சுக்களையெல்லாம் தெரிந்துகொண்

டிருந்தான். சங்கீத சம்பந்தமான சர்ச்சைகளிலே அவ னுக்கு அபாரமான ருசி. சங்கீத வித்துவான்களின் பாட் டிலே தோஷம் காண்பதில் புலி.

ராமபத்திர சர்மா மயிலாப்பூரில் ஜாகை வைத்துக் கொண்டிருந்தார். பட்டணத்தில் வசித்து வந்த தம் குரு நாதரை வாரத்துக்கு இரண்டு தடவையாவது போய்ப் பார்த்துவிட்டு வருவார். ஏதாவது புதிய கீர்த்தனத்தை இயற்றினால் முதல் முதலில் அதை வீணையிலே அமைத் துப் பாடிவிட்டு நேரே தம் குருவினிடம் சென்று அரங் கேற்றுவார். அவரோ, சொல்ல வேண்டியதில்லை; ஒவ் வொரு வார்த்தையையும், ஸ்வரஸ்தானத்தையும் கேட்டுக் கேட்டு ஆனந்தக் கூத்தாடுவார். "ராமபத்திரா, அந்தக் காலத்தைப்போல இப்போது மகாராஜாக்கள் இருந்தால் உனக்குக் கனகாபிஷேகமல்லவா செய்வார்கள்? அடடா! என்ன அருமையாக அந்தப் பதம் விழுந்திருக்கிறது! தாளத்தோடு இசைவாக அந்தப் பிராசம் காதிலே படும் போது, சங்கீதம் பெரிதா, சாகித்தியம் பெரிதா என்ற சந்தேகம் அல்லவா வந்துவிடுகிறது? தமிழ் மொழியின் பெருமை இந்த உருப்படிகளிலே எவ்வளவு தெளிவாகத் தெரிகிறது! அந்தச் சரணத்துக்கும் பல்லவிக்கும் உள்ள பொருத்தம் ஒன்றே போதுமே, உன்னுடைய சாகித்திய சக்தியை அளப்பதற்கு" என்று பாராட்டுவார்.

"எல்லாம் அவ்விடத்தில் இட்ட பிச்சை; தாங்கள் செய்த அநுக்கிரக விசேஷந்தான் எனக்கு உற்சாகத்தை உண்டாக்குகிறது" என்ற பணிவான விடை, அந்தக் கிழ வரிடமிருந்து பின்னும் அதிகமான பாராட்டை வருவிக்கும்.

"அந்தக் காலத்தில் - உனக்குத் தெரியாது. நீ வருவ தற்கு முன் நடந்த சமாசாரம் - அப்போது யாரோ ஒரு தமிழ் வித்துவான் வந்தான். தியாகராஜ ஸ்வாமிகள் கீர்த்த னம் பாடியிருக்கிறேனென்று சொன்னான். எனக்கு வேடிக் கையாக இருந்தது. தேவுரு நாமம் பாடியிருக்கிறேன், சாமா சாஸ்திரிகள் பாடியிருக்கிறேன் என்றெல்லாம் பீற்

றிக்கொண்டான். அப்போதே இவன் யாரோ சங்கீத நிரக்ஷரகுக்ஷி என்று தீர்மானித்துக்கொண்டேன். தமிழிலே கீர்த்தனங்கள் செய்தானும். தியாகராஜர் கீர்த்தனங்கள் மாதிரியே பாடினனும்.

"அவன் பாடாத கீர்த்தனம் இல்லே. கீர்த்தனமென்று அவன் சொல்லிக்கொண்டான். சுத்தப் போக்கிரித்தனம்! 'சங்கீதம் தெரியுமா?' என்று கேட்டேன். 'யாப்பிலக்கணம் தெரியும்; மெட்டை வைத்து ஒட்டிப் பாடியிருக்கிறேன். ஒரு பிழை இராது' என்று பெருமையாகப் பேசினன். பாட்டைச் சொல்லச் சொல்லிக் கேட்டால் மகா கண்ணராவியாக இருந்தது. 'வெட்டும் கட்டும் முட்டும்' என்று பிராசத்தை இறைத்திருந்தான். டபடப படபட வென்று முடுகுகளேப் போட்டிருந்தான். பல்லவி தனியாக நிற்கிறது; சரணம் அறுந்து தொங்குகிறது. 'ஏனையா, இந்தச் சரணத்தையே பல்லவியாகப் போட்டுப் பாடலாம்போல் இருக்கிறதே!' என்று கிண்டலாகக் கேட்டேன். 'ஆகா, அப்படியே செய்யலாமே! எதை எங்கே எப்படிப் போட்டாலும் பொருந்தும்; பொருட் சிறப்புக் கெடாது' என்றுன். 'அட மூடமே!' என்று மனசில் சொல்லிக்கொண்டு ஒரு வழியாக ஸ்தோத்திரம் பண்ணி அனுப்பிவிட்டேன். எதற்குச் சொல்ல வந்தேனென்றுல், இப்படியெல்லாம் சங்கீதத்தையும் சாகித்தியத்தையும் பண்ணுகிறவர்களுக்கு இந்தக் கீர்த்தனங்களேப் பார்த்தாவது புத்தி வரட்டுமென்று தோன்றுகிறது." — இப்படி அவர் பழங்கதைகளே எடுத்துப் பேச ஆரம்பித்தால் அதற்கு முடிவே இராது.

ஒரு நாள் சர்மா பைரவி ராகத்தில் ஒரு புதிய கீர்த்தனத்தை இயற்றிக்கொண்டு தம் ஆசிரியரிடம் வந்தார். ராகத்தின் ஆரோகண அவரோகண ஸ்வரங்கள் சரணங்களிலுள்ள அமைப்பிலேயே விழும்படி மிகவும் நன்றுக அமைந்திருந்தது. பல இடங்களில் ஸ்வராக்ஷரங்கள் இயற்கையாகவே பொருந்தியிருந்தன. கேட்ட குரு

மூர்த்தி ஐயருக்கு உடம்பே தெரியவில்லை. அளவற்ற ஆனந்தத்தை அடைந்து 'ஹா! ஹா!' என்று குதூகலித்தார். "நீ சிரஞ்சீவியாக வாழவேண்டும். மிகவும் நன்றாயிருக்கிறது. ராக மூர்ச்சையை வெகு அழகாகக் காட்டியிருக்கிறாய். விரிபோணி வர்ணத்துக்கு ஈடு ஜோடில்லை என்று நினைத்தேன். இது பிரமாதமாக இருக்கிறது. கீர்த்தனமாகச் செய்திருப்பதிலேதான் உன்னுடைய சங்கீத ஞானமும் தமிழறிவும் நன்றாகத் தெரிகின்றன. தீர்க்காயுசாக இருக்கவேண்டும்!" என்றபோது அவரை உணர்ச்சி தடைப்படுத்தியது. மேலே பேச முடியவில்லை. கண்களில் நீர் முத்துக்கள் அவர் உள்ளத்தில் பொங்கிய ஆனந்தக் கடலிலிருந்து எழுந்து தோன்றின. சிறிது நேரம் அவர்களிடையே மௌனம் நிலவியது.

"ராமபத்திரா, ஒரு விஷயம் உன்னிடம் சொல்ல வேண்டுமென்று எண்ணினேன். எனக்கு என்னவோ அது குறையாக இருக்கிறது."

ராமபத்திர சர்மா திடுக்கிட்டார். "என்ன, என்ன?" என்று வேகத்தோடு கேட்டார்.

"ஒன்றும் இல்லை, நீ சாகித்தியம் செய்கிறாயே; இந்த அருமையான சாகித்தியங்களில் உன்னுடைய முத்திரை இருக்கவேண்டும்."

"இதுதானா? என் முத்திரை எதற்காக? நான் என்ன பெரிய காரியத்தைச் செய்துவிட்டேன்? எவ்வளவோ அருமையான காரியங்களையும் நூல்களையும் பல பெரியவர்கள் தம்மைப் புலப்படுத்திக்கொள்ளாமலே செய்துவிட்டுப் போயிருக்கிறார்கள். நம் நாட்டுக் கலைஞர்களுக்குக் கலை வேறு, தாம் வேறு என்ற நினைவே இல்லை. கலைப் பொருள் உள்ள வரையில் தாம் இருப்பதாகவே அவர்கள் கருதுகிறார்கள். உண்மையும் அதுதான். இந்தப் பெயர், முத்திரை முதலிய சரக்கெல்லாம் வீண் விளம்பரம்; வியாபார உலகத்துக்கே வேண்டும். விளம்பரம் அதிகமாக ஆக, அது சரக்கின் குறைகளை மறைப்பதற்குச் செய்யும்

முயற்சி என்று தான் நான் நினைக்கிறேன். என்னுடைய முத்திரை எதற்காக? ஸ்வாமியின் புகழுக்கு நடுவே என் பெயரை வைத்தால், சகஸ்ரநாம அர்ச்சனை செய்வதற்கு இடையில் நம்முடைய தலையிலும் ஒரு பூவைப் போட்டுக் கொள்வதுபோல ஆகாதா?''

"நீ சமத்காரமாகத்தான் பேசுகிறாய். உன்னுடைய சாந்த ஸ்வபாவமும் தெரிகிறது. நீ கீர்த்தனங்களில் அமைத்திருக்கும் விஷயங்கூட உன்னுடைய உன்னத மான மனநிலையை வெளிப்படுத்துகிறது. ஆனாலும் நான் சொல்வதைக் கேள். முத்திரை வைப்பது அகங் காரத்தின் அடையாளமாகாது. தியாகராஜ ஸ்வாமிகள் வைக்கவில்லையா? தீக்ஷிதரவர்கள் வைக்கவில்லையா? அவர் களெல்லோரும் எவ்வளவு பெரியவர்கள்! அவர்களுடைய வழியைத்தான் உனக்குச் சொல்கிறேன். உன்னுடைய கீர்த்தனங்களின் உயர்வை நீ முழுவதும் தெரிந்து கொள்ளவில்லை. எதிர்காலத்தில் இவற்றுக்கு நிச்சயமாகப் பெரும் புகழ் உண்டாகும். இவற்றோடு உன் பெயரும் நிலைத்து நிற்க வேண்டும். ஆகையால் நான் சொல்வதைத் தட்டாமல், இனிமேல் செய்யும் கீர்த்தனங்களில் உன் முத்திரையை வைக்கத்தான் வேண்டும்.''

ராமபத்திர சர்மாவுக்கு ஒன்றும் தோன்றவில்லை. "ஆக்ஞையைத் தட்டும் அபசாரத்தை நான் செய்யமாட் டேன். பார்க்கிறேன்'' என்று சொல்லி விடைபெற்றுக் கொண்டார்.

## 2

தைமாதம் பிறக்கப் போகிறது. அந்த மாதம் முதல் ராமபத்திர சர்மாவுக்கு இடைவிடாத சங்கீதக் கச்சேரி கள் கிடைக்கும் காலம். மார்கழியில்தான் சிறிது ஓய்வு. ஆகையால் இந்த மாதம் ஒரு பெரிய கீர்த்த னத்தை இயற்றி ஒரு வகையாகத் தம்முடைய குருநாத ருடைய விருப்பத்தையும் நிறைவேற்றலாமென்று சர்மா நினைத்தார். கீர்த்தனத்தைப் பூர்த்தி செய்து தைமாதப்

பிறப்பன்று அவரைத் தம் வீட்டுக்கே வருவித்து அரங் கேற்ற வேண்டும் என்று சங்கற்பம் செய்துகொண்டார். தம்முடைய முத்திரையை இன்னபடி வைப்பது என்ற விஷயத்திலும் அவர் ஒரு தீர்மானத்துக்கு வந்தார். வெளி யுலகத்திலே அவர் நல்ல வாய்ப்பாட்டு வித்துவானானாலும், தம்முடைய சொந்த இன்ப அநுபவத்துக்கு அவர் வீணை யைத் துணைக் கருவியாகக் கொண்டிருந்தார். ஓய்ந்த பொழு தில், அதுவும் முக்கியமாக எதாவது புதிய கீர்த்தனத்தைச் செய்து முடித்த சமயத்தில், வீணையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விடுவார். பாட்டு வீணையை நடத்தும்; வீணை பாட்டை நடத்தும். சில சமயங்களில் வீணையைக் கொண்டு பாட்டைத் திருத்திக்கொள்வார். கமகம் வரவேண்டிய இடங்களில் வல்லின ஓசை வந்தால் எடுத்துவிட்டு மெல்லோசையைப் போடுவார். ஒரு பெரிய விஞ்ஞான சாஸ்திரி தன் சோதனைக் கூடத்தில் சோதனை போட்டுப் புதிய புதிய உண்மைகளை வெளியிடுகிறானே, அப்படித்தான் இருக்கும் சர்மாவின் சங்கீத சோதனை. அப்படியென்றால், இலக்கணம் படித்துப் பாட்டுப் பாடுகிற வனுடைய கவிமாதிரி முடைந்த கீற்றாகவல்லவா கீர்த்தனம் இருக்கும் என்று நினைக்கக்கூடாது. அந்தச் சோதனையினால் மூல உருவம் மாறாது. நகாசு வேலை அது; அதிலே இழைத்து மெருகிட்டு வெளியிட்டால் ஜம்மென்று இருக்கும் பாட்டு.

பொங்கற் புது நாளில் புதுக் கீர்த்தனம் அரங்கேற இருந்தது. அப்படியென்றால் சர்மா கீர்த்தனத்தை இயற்றி விட்டாரென்றுதானே அர்த்தம்? மார்கழி மாதம் முதல் வாரத்தில் ஒரு நாளில் இரண்டே மணியில் கீர்த்தனம் பிறந்துவிட்டது. வடிவேற் பெருமானைப் பற்றிய தோத் திரம்; கல்யாணி ராகம்; ஆதிதாளம். அது சர்மாவின் உள்ளத்திலே ஊறி வாக்கில் நனைந்து வீணையில் மெருகு பெற்று வெளிவர வேண்டும். இன்னும் மூன்று வாரங்கள் இருக்கின்றன.

கீர்த்தனம் பலே ஜோராக அமைந்திருந்தது. சர்மா வுக்கே அதில் ஒரு தனியான இன்பம். ஏதோ புதிய ராஜ

யத்தைப் பிடித்துவிட்டவரைப்போல அவர் உள்ளம் கிளர்ந்தெழுந்தது. இந்த வருஷம் பொங்கல் எல்லா விதத்திலும் பொங்கலாக இருக்கப் போகிறது.

தமக்கு மிகவும் அந்தரங்கமான சில நண்பர்களை மாத்திரம் அன்று வீட்டுக்கு வரும்படி அழைத்திருந்தார். தம் குருநாதரையும் அவர் குடும்பத்தினரையும் தம் வீட்டிலே அன்று பொங்கல் கொண்டாட வேண்டுமென்று அழைத்தார். இவ்வளவு பேருக்கும் விருந்திடத் தம்முடைய மனைவிக்குச் சகாயமாக இருப்பதற்காக உள்ளூரிலே இருந்த தம்முடைய தங்கையையும் அவள் புருஷரையும் அழைத்திருந்தார். இப்படியும் அப்படியுமாக ஆண்களும் பெண்களும் சேர்ந்து பத்துப் பன்னிரண்டு பேர்கள் கூடுவார்களென்று தோற்றியது.

பொங்கல் திருநாள்—உத்தராயணத்தில் முதல் நாள்—சூரியன் உதயமானான். சர்மா உதயத்துக்கு முன்பே எழுந்து தம் ஆசிரியர் வீட்டுக்குப் போய் எல்லோரையும் ஒரு வண்டியில் அழைத்து வந்தார். முதல் நாளே சர்மாவின் தங்கை தன் புருஷனுடனும் நான்கு வயதுள்ள தன் ஆண் குழந்தையுடனும் வந்துவிட்டாள். பொங்கல் விருந்துக்குப் பலமாகத்தான் ஏற்பாடு ஆகியிருந்தது.

சாயங்காலம் ஆறு மணிக்குமேல் கீர்த்தனம் அரங்கேற்றுவதாகச் சர்மா சொல்லியிருந்தார். மத்தியான்ன விருந்து ஆயிற்று. "என்ன கீர்த்தனம்? யார் விஷயமாக உள்ளது?" என்று குருமூர்த்தி ஐயர் சர்மாவைக் கேட்டார். "ஆண்டவன் வடிவேலன் விஷயமானதுதான்; கல்யாணி ராகம். மற்ற விஷயங்களைப் பாடும்போது தெரிந்துகொள்ளலாம். இப்போது சொன்னால் ஸ்வாரஸ்யம் குறைந்துவிடும்" என்றார் சர்மா.

இது புதுமாதிரியான பேச்சாக இருந்தது, ஆசிரியருக்கு. "பேஷ்! நீயே விளம்பர வித்தையைக் கற்றுக்கொண்டுவிட்டாயே. அப்படித்தான் இருக்க வேண்டும்" என்றார்.

மாலையில் கூடத்தில் முருகக் கடவுளுடைய படத்துக்கு அலங்காரம் செய்து மாலை போட்டுத் தீபம் ஏற்றி வைத்தார்கள். படத்துக்கு எதிரில் வீணை வைக்கப்பட்டிருந்தது. அதன் மேலே ஒரு சிறிய மல்லிகைச் சரம் போட்டிருந்தார்கள். ஸ்வாமிக்குத் தீபாராதனை செய்யப் போகிறார்கள். அந்தச் சமயத்தில் சர்மாவின் தங்கை குழந்தை, நாலு வயசுள்ள பாலு, "எனக்குப் பூ" என்று கத்திக்கொண்டு ஓடி வந்தவன், அந்த வீணையின் மேலிருந்த சரத்தைக் கண்டதும் வெகு வேகமாகப் போய் இரண்டு கையாலும் அதை இழுத்தான். அவன் இழுத்த மாதிரியில் வீணைத் தந்தியில் விரல் அகப்பட்டுப் படீரென்று தந்தி அறுந்தது. குழந்தை வீலென்று கத்தவே, அதை உடனே எடுத்துக்கொண்டு சர்மா முதுகைத் தட்டிக் கொடுக்கலானார். இந்தக் காட்சி ஒரு நிமிஷத்தில் நிகழ்ந்தது. வீணைத் தந்தி அறுந்தது கண்டு யாவரும் ஸ்தம்பித்தனர். குழந்தையை அடிக்க அதன் தாய் ஓடி வந்தாள்; "போ, பைத்தியம்! குழந்தை என்ன செய்யும்? புதுத் தந்தி போட்டுவிட்டால் போகிறது. அது பழைய தந்தி; நான் முன்பே கவனித்திருக்க வேண்டும்" என்று சொல்லிக் குழந்தையை அவளிடம் விடாமல் வைத்துக் கொண்டார் சர்மா. குழந்தை, பாவம்! ஒன்றுமே தோன்றாமல் வெலவெலத்துப்போய் மாமாவின் தோளோடு தோளாக ஒட்டிக்கொண்டது.

"பீடை! நல்ல சமயத்தில் அபசகுனம் மாதிரி, தந்தியை அறுத்துவிட்டது" என்று தங்கை ஆத்திரத்தோடு கத்தினாள்.

"நல்ல நாளில் குழந்தையை வையாதே. இப்போது என்ன குடிமுழுகிப் போய்விட்டது? புதுமணி ஆறுதான் ஆயிற்று. ஆறு மணிக்கே ராகுகாலம் போய்விடுகிறதென்று பழைய ஞாபகத்தில் ஆரம்பிக்க இருந்தேன். புதுமணிப்படி ஏழு மணி வரையில் ராகுகாலமென்பதை ஸ்வாமியே ஞாபகமூட்டுகிறார். குழந்தை வேறு, தெய்வம் வேறா?

அந்தப் படத்தில் இருக்கும் குழந்தை வடிவேலன்தான். இந்தக் குழந்தை மூலம் வந்து, 'இப்போது ஆரம்பிக்காதே' என்று உத்தரவிடுகிறான்'' என்று நிதானமாகச் சர்மா சமாதானம் சொல்லிக்கொண் டிருந்தார்.

தம்முடைய அமைதியை இழக்காமல் குழந்தையின் பயத்தைப் போக்க அவனைத் தோளில் சாத்தித் தழுவிக் கொண்டபடியே, சாந்தமான வார்த்தைகளால் தம் தங்கை யின் கோபத்தைப் போக்குவதற்காக, மனசுக்குள்ளே கோபத்தை அடைத்து வெளியிட முடியாமல் இருப்பவர் களுக்கும் சமாதானம் உண்டாகும்படியான வார்த்தை களைச் சர்மா சொல்லிவந்தபோது, அவரைக் கண் கொட் டாமல் பார்த்துக்கொண் டிருந்தார் குருமூர்த்தி ஐயர். சிலை யுருவத்தைப்போல உட்கார்ந்திருந்தவர் திடீரென்று எழுந் தார். "ராமபத்திரா! இன்றைக்குத்தான் உன்னுடைய பெருமையைத் தெரிந்துகொண்டேன், அப்பா! நீ ஒரு மகா புருஷன், சாந்த மூர்த்தி'' என்று சொல்லி அவரைப் போய்த் தழுவிக்கொண்டார். ஒரு தாய் நெடுநாள் பிரிந் திருந்த தன் சேயைத் தழுவிக்கொள்வதுபோல இருந்தது அந்தக் காட்சி.

"இந்தச் சமயத்தில் நானாக இருந்தால் குழந்தையை என்ன செய்திருப்பேனோ, தெரியாது. உன் பொறுமையே பொறுமை! உன்னுடைய மனசிலுள்ள கம்பீரம் அளவிடற் கரியது. உன் கீர்த்தனங்களிலே அமையும் அர்த்த கம்பீ ரத்துக்குக் காரணம் இப்போதுதான் எனக்கு விளங்கு கிறது. படிப்பு வரும், புகழ் வரும், குணம் வராது; துக்கமா னாலும் சந்தோஷமானாலும், விருப்பானாலும் வெறுப்பா னாலும், நிச்சலனமாக இருக்கும் நிலை ஜீவன்முக்தனுக்குத் தான் வரும்.''

அவர் உட்கார்ந்துகொண்டார். சர்மாவும் குழந் தையை மடிமேல் வைத்துக்கொண்டு உட்கார்ந்தார்.

"உன் பெருமை மற்றவர்களுக்குத் தெரிவதைக் காட்டிலும் எனக்குத்தான் நன்றாகத் தெரியும். காரணம்:

இதே மாதிரி சந்தர்ப்பத்தில் நான் செய்ததை நீ கேட்டால் தெரியவரும். ஒரு நாள் என்னிடமிருந்த வீணையின் பிருடையை, ராகவன் - அப்போது குழந்தை - தொட்டுப் பார்த்துக்கொண்டிருந்தான். மத்தியான்னத் தூக்கம் போட்டுவிட்டு மாடியிலிருந்து இறங்கி உள்ளே நுழைந்தேன். அவனைப் பார்த்தேன். பிருடையை முறுக்கி ஒடித்துவிடுவானென்று எண்ணினேன். ஒன்றும் மேலே யோசிக்கவில்லை. கையிலிருந்த சாவிக் கொத்தை ஆத்திரத்தோடு வீசியெறிந்தேன். அது இரும்பல்லவா? அவன் தலையில் நன்றாகத் தாக்கிக் குபுகுபுவென்று ரத்தம் வந்துவிட்டது. அப்புறம் சீப்பிடித்துக்கொண்டு காயம் ஆற மூன்று மாத காலம் ஆயிற்று. இப்போதும் அவன் தலையில் தழும்பு இருக்கிறது. அவன் தலையில் மட்டும் அல்ல; என் மனசிலும் இருக்கிறது. இன்று உன் பொறுமையைப் பார்க்கும்போது என் அங்கமெல்லாம் சுருங்கி நாணுகிறேன். நீ என்னைவிட ஆயிரம் மடங்கு பெரியவன் எல்லாவற்றிலும்."

"ஏது, இன்று கணக்குக்கு மீறி ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பித்துவிட்டீர்களே! உங்கள் குழந்தை நான். உங்கள் குழந்தையை நீங்களே புகழ்ந்தால் உலகத்தார் நகைக்கமாட்டார்களா?"

## 3

ஒரு விதமாக அந்தக் கலவரம் அடங்கியது. ஏழரை மணிக்குக் கீர்த்தனத்தை அரங்கேற்றுவது என்று சொல்லி வீணைக்குப் புதுத் தந்தி போட்டார் சர்மா. ஏழரை மணி வர எவ்வளவு நேரம் ஆகப்போகிறது? முருகனுக்கு நமஸ்காரம் செய்து தம் குருநாதர் பாதத்தில் விழுந்து எழுந்து வீணையை எடுத்துவைத்து உட்கார்ந்தார் அந்தச் சாகித்திய வித்துவான்.

கல்யாணி ராக ஆலாபனம் ஐந்து நிமிஷம் ஆயிற்று. பல்லவியை ஆரம்பித்தார். ஆரம்பிக்கும்போதே குருமூர்த்தி ஐயருக்கு மயிர்க்குச்செறிந்தது. அநுபல்லவி,

சரணங்களைப் பாடினார்; பதங்களை இழைத்தார்; அர்த்த பாவமும், ராக சஞ்சாரமும் ஒன்றோடொன்று போட்டி யிட்டு உள்ளத்தைக் கவர்ந்தன. ராகத்தின் ஆரோகணமும் அவரோகணமும் அருமையாகவும் அழகாகவும் இருந்தன. குருமூர்த்தி ஐயரின் சந்தோஷம் மாத்திரம், உணர்ச்சி மட்டும், ஆரோகணகதியிலே சென்றன.

"முத்திரை வைத்திருக்கிறேன்" என்று சர்மா முன்பே சொல்லியிருந்தார். அதைக் காதுகுளிரக் கேட்க வேண்டுமென்று ஆவலோடு காத்திருந்தார் குருமூர்த்தி ஐயர். கடைசிச் சரணத்தில் அந்த முத்திரை வரப்போகி றது, வரப்போகிறது, ராமபத்திரனென்னும் பெயர் கீர்த்த னத்துக்குத் திலகமாக அமையப் போகிறது என்று தம் கற்பனையை விரித்து வைத்திருந்தார். இரண்டு சரணங்கள் முடிந்தன. கடைசிச் சரணம் தொடங்கியாயிற்று. 'முத் திரை எங்கே? முத்திரை எங்கே?' என்று அவர் உள்ளம் தேடியது; காது கூர்மையாக இருந்தது.

"முச்சகம் புகழ்குரு மூர்த்தி தாசன்!"

என்ற அடி அவர் காதில் விழுந்தது. 'முத்திரையா அது? இதில் ராமபத்திரன் தன் பெயரை வைக்கவில்லையே! நம்மை யல்லவா வைத்திருக்கிறான்? நம்முடைய தாசனும்! யார் தாசன்? யார் குரு?' என்ற எண்ணங்கள் அவர் உள்ளத்தே எழுந்தன.

"ராமபத்திரா!" மேலே ஓடவில்லை வாக்கு. அவர் கண்கள் பேசின பாஷையைச் சிஷ்யர் உணர்ந்துகொண் டார்.

"அப்படித்தான் இருக்கவேண்டும். அதுதான் முத்திரை!"

அறுந்த தந்தியில் சர்மாவின் பொறுமையையும், முடிந்த கீர்த்தனத்தில் அவர் விநயத்தையும் உணர்ந்து கொண்ட குருநாதரின் உள்ளத்தில் பொங்கின உணர்ச் சிக் கடல் அவரை மௌனத்தில் ஆழ்த்திவிட்டது.

# ஆறாத புண்

## 1

"ஐயோ! ஐயோ!" என்று அலறிக்கொண்டு வந்தான் அவன். கையில் எடுத்து வந்த குழந்தை வீல் வீலென்று கத்திக்கொண்டிருந்தது. அதன் கால் புண்ணிலிருந்து ரத்தம் பெருகி வந்தது. நான் அந்தக் காட்சியைப் பார்த்தேன். எனக்கு ஒன்றும் விளங்கவில்லை.

"ஏண்டா இப்படிக் கத்துகிறாய்? இந்தக் குழந்தையின் தாய் எங்கே?" என்று கேட்டேன்.

தினந்தோறும் அவள்தான் குழந்தையைத் தூக்கிக் கொண்டு நான் வைத்திருந்த தர்ம ஆஸ்பத்திரிக்கு வருவாள். அந்தக் குழந்தைக்குக் காலில் கரப்பான் ஏற்பட்டு ரணமாகப் போய்ப் பிறகு மருந்து போட்டதில் கொஞ்சம் கொஞ்சமாக ஆறிவந்தது. அதனுடைய தாய் எத்தனையோ வாஞ்சையோடும் சிரத்தையோடும் குழந்தைக்கு மருந்து வாங்கிக் கட்டிவந்தாள்.

முதல் நாள் அந்தக் குழந்தையை அவள் எடுத்துக் கொண்டு வந்தபோது கூட்டமாக இருந்தது. முதலில் நான் கவனிக்கவில்லை. வற்றிய உடம்பும் அழுக்குத் துணியும் உடைய அவள் கையில் நல்ல களை பொருந்திய முகத்தோடு குழந்தை இருந்தது. அவள் பரிதாபத்தை உண்டாக்கும் பார்வையோடு என்னுடைய தயையை எதிர்பார்த்து நின்றாள்.

தர்ம ஆஸ்பத்திரி என்று போட்டிருந்தேன் என்பது வாஸ்தவந்தான். ஆனாலும் அது வெறும் விளம்பரத்துக்காகச் செய்த வேலை. தர்மமாவது! தயையாவது! அவனவன் பிழைப்புக்கே பிறருடைய தர்மத்தை எதிர்

பார்க்க வேண்டிய இந்த நாட்டில், தர்மம் பணக்காரர்கள் இஷ்டப்பட்டால் செய்யலாம். இதுதான் என் அபிப்பிராயம்.

எனக்குப் பொதுஜனங்களுடைய ஆதரவு மிகவும் வேண்டும்; வருமான வரிக்காரனை ஏமாற்றவேண்டும்; முடிந்தால் கார்ப்பொரேஷன் அங்கத்தினர் பதவி கிடைக்க வேண்டும். இந்த ஆசைகள் நிறைவேறுவதற்கு முதல்படி என் வீட்டு வாசலில் தொங்கும், "தர்ம ஆஸ்பத்திரி" என்ற பலகைதான்.

என்னுடைய தர்மவிவகாரம் இந்த மட்டில் இருக்கும் போது அந்த ஏழை மாது குழந்தையுடன் ஒரு மூலையில் நின்றதை நான் வலியச் சென்று கவனிக்க முடியுமா? வந்திருந்த பேர்களில் பலர் தர்மத்துக்கு மருந்து கொடுக்கும் நேரத்தில் வந்தாலும் என் உத்தரவுக்குப் பணிந்து தனியே வந்து பார்த்து என் வாடிக்கைக்காரர்களாகத் தயாராக இருந்தார்கள். கழுகுக்கு மூக்கிலே வேர்க்கும் என்பார்கள். எனக்கு இன்ன ஆசாமியைத் தர்மத்திலிருந்து, 'அதர்ம'த்துக்கு மாற்றிக்கொள்ளலாம் என்பது நன்றாகத் தெரியும். அவர்கள் பேசும் தோரணையிலேயே கௌரவத்துக்கு ஆசைப்பட்டவர்கள் என்று நான் அறிந்துகொள்வேன். "உங்கள் வீடு எந்தத் தெருவில் இருக்கிறது?" என்று என் வாயிலிருந்து ஒரு கேள்வி பிறந்தால் போதும். அவர்களுக்கு உச்சி குளிர்ந்துவிடும். "எங்கள் வீட்டுக்கு வருகிறீர்களா, டாக்டர்?" என்று அவர்கள் கெஞ்சிக் கேட்கும்போது, "பார்க்கலாம்" என்ற ராஜரீகமான பதிலைச் சொல்லி என் அருமையைப் புலப்படுத்துவேன்.

இந்திய வைத்தியம் படித்த எனக்குச் சுகபோக வாழ்க்கை நடத்துவதற்கு ஏற்ற சம்பாத்தியம் வேண்டுமே! சரக்கு முடுக்கா? இல்லை. செட்டியார் முடுக்குத்தான் சரக்கு முடுக்காகப் பரிணமிக்கிறது. இதை நான் என் அநுபவத்தில் தெரிந்துகொண்டேன்.

ஒரு விதமாக என் தூண்டிலில் அகப்படுவோர்களைக் கவனித்த பிறகு 'ஏழைகள்' என்ற பட்டத்துக்கு உரிய மகாஜனங்களின் மேல் என் கண்பார்வையைத் திருப்பினேன். முதலில் அந்தக் குழந்தையைத்தான் பார்த்தேன். அதன் தாய் முகத்தைக் கழுவிக்கொண்டு குங்குமப் பொட்டு வைத்திருந்தாள். குழந்தையின் முகத்தையும் நன்றாகத் துடைத்து மெல்லியதாகத் திருநீறு இட்டிருந்தாள். கால் பக்கத்தை அழுக்குத் துணியால் போர்த்திருந்தாள்.

குழந்தையின் முகத்தில் ஒரு விதமான களை இருந்தது. "குழந்தைக்கு என்ன உடம்பு?" என்று கேட்டுக்கொண்டே அவளை அணுகினேன். "சாமி, காலெல்லாம் ஒரே புண் ஐயா" என்று சொல்ல ஆரம்பித்தபோதே அவளுக்கு அழுகை பொத்துக்கொண்டு வந்தது. துணியைப் பிரித்துக் காட்டினாள். இரண்டு கால்களும் மிதமிஞ்சிய கரப்பானால் புண்பட்டு ரத்தம் கசிந்துகொண் டிருந்தது.

"சாமி, எங்கள் கண்ணுக்கு மருந்து போட்டுச் சொஸ்தப்படுத்த வேணும் சாமி; கடவுள் உங்களுக்கு நல்ல சுகத்தைக் கொடுப்பார்" என்று அவள் சொன்னாள்.

'கடவுளா! இவள் யாரையா நம்மை ஆசீர்வாதம் செய்பவள்! நமக்குச் சுகம் கொடுக்கக் கடவுளுக்கு என்ன அதிகாரம்? நாலு பணக்காரர் வீட்டுக்குப் போய் வந்தால் அவர்கள் வீட்டுக்கு வரும் நோய் மூலமாக நமக்குச் சுகம் வரும். கடவுளுக்கு என்ன வியாதி வரப்போகிறது? அவர் நம்முடைய உதவியைத் தேடப்போகிறாரா, என்ன?' என்ற பைத்தியக்காரக் கேள்விகளை என் நெஞ்சம் கேட்டது. தர்மம், கடவுள் என்ற விஷயங்கள் உலக வாழ்வுக்குப் பயன் பட்டால்தான் என் மதிப்பைப் பெற முடியும். தர்மம் என்ற வார்த்தை எனக்குப் பயன்படுவதை நான் அநுபவத்தில் உணர்ந்தேன். இன்னும் கடவுளைப்பற்றி என் தொழில் மூலமாக உணர்ந்துகொள்ள முடியவில்லை. 'முருகன் தாதுபுஷ்டி லேகியம்', 'விசுவநாதர் பல்பொடி' என்று

கடவுளின் பெயரை விளம்பரக் கருவியாக வைத்துக் கொண்டு வியாபாரம் செய்தால் அந்த அநுபவம் கிடைக்க லாம். கைகால் கெட்டியாக இருக்கும் வரையில் அந்த வியாபாரத்துக்கு நான் போகவேண்டாம். உட்கார்ந்த இடத்திலிருந்து சம்பாதிக்க வேண்டும் என்ற உணர்ச்சி வரும்போது கடவுளையும் ஒரு கை பார்த்து விடலாமென் பதே என் வாழ்க்கைத் திட்டம்.

'நமக்குத் தெரியாத கடவுளை, இவள் தனக்கு உப யோகமான கருவியாக்கிக்கொண் டிருக்கிறாளே; இவள் யார்?'

அவளைக் கேட்டேன்; பிறகுதான் தெரிந்தது உண்மை. தினந்தோறும் கடவுளின் பெயரையும் தர்மத்தின் நாமத்தையும் சொல்லி அந்த இரண்டுக்கும் அடிமைப்பட்ட உள்ளங்களைத் தட்டிக் கனியவைக்கும் தொழிலை உடைய வள் அவள். அவள் புருஷனுங்கூடத்தான். "ஐயா! கால ணாப் போடு சாமி! தர்மவான்களே! புண்ணியவான்களே! கடவுள் உங்களுக்கு அமோகமான லாபத்தைத் தருவார்!" என்று பஸ் நிறுத்தத்திலும் முச்சந்தி நாற்சந்திகளிலும் நின்று கரகரத்த தொண்டையிலிருந்து ஆசீர்வாதத்தைப் பொதுமக்களிடம் வலியப் பொங்கிய கருணையினால் பொழிந்துகொண்டு நிற்கிறார்களே, அந்தத் திருக்கூட்டத் தைச் சேர்ந்தவர்கள் அவர்கள். - ஆம். பிச்சைக்காரர்கள்!

'கடவுள் காப்பாற்றுவார்!' என்று சொல்லிச் சொல்லிப் பிச்சைத் தொழில் நடத்தும் அவள், 'கடவுள் உங்களுக்கு நல்ல சுகத்தைக் கொடுப்பார்' என்ற வாழ்த் தைப் புதிதாகக் கற்றுக்கொண்டு வரவேண்டுமா? அவள் வாயைத் திறந்தால் போதும், அவள் மூச்சு விடுவது போலவே இயற்கையாக, 'சாமீ புண்ணியவானே! கால ணாத் தர்மம் செய்யுங்கோ சாமீ; கடவுள் காப்பாற்றுவார்' என்ற சூத்திரமும் தானே நழுவி வந்துவிடுமே.

"நான் ஒரு பிச்சைக்காரி சாமீ; என்னிடம் காசு கிடையாது. அதோ அந்த அன்னதான சமாஜத்து

வாசலிலே குழாயடிக்குப் பக்கத்தில் மோட்டார் ஷெட்டுக் கூரை நிழலில் வாழ்கிறவள். என் புருசனும் நானும் இந்தக் குழந்தையும் பிச்சைத் தொழிலாலேயே பிழைத்து வருகிறோம்.''

நான் கேட்ட கேள்வி ஒன்றுதான். மேலே பல கேள்விகளுக்கு இடம் வைத்துக்கொள்ளாமல் எல்லா விஷயங்களையும் சாங்கோபாங்கமாக அவளாகவே சொல்லிவிட்டாள். முடிவில், "ஐயா, தர்மதுரையே, இந்தக் குழந்தைக்கு மருந்து போடுங்கோ சாமீ; கடவுள் . . . .'' வாக்கியத்தை முடிக்கவில்லை. கண்ணீர் அணை போட்டு விட்டது.

உண்மையைச் சொல்லுகிறேன். அவளுக்கு முன்னாலே நான் தர்மத்தை விளம்பரப்படுத்தும் டாக்டராக இருக்கவில்லை. அவளை முதலிலே கண்டபோதும், அவள் பிச்சைக்காரி என்பதைக் கேட்டபோதும் என் உள்ளத்தில் உண்டான பரிகாச உணர்ச்சி இப்போது மறைந்து விட்டது. 'இவள் கடவுள் பெயரையும் தர்மத்தின் பெயரையும் சொல்லிப் பிழைக்கிறாள் என்கிறோமே! நாம் என்ன வாழ்ந்தோம்! அதோ வெளியில் சுவரில் மாட்டி யிருக்கும் இரும்புத் தகட்டில் கறுப்பு வர்ணத்துக்கு இடையே வெள்ளை எழுத்தில் எழுதியிருக்கும் தர்ம ஆஸ்பத்திரி என்பதே என் உள்ளத்தின் இருட்டையும் அதன் மேலே எழுந்த போலித் தர்ம நினைவையும் வெளிப் படுத்தவில்லையா? தர்மத்தின் பெயரை நிரந்தரமாக நம் வாசலில் தொங்கும்படி ஆணி அடித்து மாட்டியிருக்கி றோம். இவள் அடிவயிற்றிலிருந்து வரும் குரலில் பாவத் துடன் சொல்லுகிறாள். இதுதானே வித்தியாசம்!'

என் உள்ளம் இதுகாறும் உணராத ஒன்றை உணரத் தொடங்கிவிட்டதா, என்ன?

'இந்தக் குழந்தைக்கு வைத்தியம் செய்யப்போனால்.. நாம் மருந்து கொடுக்கிறோம். பத்தியமான உணவு வேண்டுமானால், அதற்கு இவள் எங்கே போவாள்?'- அன்

ருடைய உலகவாழ்க்கையில் எனக்கு வேண்டிய சௌகரியங்கள் இன்ன என்று சிந்தித்துப் பழகிய மனத்துக்குப் பிறருடைய சௌகரியத்தையும் நினைத்துப்பார்க்க முடிந்தது.

"எவ்வளவு நாளாக இப்படி இருக்கிறது?" இந்தக் கேள்வி ஐந்து நிமிஷ மௌனத்துக்குப் பிறகு என் வாயிலிருந்து வந்தது.

"நாலு மாசமாய் இருக்குது சாமி!"

"முன்னாலே வருவதுதானே?"

வராததற்குக் காரணத்தை அவள் சொல்லவில்லை. "இப்போதுதான் வர முடிந்தது சாமீ! குழந்தைக்கு மருந்து கொடுங்கள்" என்று சொன்னாள்.

அவள் குரலில் என்ன இருந்தது என்று எனக்குச் சொல்லத் தோன்றவில்லை. அது என் உள்ளத்தைத் தொட்டது. என் உள்ளத்தில் உண்டாகாத தர்ம உணர்ச்சியை உண்டாக்கியது. நான் வைத்தியம் செய்யச் சங்கற்பித்துக்கொண்டேன். அப்போது எனக்கு உண்டான இன்பத்தைச் சொல்ல முடியாது. அதுவரையில் நான் உலகை ஏமாற்றி வந்தேன். தர்மத்தைப் பணயமாக வைத்துச் சூதாடினேன். அன்று விழித்துக்கொண்டேன். தர்மத்தின் புனிதமான பெயரைக் கெடுத்ததற்குப் பிராயச்சித்தம் செய்யத் துணிந்துவிட்டேன். கடவுள் என்று கண்ணுக்குக் காணாத சக்தி ஒன்று உண்டு என்பதையும் கொஞ்சம் கொஞ்சமாக உணரத் தொடங்கினேன்.

அன்று முதல் அவள் தினந்தோறும் தவறாமல் ஆஸ்பத்திரிக்குக் காலையில் வருவாள். நான் குழந்தைக்கு மருந்து போடுவேன். 'தர்ம ஆஸ்பத்திரி' என்ற என்னுடைய விளம்பரத்தைக் காட்டிலும் அந்தக் குழந்தைதான் எனக்குப் புகழை அதிகமாக வருவித்துக் கொடுத்தது என்று சொல்லலாம். நான் அதிக சிரத்தையோடு அந்தக் குழந்தையைக் கவனிப்பதையும், அது பிச்சைக்காரியின் குழந்தை என்பதையும் உணர்ந்த உலகம் மிகவும்

சுலபமாக என்னைப் பெரியவனாக்கிவிட்டது; மகாத்மா வாகச் செய்யத் தயாராக இருந்தது. அதைக் கண்டு நான் பிரமிக்கவில்லை.

"சாமீ, இன்றைக்குக் குழந்தை நன்றாகத் தூங்கியது" என்று அந்தப் பிச்சைக்கார மாது சொன்னால், அதுதான் என் சந்தோஷத்துக்குக் காரணமாகும்.

"சாமி, கடவுள்தான் உங்களை எங்களுக்குத் துணையாக வைத்திருக்கிறார். பிச்சைக்காரர்களுக்கு யார் சாமி, உதவி செய்கிறார்கள்? உங்கள் குஞ்சு குழந்தைகளெல்லாம் சுகமாக இருக்க வேணும்!" என்று அவள் உள்ளத்தின் ஆழத்திலிருந்து புறப்படும் நன்றியுரைகளை நான் எந்தத் தராசில் நிறுத்துப் பார்ப்பேன்! அந்த வார்த்தைகள் குளிர்ச்சியாக என் காதில் விழும்போது எனக்கு உண்டாகும் இன்பத்துக்குக் காரணம் என்ன? அவள் முகஸ்துதி செய்கிறாளா? அதைக் கேட்டு நான் வீண்பெருமை அடைகிறேனா? இல்லை, இல்லை. நான் செய்ய வேண்டிய ஒன்றைச் செய்யாமல் இருந்தேன்; அவள் அதைச் செய்யும்படியான நிலைக்கு என்னைக் கொணர்ந்தாள்; எனக்கு உபதேசித்தாள்; எனக்கு வழி காட்டினாள். தர்மம் என் தலைவாசலில் நின்று என்னைத் தட்டி எழுப்பி, "தகரத் தகட்டில் என் பிணத்தை மாட்டியிருக்கிறாயே! இதோ பார்; உருவங்கொண்டு நிற்கிறேன். என்னை ஏற்றுக்கொள்" என்று எச்சரித்தது. நான் அதை வணங்கினேன்; ஏற்றுக் கொண்டேன். ஏற்றுக்கொண்டதனால் எனக்குப் பெருமிதமும் ஆனந்தமும் உண்டாயின. வேள்வி செய்யும் முனிவனைப்போல, தவம்புரியும் தபஸ்வியைப்போல, விரதம் நோற்கும் பதிவிரதையைப் போல - பிச்சைக்காரியின் குழந்தைக்கு வைத்தியம் செய்துவந்தேன். ரணமும் ஆறி வந்தது: முக்கால்வாசி ஆறிவிட்டதென்றே சொல்லலாம்.

## 2

அவனை அதுவரையில் நான் பார்த்ததில்லை. அவனுடைய தொழிலிலும் வாழ்க்கையிலும் கூட்டாளியாகிய அவ

ளைத்தான் பார்த்திருக்கிறேன்; பார்த்திருப்பது மட்டுமா? அவள் உருவந்தான் என் உள்ளத்தில் பதிந்திருக்கிறதே!

அவன் அழுது கத்தின கத்தலைப் பார்த்தபோது எனக்கு வேறு சந்தேகம் வந்துவிட்டது. 'குழந்தையின் தாய் ஏன் வரவில்லை? வரமுடியாத நிலையில் அவள் இருக்கிறாளோ! அல்லது...... அட சே! இதென்ன பேதைமை! என் கண்ணில் ஏன் ஐயா ஜலம் வருகிறது? என்னையும் ஏமாற்றி என் உள்ளம் உருகுகிறதே! உள்ளம் உருகுகிறவர்கள் பாக்கியவான்கள் என்று படித்திருக்கிறோமே; நாம் பாக்கியவான்களின் கூட்டத்தில் சேர்ந்துவிட்டோமா என்ன! அவள் வராததற்குக் காரணம் என்ன? அவள் உலக வாழ்க்கையை விட்டு...' இந்த எண்ணந்தான் என் அடிவயிற்றைக் கலக்கியது. கண்ணைக் கலக்கி நீர் கசியச் செய்தது. "கடவுளே! அப்படி நேரவேண்டாம்! நேரக் கூடாது!" என்று பிரார்த்தித்தேன்.

ஆச்சரியம்! கடவுளையாவது, நானாவது, பிரார்த்திப்பதாவது! இதென்ன இந்திர ஜாலம்! கடவுளைப்பற்றி அவளல்லவா ஒவ்வொரு நாளும் சொல்லுவாள்? இன்று அவள் வரவில்லை; நான் சொல்லுகிறேன், அவள் எனக்காகக் கடவுளைப் பிரார்த்திப்பாள். இன்றோ நான் அவளுக்காகக் கடவுளைப் பிரார்த்திக்கிறேன்! இது வரையில் என் காது வழியாக நுழைந்துகொண்டிருந்த கடவுள் இன்று நேரடியாக என் உள்ளத்துள்ளே புகுந்துவிட்டாரே? அட, கடவுளே! தர்மமே! பிச்சைக்காரப் பெருமாட்டியே!

"அவள் சௌக்கியமா, அப்பா?" என்று கேட்டேன்.

"அவள் மூர்ச்சை போட்டு விழுந்து கிடக்கிறாள் சாமி; நான் இந்தக் குழந்தையைத் தூக்கிக்கொண்டு வந்தேன். பாவி! எல்லாம் என்னாலே வந்த வினை."

"ஹா! மூர்ச்சையா! எங்கே? எப்படி? ஏன்? வா, போகலாம்."

அவ்வளவு வேகம் எனக்கு எப்படி வந்ததோ தெரிய வில்லை. குழந்தை கதறுகிறது. அதன் காலில் ரத்தம் கசிகிறது. அவன் அழுகிறான். இவ்வளவையும் மறந்துவிட்டு நான் என் கண்முன் இராத பிச்சைக்காரியைத் தேடிப் புறப்பட்டேன்.

அவள் கீழே விழுந்து கிடந்தாள். அவன் அவள் முகத்தில் தண்ணீரைத் தெளித்து மெல்ல அழைத்துக் கொண்டு என் பின்னே வந்தான். 'தர்ம ஆஸ்பத்திரி'யில் கொண்டு வந்து அவளை உட்கார வைத்தான்.

"சாமீ, குழந்தைக்கு மருந்து போடுங்கோ. இதை ஒன்றும் சொல்லாதேயுங்கோ. கடவுள் சோதனை செய்கிறார்" என்று அவள் மெல்லிய குரலில் முறையிட்டாள்.

பிறகுதான் எனக்குக் குழந்தையின் ஞாபகம் வந்தது. அதன் காலைக் கவனித்தேன். ஆறிவந்த புண்ணின் மேல் ஆழமான கீறல் காயம்; அதிலிருந்து கசியும் ரத்தம்! குழந்தை துடிதுடித்து அழுது அழுது ஓய்ந்துவிட்டது. நான் அவசர அவசரமாகப் புண்ணை அலம்பி மருந்து வைத்துக் கட்டினேன்.

கட்டும்போதே, "இந்தக் கீறல் எப்படி வந்தது?" என்று கேட்டேன். பதில் இல்லை. அவன் விம்மி விம்மி அழுதான்.

"இவள் ஏன் மூர்ச்சை போட்டு விழுந்தாள்?" அதற்கும் பதில் இல்லை. அழுகை அதிகமாயிற்று.

"எதற்காக இவன் இப்படி அழுகிறான்?" என்று அவளைக் கேட்டேன்.

"அது, பைத்தியம், அளுவுது" என்று புரியாத புதிரைப் போட்டாள்.

"என்ன சமாசாரம்?"

"அதையே கேளுங்கோ" என்றாள்.

இதற்குள் குழந்தைக்குக் கட்டுக் கட்டி முடித்தேன். அவள் குழந்தையை வாங்கி மடிமேல் வளர்த்தித் தட்டினாள். அவன் தன் கைகளால் முகத்தை மூடித் தேம்பித் தேம்பி அயர்ந்து போய் உட்கார்ந்திருந்தான்.

"என்ன, இப்படிப் பெண்பிள்ளை மாதிரி அழுகிறாயே, ஏன் அழுகிறாய்? என்ன காரியம் செய்தாய்?" என்று கேட்டேன்.

அழுது ஓய்ந்து போய்ப் பிரம்மஹத்தி பிடித்தவன் மாதிரி அவன் உட்கார்ந்திருந்தான். என் கேள்விக்கு இனியும் பதில் சொல்லாமல் இருப்பது சரியல்ல என்று அவன் நினைத்திருக்கவேண்டும். தலையை நிமிர்த்திச் சொல்லத் தொடங்கினான்:

"சாமி, எல்லாம் பாவி நான் செய்த காரியம். இந்தக் குழந்தையைக் கொன்று போட்டுவிடக்கூடத் துணியும் பாதகன் நான். எங்கள் வாழ்வுக்கு விளக்காக இருந்த இந்தக் குழந்தை சிரிப்பதைப் பார்த்துப் பூரித்தாள் இவள். இது அழுவதைப் பார்த்துச் சந்தோஷப்பட்டேன் நான். இந்தக் குழந்தைக்குக் காலிலே புண் வந்தபோதே இவள் சொன்னாள். தர்மதுரை, நீங்கள் தர்மத்துக்கு வைத்தியம் செய்வதாகச் சொன்னாள். உடனே கொண்டு போய்க் காட்ட வேண்டும் என்றாள். நாலு மாசமாகக் கெஞ்சினாள். நான் இடம் கொடுக்கவில்லை."

"ஏன்? இது உன் குழந்தைதானே? இவள் உன் சொந்தப் பெண்டாட்டிதானே?" என்றேன்.

அதைக் கேட்டவுடன் உசுப்பிவிட்ட பெண் புலி போல அவள் பேசினாள்: "என்ன சாமி, அப்படிக் கேக்குறீங்கோ! தெய்வம் சோதனை செய்யுது. பிச்சைக்காரப் பிழைப்பு நடத்துகிறோம்."

அவள் பெண்மையில் பிச்சைக்காரத்தனம் இல்லை; சுதந்தர வீரம் அதில் தொனித்தது. மகாராணியின் பெண்மைக்கு எத்தனை உயர்வு உண்டோ, அத்தனை உயர்வு

அந்தப் பிச்சைக்காரியின் பெண்மையிலேயும் இருக்கிற தென்பதை நான் உணர்ந்தேன். 'ஐயோ, நாம் புண்ணில் கோலை இட்டோமே!' என்று வருந்தினேன்.

"சாமி, என் பெண்டாட்டி, என் குழந்தை என்று சொல்ல எனக்கு வாய் இல்லை. நான் அப்படித்தான் இருக்கிறேன். இல்லாவிட்டால் இப்படியெல்லாம் பேய் விளையாட்டு நடத்துவேனா?"

"சமாசாரத்தைச் சொல் அப்பா" என்று அவனை முடுக்கினேன்.

"நான் என்னத்தைச் சொல்வது? என்னுடைய பிச்சைக்காரத் தொழிலில் இந்தக் குழந்தையையும் கூட்டாளியாக்கிக்கொண்டேன்."

அவன் மேலே கதையைச் சொன்னான். குழந்தையைக் கூட்டாளியாக்குவதாவது! அது வாய்திறந்து பேசுமா? பிச்சை கேட்குமா? அதன் கால் புண்ணைக் காட்டி மனிதர்களின் மனத்தில் இரக்கத்தைச் சுரக்கச்செய்தான் அவன். அவனுடைய வியாபாரத்துக்குக் குழந்தை பெரிதாகத் தோற்றவில்லை; அதன் கால் புண்தான் அவசியமாக இருந்தது. அவனுக்கு லாபம் சம்பாதித்துத் தரும் முதல் அது. "சாமி, மருந்து வாங்கப் பணம் இல்லை; இந்த ஏழை முகம் பாருங்க! ஐயா, தர்மவான்களே! புண்ணியவான்களே! காலணாப் போடுங்க மகராஜர்களே! உங்களுக்குக் கடவுள் கிருபை பண்ணுவார்" என்று விளம்பரம் செய்ய அது உதவியது. அவனுடைய தொழில் முறையில் அவன் எண்ணம் பலித்தது. அதாவது: தன் அபிநயங்களையும் குரலையும் கொண்டு சம்பாதிப்பதைக் காட்டிலும், தன் மடியில் குழந்தையைக் கிடத்தி அதைக் காட்டிக் காட்டிப் பிச்சை கேட்பதில் அதிக லாபம் இருக்கிறது என்ற தத்துவத்தை அவன் அநுபவத்தில் தெரிந்து கொண்டான். "ஆகட்டும், ஆகட்டும்" என்று ஆஸ்பத்திரிக்குப் போகாமல் காலம் கடத்தியதற்கு அந்த ஆண் உள்ளத்தில் தலைதூக்கி நின்ற தொழிலாசைதான் காரணம்.

பெண் உள்ளம், அதிலும் தாய் உள்ளம், இதை எவ்வளவு நாள் சகித்துக்கொள்ளும்? அவள் தாய்மை ஆவேச வெறி கொண்டது. அதுதான் ஜயித்தது. குழந்தையை என்னிடம் கொண்டு வந்து காட்டினாள். புண்ணும் ஆறி வந்தது.

புண் ஆறுவதைக் கண்டு அவள் உள்ளமும் ஆறுதல் அடைந்தது. ஏழைமையின் இரும்புப் பிடிக்குள் மனித உணர்ச்சியே தடைப்பட்டு மரத்துப்போயிருந்த பிச்சைக்காரன் உள்ளத்தில் புதிய புண் கிளம்பியிருந்தது. புண் ஆற ஆற, தன் வியாபாரம் படுத்துப்போகுமே என்று அவன் கவலைப்பட்டான். குழந்தையின் சிரிப்பை அவன் விரும்பவில்லை. அதைக் கதறச் செய்து மனிதர்களைத் தர்மவான்களாக்கவே அவன் எண்ணினான்.

அவன் உள்ளத்துள்ளே பெரிய போராட்டம் நிகழ்ந்து கொண்டே இருந்தது. குழந்தையைத் தன் அன்புருவாகக் காணும்போது புண் ஆறவேண்டும் என்று தான் அவனும் நினைத்தான். தன் வறுமையை விளம்பரப்படுத்தும் பலகையாக எண்ணியபோது அது ஆறக்கூடாது என்ற எண்ணம் தலை தூக்கியது. இரண்டுக்கும் போராட்டம். அன்பின் பக்கத்திலே குழந்தையின் தாய் பலமாக இருந்தாள். தொழிலின் சார்பில் வயிற்றுப் பசியும் வறுமையும் படைத்துணையாக இருந்தன. போராட்டத்தில் வறுமை வென்றது. "இந்தப் புண் ஆறக்கூடாது; ஆறினாலும் மீட்டும் புண் உண்டாக வேண்டும்."—இந்த ராக்ஷஸ எண்ணம் அவன் மனத்தைப் பிடித்து உலுக்கியது; தன் வசமாக்கிவிட்டது. அதன் பயன்தான் அன்று காலையில் ஒரு தகரத்தை எடுத்து ஆறிவந்த காலில் அழுந்தக் கீறிவிட்டான், மகாபாவி!

"சாமி, எனக்கு என்ன தண்டனை வேண்டுமானாலும் விதியுங்கள்; ஏற்றுக்கொள்கிறேன். சாட்டையை எடுத்து ரத்தவளாராக அடியுங்கள். பொறுத்துக்கொள்கிறேன். என் உடம்பின்மேல் ரத்தம் பீரிடும்போது அதைப்

பார்த்து நான் ஆறுதல் அடைகிறேன். இந்தக் குழந்தைக்கு உயிர் கொடுங்கள். காயம் ஆறுமா, சாமி?" என்று அழுதான்.

"பயப்படாதே; ஆறிவிடும். ஆனால் கொஞ்ச நாள் ஆகும்."

"எவ்வளவு நாள் ஆனாலும் ஆகட்டும். இனி நீங்கள் தான் காப்பாற்ற வேண்டும். இவளுக்கு நான் மிகவும் துக்கத்தைக் கொடுத்துவிட்டேன். குழந்தை காலில் நான் கீறினதைப் பார்த்து மூர்ச்சை போட்டு இவள் விழுந்து விட்டாள். முதலில் நான் இவள் காலில் விழவேண்டும். இதோ உங்கள் முன்பாகவே—ஆம், நீங்கள்தாம் தெய்வம்—தெய்வ சாக்ஷியாக நான் இவள் காலில் விழுகிறேன். என்னை இவள் முதலில் மன்னிக்கட்டும், நீங்களும் மன்னித்துவிடுங்கள். நான் பாவி! மகா பாவி!" என்று அவள் காலில் விழுந்தான்.

அவள் சட்டென்று குழந்தையோடு எழுந்து விலகிக் கொண்டாள். "கடவுளே! என்ன இது?" என்று அவள் கூவினாள்.

நானும், "கடவுளே! என்ன இது?" என்று அதே கேள்வியைக் கேட்டேன். அந்தக் கேள்வி என் உள்ளத்துள் ஆழ்ந்து ஒலி எழுப்பியது. "குழந்தையின் புண்ணை நான் ஆற்றிவிடுவேன். ஆனால் அந்தப் புண்ணுக்குக் காரணமான சமுதாயத்தின் புண்ணை, இந்திய சமூகத்திலே ஆழ்ந்து காயமாக நிலவிவரும் ஏழைமையைப் போக்க என்னிடத்தில் மருந்து ஏது? கடவுளே! நீதான் பசிப்பிணி மருத்துவனாக இருக்கிறாய்! நீ அருள் செய்ய வேண்டும். இல்லாவிட்டால் ஏழைகளாகிய எங்களுக்குப் புகல் இல்லை..."

நான்தானா இப்படி நினைக்கிறேன்! என் கண்ணா நீரை வடிக்கிறது!

கடவுளே! என்ன இது?

# ஹாஸ்ய நடிகர்

'மகாத்மா காந்தி ஹரிஜன காலேஜு'க்கு நிதி சேர்ப்பதற்காக மீனாட்சி நாடக சபையார் ஒரு நாள் நாடகம் நடத்த ஒப்புக்கொண்டார்கள். அன்று வசூலாகும் தொகை முழுவதும் ஒரு தம்பிடி குறையாமல் காலேஜ் நிதிக்குச் சேர்த்துவிட வேண்டுமென்பது நாடக சபையின் அதிபர் குமரகுருபர முதலியாருடைய அபிப்பிராயம். இது வரையிலும் எந்த நாடகத்திலும் கச்சேரியிலும் சேராத அளவுக்கு அன்று வசூல் ஆகவேண்டுமென்று அவர் திட்டம் போட்டார்.

கலையிலும் சரி, லௌகிகத்திலும் சரி, அவர் வல்லவர். நடிகர்களுக்கு உற்சாகமூட்டி அவர்களை நன்றாக நடிக்கச் செய்யும் உபாயங்கள் அவருக்குத் தெரியும். அதற்குமேல், அவர்களுடைய நடிப்பைப்பற்றியும், நாடகத்தின் சிறப்பைப்பற்றியும் மிகவும் சிறந்த விமரிசனங்கள் பத்திரிகைகளில் வெளியாகுமாறு செய்யவும் தெரியும். எந்த ஊருக்குப் போனாலும் முதலில் அந்த ஊர்ப் போலீஸ்காரர் அவர் கைக்குள் அகப்பட்டுவிடுவர். அடுத்த படியாக முனிஸிபாலிடித் தலைவரை அவர் வசப்படுத்துவார். பத்திரிகை நிருபர்கள், காங்கிரஸ்காரர்கள், சுயமரியாதைத் தலைவர்கள், பிரசித்தி பெற்ற பெண்ணுரிமைத் தொண்டர்கள், ஹரிஜனப் பிரதிநிதிகள் என்று நாலுபேர் காதிலும் கண்ணிலும் படும் கோஷ்டியினர் யாவரும் அவருக்குச் சிநேகமாகிவிடுவார்கள்.

எந்த ஊரிலும் அவருடைய நாடகங்கள் சப்பையாகப் போனதே இல்லை. எந்தப் பக்கம் மரம் சாயும், எப்படி வெட்ட வேண்டும் என்ற தோதுகளை அவரிடம் பாடம்

கேட்டு மற்றவர்கள் தெரிந்து கொள்ளவேண்டும். இந்த வார நாடக வசூலில் ரூ. 200 சுயமரியாதைக்காரர் சங்கத்துக்குக் கொடுப்பார்; அடுத்த வார வசூலில் ரூ. 500 சநாதன தர்ம சபையாருக்கு வழங்குவார். அவர் கட்சிப் பிரதிகட்சிக்கு மேலே போனவர்; எல்லாருக்கும் வேண்டியவர்.

லக்ஷ்மி தேவி அவர் நாடக சபையில் பிரதான கதா நாயகி வேஷம் தரிப்பவள். அவளுடைய குயிற் குரலும் அழகும் நடனத் திறமையும் தினம் ஏதாவது ஒரு பத்திரிகையில் புகழ் பெற்று விளங்கும். ராஜ பார்ட்டு ரங்கசாமி என்ன சாமானியமானவரா? அவர் ஊருக்கு வரும்போது, வேஷம் இல்லாத வெறும் ஆளைப் பார்க்கவே ஆயிரக்கணக்கில் ஜனங்கள் கூடுவார்கள் என்றால் நாடகத்துக்கு வரும் கூட்டத்தைப்பற்றிச் சொல்வானேன்?

எல்லாருக்கும் மேலாகக் குமரகுருபர முதலியார் அதிருஷ்டசாலி என்பதை அவருக்கு ஹாஸ்ய நடிகர் நடராஜ பிள்ளை கிடைத்தது ஒன்றினாலேயே சொல்லிவிடலாம். ஹாஸ்யக் கலை நடராஜ பிள்ளையுடன் பிறந்தது. அவர் நடந்தாலும், நின்றாலும், இருந்தாலும் பக்கத்தில் இருப்பவர்கள் சிரிக்காமல் இருக்க முடியாது. பேசினால் வயிறு புண்ணாகிவிடும். குமரகுருபர முதலியாருக்கு அவர் ஒரு கற்பகம்; காமதேனு; காசு காய்க்கும் மரம்.

நாடகத்துக்குப் பிரதான நடிகர் யாரும் வர முடியவில்லை; அப்படி ஒரு சந்தர்ப்பம் நேர்ந்துவிட்டதென்று வைத்துக்கொள்வோம். நடராஜ பிள்ளை ஒருவர் இருந்தால் போதும்; வசூலில் குறைவே இராது. அதில் வேடிக்கை என்னவென்றால், உண்மையிலே அப்படி ஒரு சமயம் வந்தால் ஜனங்களுக்கு அதிக உற்சாகம் ஏற்பட்டுவிடும். முக்கியமான நடிகர்கள் இல்லாத குறையை ஹாஸ்ய சக்கரவர்த்தி நடராஜ பிள்ளை நிரப்பிவிடுவார் என்று குமரகுருபர முதலியார் விளம்பரம் செய்வார். நிச்சயமாக அன்று இரட்டிப்பு வசூலாகும்.

நடராஜ பிள்ளையை எத்தனையோ நாடகக்காரர்கள் கூப்பிட்டுப் பார்த்தார்கள். சினிமாக்காரர்கள் விலைக்கு வாங்க எண்ணினார்கள். முடியவில்லை. தெய்வ பக்தியும் விசுவாசமும் உள்ள நடராஜபிள்ளைக்குக் குமரகுருபரரை விட்டுப் போக மனம் இல்லை. ஆதிகாலத்தில் அவருக்கு உற்சாகமூட்டி இந்த நிலைக்கு வரப் பண்ணினவர் குமர குருபரர் என்ற விஷயத்தை ஹாஸ்ய சக்கரவர்த்தியான பிறகும் அவர் மறக்கவில்லை. குமரகுருபரரும், 'நாம் வைத்து வளர்த்த செடிதானே?' என்று அலக்ஷ்யமாக இராமல் பணத்திலும் மதிப்பிலும் நடராஜ பிள்ளைக்கு உரிய ஸ்தானத்தை அளித்தார்.

மதுரையில் ஹரிஜன காலேஜ் நிதிக்குச் சகாய நாடகம் நடக்கப் போகிறதென்ற விஷயத்தை மூன்று மாசத்துக்கு முன்பாகவே விளம்பரம் செய்யத் தொடங்கினார்கள். ஹாஸ்ய நடிகர் நடராஜபிள்ளையின் படம் பல பல கோலங்களில் விளம்பரத்தை அலங்கரித்தது. மற்ற நடிகர்களைப்பற்றியும் விளம்பரங்கள் வெளியாயின. நாடகம் நடக்கும் தேதி நிச்சயமாகிவிட்டது. ஹரிஜன சங்கத்தாரும் பொது ஜனங்களும் ஏதோ பெரிய உற்சவம் நடந்தால் எப்படி ஈடுபடுவார்களோ, அப்படி என்றும் இல்லாத உற்சாகத்தோடு ஏற்பாடுகளைச் செய்து வந்தார்கள்.

உதவி நாடகம் நடக்கும் தினத்துக்கு இன்னும் ஒரு மாசம் இருக்கிறது. அப்போது எதிர்பாராதபடி நடராஜ பிள்ளை தம் சொந்த ஊருக்குப் போய்ச் சில வாரங்கள் தங்கும்படி நேர்ந்துவிட்டது. அவருடைய குழந்தை-ஒரே பிள்ளை-நோய்வாய்ப்பட்டு இருந்தமையால், அவர் சொந்த ஊருக்குப் போய் வேண்டிய பரிகாரங்களைச் செய்யலானார். டைபாயிடு ஜுரம் குழந்தைக்கு வந்திருந்தது. மூன்று வாரம் போகவேண்டும். மூன்று வாரமும் குழந்தையின் பக்கத்திலே இருக்கவேண்டும் என்று ஹாஸ்ய சக்கரவர்த்தி நினைத்தார். குழந்தைக்குக் குணமாகும் விஷயத்தில் அவருக்கு இருந்த கவலையைக் காட்டிலும் குமரகுரு

பாருக்கு அதிகக் கவலை இருந்தது. அவரைக் காட்டிலும் அதிகமாக ஹரிஜன காலேஜ் கமிட்டியாருக்கு இருந்தது. பொதுவாக ஜனங்கள் அனைவருக்குமே கவலை ஓரளவு இருந்தது.

மணி மந்திர ஔஷதங்களால் குழந்தையின் வியாதிக்குப் பரிகாரம் தேடினார்கள். தினசரி நாடகத்தில் நடராஜ பிள்ளை நடிக்க முடியவில்லை. ஆகையால் வசூல் குறைவு தான். அதைக் குமரகுருபரர் பொருட்படுத்தவில்லை. 'பெரிய கனவுக் காட்சியாகத் திட்டம் போட்டிருக்கும் சகாய நாடகம் சரிவர நடக்கவேண்டுமே! அதற்கு ஹாஸ்ய சக்கரவர்த்தி வரவேண்டுமே' என்ற சிந்தனைதான் அவரைத் துளைத்தது. "அந்த ஒரு நாள் அவர் வந்து நடித்து விட்டுப் போகட்டும். பிறகு ஒரு வருஷம் அவர் வரவே வேண்டாம். ஊரிலேயே இருக்கட்டும்" என்று கடவுளைப் பிரார்த்தித்துக்கொண்டார்.

தினந்தோறும் குழந்தையின் தேக நிலைமையைப்பற்றிய கடிதம் குமரகுருபரருக்கு வந்தது. அவருக்குத் தம் நாடக சபை சிரிப்பை இழந்து நிற்கிறதே என்ற வருத்தம். அந்தச் சிரிப்பு அழாக்குறையாகச் சின்னஞ்சிறு குழந்தையின் தலையில் ஐஸ் பையை வைத்துக்கொண்டு ஒரு சிற்றூரில் இரவும் பகலும் கண்விழித்து உட்கார்ந்திருந்தது. ஆயிரக்கணக்கான மக்களை வயிறு குலுங்க விலா நெரியச் சிரிக்க வைக்கும் அந்த ஆசாமி, முகத்தில் களையின்றி, வார்த்தையில் ஜீவனின்றி ஹாஸ்யம் என்ற சரக்குக்கு எத்தனையோ காத தூரத்தில் உட்கார்ந்துகொண்டிருந்தார். ஹாஸ்ய ரஸத்தின் அபரிமிதமான வெற்றியைக் கண்டு சோகம் பழி வாங்க எண்ணிவிட்டதோ!

நாலு நாளைக்கு ஒரு முறை நாடக சபையின் அதிபர் போய்க் குழந்தையைப் பார்த்துவருவார். ஹரிஜன நிதிக் கமிட்டித் தலைவர் வாரத்துக்கு ஒரு முறை போய் வருவார். "நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டாம். இந்த வாரம் போனால் குழந்தை எழுந்து உட்கார்ந்துகொண்டு

விடுவான். பெரிய தர்ம காரியத்தைச் செய்யப்போகும் இந்தச் சமயத்தில் பகவான் சோதிக்கிறார். ஆனாலும் தர்மம் தலைகாக்கும். நீங்கள் இங்கேயே இருப்பதைவிட நடுவில் ஒரு நாள் மதுரைக்கு வந்து மீனாட்சி தரிசனம் செய்துகொண்டு போருங்கள்" என்று அவர்கள் சொல்வார்கள். குமாரகுருபரர் மெல்ல மெல்லச் சொல்லி ஒரு நாள் அவனை மதுரைக்குக் கூட்டிக்கொண்டே வந்து விட்டார்.

அன்று நாடகத்துக்கு அளவில்லாத கூட்டம். ஆனால் நடராஜ பிள்ளை நடிக்கவில்லை. வெறுமனே மேடைமீது வந்து நின்று பொதுஜனங்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். அவர் முகத்தில் மலர்ச்சியே இல்லை. இருந்தாலும் அவர் பேசியபோது ஜனங்கள் சிரித்தார்கள். "என் குழந்தைக்கு ஜுரம் வந்திருக்கிறது. அதனால் நான் இங்கே வர முடியவில்லை" என்று அவர் சாமான்ய அர்த்தத்தோடு சமாசாரத்தைச் சொன்னார். ஹாஸ்ய நடிகர் வாயில் சாமானிய வார்த்தை வருமோ! ஒவ்வொரு வார்த்தையிலும் நகைச்சுவை ததும்ப வேண்டாமோ!— இந்தக் கொள்கையிலே ஊறிய மகாஜனங்கள் அந்த வாக்கியத்தைக் கேட்டுக் கால் மணி நேரம் சிரித்தார்கள். "ஜுரம் அங்கே வந்ததாம்; அவர் இங்கே வர முடியவில்லையாம். என்ன நுட்பமான ஹாஸ்யம்! பார்த்தீர்களா?" என்று வியாக்கியானக்காரர்கள் விமரிசனம் செய்தார்கள். அந்தக் கரகோஷத்துக்கும் சிரிப்புக்கும் இடையே நடராஜர் வாடிய முகத்தோடு, வேண்டுமென்று வருவித்துக்கொண்ட புன்னகையோடு மேடைமேல் நின்றார். அவர் அகக்கண்ணில் குழந்தை யமனுடன் போராடிக் கொண்டிருந்த காட்சிதான் தோன்றியது. உள்ளத்துக்குள்ளே சோக நாடகம்; வெளியிலே ஹாஸ்யமென்ற எண்ணத்தால் உண்டான கோஷம்!

சகாய நாடக தினம் நெருங்கிக்கொண் டிருந்தது. எப்படியாவது அந்த ஒரு நாள் வந்து நாடகத்தை நடத்

திக் கொடுத்துவிட்டுத் தம் மானத்தைக் காப்பாற்ற வேண்டும் என்று குமரகுருபரர், நடராஜ பிள்ளையைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்; காலில் விழப் போனவரைத் தடுத்து, வேறு வழி இல்லாமையால் அந்த ஹாஸ்ய நடிகர் ஒப்புக்கொண்டார். அதன் பிறகு, குமரகுருபரர் செய்த விளம்பரத்துக்குக் கேட்க வேண்டுமா? பல காலமாக இழந்திருந்த காட்சியைக் காணலாம் என்ற ஆசையை, அவர் பொதுஜனங்களிடம் எழுப்பிவிட்டார். ஹரிஜன காலேஜ் சகாய நிதி என்ற காரணங்கூடத் தேவை இல்லாமற் போயிற்று; ஜனங்களின் ஆவலை அந்த அளவுக்குத் தூண்டி முடுக்கிவிட்டார் அவர்.

குழந்தையின் நிலை டாக்டர்கள் கையில் இல்லை. ஆனாலும் அவர்கள் தைரிய வார்த்தைகளையே சொல்லி வந்தார்கள். சாதாரணமாகவே அபாய நிலையை வெளிப்படையாகச் சொல்லும் வழக்கம் டாக்டர்களிடம் இல்லை. அதுவும் இந்த விஷயத்தில், எத்தனையோ பெரிய மனிதர்களும் பொதுஜனங்களும் நடராஜ பிள்ளையை எதிர்பார்த்து நிற்கிறபோது அவருக்கு அதைரியம் ஊட்டலாமா?

"நீங்கள் தாராளமாகப் போய் வரலாம். கொஞ்சங்கூடக் கவலையே வேண்டாம். குழந்தை கண்ணைத் திறக்காமல் படுத்திருக்கிறதே என்று நீங்கள் எண்ணுகிறீர்கள். இந்த வியாதிக்கு அப்படித்தான் இருக்கும். கடவுள் நோயாளிக்கு நோயின் உபத்திரவம் இல்லாமல் இருக்கச் செய்யும் உபாயங்களில் இது ஒன்று" என்று மதுரைப் பெரிய டாக்டர் சொன்னார். குமரகுருபர முதலியாரும் அதை ஆமோதித்தார்.

"குழந்தைக்கு ஆபத்து நேர்ந்தால் என்ன செய்வது?" என்று கேட்டார் நடராஜபிள்ளை.

"என்ன அப்படிக் கேட்கிறீர்கள்? ஆபத்து நேர இடமே இல்லையே!"

"என் கண்மணி எழுந்திருந்து அப்பா என்று கூப்பிடுவானா?" என்று சொல்லும்போதே அவர் கண்ணிலிருந்து

பலபலவென்று நீர்த்துளிகள் உதிர்ந்தன. குழந்தையின் அருமை அவருக்குத் தெரியும்.

"அடடா! என்ன இப்படிக் கோழை மனசோடு இருக்கிறீர்கள்? இதைவிட அபாயமான கேஸுகளை யெல்லாம் நான் பார்த்திருக்கிறேன். இன்னும் நாலு நாளில் எல்லாம் வாசியாகிவிடும்" என்று குமரகுருபரர் நட ராஜபிள்ளையின் முதுகைத் தடவிக்கொண்டே சொன்னார்.

"இங்கே நான் இல்லாத சமயத்தில்...." நடராஜ பிள்ளை விம்மி அழத் தொடங்கினார். ஆம், எவரைக் கொண்டு குமரகுருபரர் சிரிப்பை விலைக்கு விற்றாரோ அந்த நகைச் சுவை நடராஜர், ஹாஸ்ய சக்கரவர்த்தி, அந்த வியாபாரியின் அணைப்பிலே இருந்தும் அழுதார்.

டாக்டர் ஆறுதல் சொன்னார். நண்பர்கள் சொன் னார்கள். கடைசியில் அவர் மனைவிகூட, "மீனாட்சி அம்மன் காப்பாற்றுவாள். இவ்வளவு பெரியவர்கள் ஆசீர்வாதம் வீண்போகாது. நீங்கள் தைரியமாகப் போய் வாருங் கள்" என்று தன் துக்கத்தை அடக்கிக்கொண்டு சொன் னாள். இதுதான் சமயம் என்று குமரகுருபரர், "என்ன தம்பி, உங்கள் வீட்டில் இருக்கிற தைரியங்கூட உங்களுக்கு இல்லையே! அவர்கள் போய் வரும்படி சொல்கிறார்கள். பெற்ற தாயைக்காட்டிலுமா உங்களுக்குக் கவலை? நீங் களே வருத்தப்பட்டால், வீணாக அதைரியம் அடைந்தால், அவர்கள் எப்படி ஆறுதல் அடைவார்கள்? டாக்டர வர்களை இங்கேயே இருக்கும்படி ஏற்பாடு செய்கிறேன். அவர்களுக்கு எவ்வளவு காரியம் இருந்தாலும் அவை களையெல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு, நீங்கள் வரும் வரையில் இங்கேயே இருப்பார்கள்......என்ன டாக் டர், நான் சொல்வது சரிதானே?" என்றார்.

டாக்டர் உடனே, "ஆகா, அப்படியே செய்கிறேன். எனக்கு ஒன்றும் சிரமம் இல்லை. என்னால் ஹரிஜன நிதிக்கு விசேஷ சகாயம் செய்ய முடியாவிட்டாலும் இந் தத் தொண்டையாவது செய்கிறேன்" என்றார்.

கடைசியில் ஒருவாறு மதுரை வருவதற்கு நடராஜ பிள்ளை சம்மதப்பட்டார். குமரகுருபரர் செய்த ஜாலங்களால் அவர் வழிக்கு வந்தார்.

மதுரைக்குப் புறப்பட்டார் ஹாஸ்ய நடிகர். "ஏதாவது அபாயமானால் உடனே தந்தி கொடுங்கள்" என்று டாக்டரிடம் சொல்லிப் புறப்பட்டார். "அதற்குத் தேவையே இராது" என்று பதில் வந்தது.

அத்தனை கூட்டத்தை எந்தக் காலத்திலும் பார்த்த தில்லை; இனியும் பார்க்கப் போவதில்லை. ஒரு லக்ஷம் ரூபாய்க்கு மேல் வசூலாயிற்று. மதுரை முழுவதும் திமி லோகப்பட்டது. "ஹாஸ்ய நடிகர் நடராஜ பிள்ளை இதற் காக மரணாவஸ்தையில் இருக்கும் தம் குழந்தையை விட்டுவிட்டு வந்திருக்கிறார்" என்ற செய்தி அவரை ஒரு பெரிய தியாக மூர்த்தியாக நினைக்கச் செய்தது. "அப்பூதியடிகள், இறந்துபோன தம் மகனை மறைத்து வைத்துத் திருநாவுக்கரசருக்கு விருந்து செய்தாராம்! இது அது மாதிரி அல்லவோ இருக்கிறது!" என்றார் ஒரு ரஸிகர். பக்கத்தில் இருந்தவர் அவர் முதுகில் ஓங்கி ஓர் அடி கொடுத்து, "என்ன ஐயா, அபசகுனமாகப் பேசு கிறீர்? வாயை அடக்கும்" என்றார்.

நாடகம் தொடங்கியது. "கடவுளே, இன்று நாடகம் முடிகிறவரையில் நடராஜ பிள்ளையின் குழந்தை உயிரோடு இருக்கவேண்டும்" என்று வேண்டிக்கொண் டார் குமரகுருபரர். 'அதற்குப் பிறகு?' என்று கேட் கிறீர்கள்? அதைப்பற்றி அவருக்குக் கவலை இல்லை!

நாடகத்தில், வேண்டுமென்றே நடராஜ பிள்ளைக்கு எவ்வளவு நடிப்புக்கு இடம் உண்டோ அவ்வளவையும் கொடுக்காமல் குறைத்திருந்தார்கள். அவர் மனம் இல்லா மல், ஜீவன் இல்லாமல் நடித்தார். ஆனால் பொதுஜனங் கள் அந்த நடிப்பில் யாதொரு வேற்றுமையையும் காண வில்லை. எப்போதையும்விட அதிகமாகக் கைதட்டினார் கள்; குதூகலித்தார்கள். அவர் பல நாட்கள் அவர்களைப்

பட்டினி போட்டிருந்தார் அல்லவா? அந்தப் பசியால் அவர்களுக்கு எல்லாம் ருசியாயிருந்தன.

ஒவ்வொரு காட்சியும் முடிந்தபோது குமரகுருபரர் ஹாஸ்ய நடிகருக்கு ஆசார உபசாரம் செய்தார்; "உங்கள் நடிப்பு அபாரம்" என்று பாராட்டினர்.

கடைசிக் காட்சி ஒருவிதமாக முடிந்தது. சபையில் உள்ளவர்கள் மாலைகளைக் கொண்டுவந்திருந்தார்கள். நடராஜ பிள்ளையின் கழுத்தில் போடவேண்டும் என்று ஆத்திரப்பட்டார்கள். ஆனால் அவர், முடிந்தவுடனே உள்ளே போய்விட்டார். கூட்டத்தின் ஆரவாரம் தாங்க முடியவில்லை.

நடராஜ பிள்ளை உள்ளே போனவுடன், அங்கிருந்த ஒருவர், "இதோ உங்களுக்குத் தந்தி" என்று கொடுத்தார். "தந்தியா?" என்று கேட்டுக்கொண்டே நடராஜ பிள்ளை கீழே விழுந்து மூர்ச்சை ஆனர்.

தந்தி ஏழு மணிக்கே வந்துவிட்டது. முன் ஏற்பாட்டின்படி குமரகுருபரர் வேறு யாருக்கும் தெரியாமல் அதை வாங்கி வைத்துக்கொண்டார். அதைப் பிரித்துப் பார்த்து, நாடகமெல்லாம் முடிந்த பிறகு மெல்ல நடராஜ பிள்ளைக்குச் செய்தி தெரிவிக்கலாம் என்று எண்ணியிருந்தார். தந்தியில் வேறு என்ன இருக்கப்போகிறது? எதிர்பார்த்ததுதானே?—இந்த நினைப்போடு அவர் வேதனைப்பட்டுக்கொண்டிருந்தார். அதைப் பிரிக்காமல், படிக்காமல், 'நாடகம் முடிய வேண்டுமே!' என்ற கவலையோடு ஒவ்வொரு கணமும் கவனிக்க வேண்டியதைக் கவனித்துக் கொண்டு சுறுசுறுப்பாக இருந்தார். நாடகம் முடிந்தவுடனே பொதுஜனங்களின் கலவரம் அதிகமாகிவிட்டது. நடராஜ பிள்ளையைப் பார்க்காமல் கூட்டம் கலையமாட்டேன் என்று பிடிவாதம் பிடித்தது.

அவர் கையிலே தந்தி. 'நடராஜ பிள்ளைக்குச் செய்தியைத் தெரிவிக்காமல் இவ்வளவு நேரம் இருந்ததே பாவம். இனியும் இந்த முரட்டு ஜனங்களுக்காகத் தாமதம் செய்வது

மகா பாவம்! கடவுள் விட்ட வழி விடட்டும். இதை அவருக்கு அனுப்பிவிடுவோம். நாம் இங்கே இருந்து கூட்டத்தைச் சமாளிப்போம். துக்கச் செய்தியைச் சொன்னால் கூட்டம் சமாதானம் ஆகிவிடும்' என்ற யோசனையில் குமரகுருபரர் அதை உள்ளே அனுப்பினார்.

நடராஜ பிள்ளை மூர்ச்சையாகி விழுந்தவுடன் ஒருவர் அவர் முகத்தில் ஜலத்தைத் தெளித்தார். மற்றொருவர் தந்தியைப் பிரித்துப் படித்தார். "குழந்தை இப்போது தான் கண்ணை விழித்துக்கொண்டது. வாயைத் திறந்து தாகத்துக்குக் கேட்டது. கடவுள் காப்பாற்றினார். இனிக் குழந்தைக்கு அபாயம் இல்லை" என்று இருந்தது. "ஹா!" என்று சந்தோஷத்தில் துள்ளிக் குதித்தார் படித்தவர். அந்தக் கூச்சலும் சைத்தியோபசாரமும் நடராஜ பிள்ளைக்கு உணர்வை உண்டாக்கின. "ஐயா, உங்கள் குழந்தை பிழைத்துக்கொண்டது" என்ற வார்த்தைகள் அவர் காதில் ஜிலுஜிலுவென்று விழுந்தன. தந்தியைப் பார்த்தார். முகத்தில் தெளிவு உண்டாயிற்று. மெல்ல எழுந்திருந்தார். மேடைக்கு அழைத்துச் சென்றார்கள். அப்போதுதான் குமரகுருபரர், "குழந்தையின் மரணவஸ்தையையும் நினைக்காமல் அவர் இங்கே வந்தார். இவ்வளவு நேரம் நடித்தார். அழுகையில் மூழ்கி இருக்கவேண்டிய அவர் உங்களைச் சிரிப்பில் மூழ்கச் செய்தார். தர்மம் தலை காக்கும் என்று எண்ணினேன். ஆனால் இன்று தந்தி வந்தது; அதையும் நான் மறைத்தேன். கடவுள் இரங்கவில்லை......" என்று பேசிக்கொண்டிருந்தார்.

தொடர்ந்தாற்போல், "கடவுள் கருணை காட்டினார்" என்ற குரல் உச்சஸ்தாயியில் உள்ளிருந்து வந்தது. ராஜபார்ட்டு ரங்கசாமியின் குரல் அது. மேடைமீது வந்த நடராஜ பிள்ளை மெல்லிய குரலில் கண்ணீர் வழிந்து ஓடக் கைகளைக் குவித்துக்கொண்டே, "தர்மம் தலை காத்தது. உங்கள் அன்பு என்னைக் காப்பாற்றியது. குழந்தைக்கு அபாயம் இல்லை" என்று சொன்னார். அவர் முகத்தில் உண்மையாகவே லேசான புன்னகை எழுந்தது.

# தெய்வச் செயல்

“நீங்கள் தீபாவளிக்கு வருவதை ஒவ்வொரு கணமும் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். அப்பா உங்கள் தகப்பனருக்குக் கடிதாசு எழுதியிருக்கிறார். இன்னும் ஒரு வாரந்தான் இருக்கிறது. அதற்குள் ஒவ்வொரு நிமிஷமும் ஒவ்வொரு யுகம்போலத் தோன்றுகிறது....”

கடிதத்தின் இந்தப் பகுதியைக் கணேசன் திருப்பித் திருப்பிப் படித்தான். அவன் அன்புக்கு உகந்த காதலிக்கு ஒரு நிமிஷம் ஒரு யுகமாகத் தோன்றுகிறதாம்; அவனுக்கோ ஒவ்வொரு கணமும் யுகமாகத் தோன்ற ஆரம்பித்துவிட்டதே! காதல் என்பது ‘மைக்ராஸ்கோப்’போ, ஒரு கணத்தை ஒரு யுகமாகப் பெருக்கிக் காட்ட!

கடிதத்தைப் படித்துப் படித்து ஆனந்தத்தில் அமிழ்ந்திருந்த அவனுக்கு, அணுக்குண்டை வீசினதுபோல் ஆயிற்று, அவன் தகப்பனர் கிருஷ்ணசுவாமி ஐயர் எழுதிய கடிதம் வந்தபோது. அவனுடைய கண்ணாட்டியின் கடிதம் கிடைத்த இரண்டாவது நாளே அக்கடிதம் வந்து சேர்ந்து, அவனது கற்பனை உலகத்து மாடமாளிகைகளைத் தகர்த்து எறிந்துவிட்டது.

“...உன் மாமனர் கடிதம் எழுதியிருக்கிறார். இந்த வருஷம் பாட்டி செத்துப் போனதை வியாஜமாகக் கொண்டு தலைத் தீபாவளியை நிறுத்தக்கூடாதென்றும் வயசானவர்கள் காலமானதைப் பெரிய துக்கமாகக் கொண்டாடுவதில்லையென்றும் எழுதி இருக்கிறார். வாஸ்தவந்தான். பல இடங்களில் அப்படித்தான் செய்கிறார்கள். இந்தத் தடவை உன்னை மாத்திரம் விழுப்புரத்துக்கு அனுப்பித் தலைத் தீபாவளியை நடத்த ஏற்பாடு செய்யலாம் என்பதுதான் என் உத்தேசம். நம் குடும்பத்

தில் நடந்ததற்காக, அந்தக் குழந்தை தீபாவளியன்று கண்ணைக் கசக்கிக்கொண் டிருக்க வேண்டாமே என்று நினைத்தேன். உன் அம்மா ஒரேயடியாக ஒன்றும் கூடாது என்று சொல்லுகிறாள். 'அந்தக் குழந்தை என்று வேறாக வைத்துப் பேசுகிறீர்களே. அவள் எப்போது நம் அகத்துப் பிள்ளைக்கு வாழ்க்கைப்பட்டாளோ அப் போதே அவள் நம் குடும்பத்தைச் சேர்ந்துவிட்டாள். நம்முடைய சுக துக்கங்களில் அவளுக்கும் பங்கு உண்டு' என்று வாதாடுகிறாள். 'அடுத்த வருஷம் இரட்டைப் பங்காகப் பண்ணச் சொல்லுங்களேன். மாசியம் பண்ணின கை யோடே தீபாவளி விருந்து சாப்பிட உங்களுக்கு மனசு வருகிறதா?' என்று கேட்கிறாள். எல்லோரும் சந்தோஷ மாகச் சேர்ந்து நடத்த வேண்டிய இந்தக் காரியத்தை அரைகுறை மனசோடும் சச்சரவோடும் செய்வதில் என்ன பிரயோசனம்? இதையெல்லாம் உத்தேசித்து உன் மாம னுக்கு நான் சமாதானமாகக் கடிதம் எழுதிவிட்டேன்.''

இதுதான் அவன் தகப்பனார் எழுதிய கடிதம். தகப்ப னாரின் அநுதாபத்தைக் கண்டு அவனுக்கு ஆறுதல் ஏற் பட்டாலும் அம்மாவின் பிடிவாதத்தை நினைக்க நினைக்க எரிச்சலாக வந்தது.

'துக்கம் கொண்டாடுவது என்ன வேண்டியிருக் கிறது! பாட்டி உயிரோடு இருந்தபோது அவளை இந்த அம்மா படுத்தி வைத்த பாடு கடவுளுக்கே சகிக்காது. இப் போது துக்கம் வந்துவிட்டதாம், துக்கம்! கனிந்த பழம் உதிர்வதுபோல அந்தக் கிழவி போய்ச் சேர்ந்தாள். அவள் இன்னும் இருந்து ஒரு நாளைக்கு இரண்டு சச்சரவு நடக்க வேண்டுமென்று அம்மா நினைக்கிறாளா, என்ன? இந்தப் போலி வேஷம் எதற்கு என்று கேட்கிறேன். தன் அருமை மாமியார் செத்துப்போன துக்கத்துக்காக, இவள் என்ன செய்துகொள்ளவில்லை? போன மாசந் தானே, பவுன் விலை ஏறியிருக்கிறதே என்று கொஞ்சங் கூட நினைக்காமல், பணத்தைக் கொட்டிப் பத்துப் பவுன்

வாங்கிச் சங்கிலி பண்ணிக்கொண்டாள்? அதற்கெல்லாம், இழவு கொண்டாட மறந்து போயிற்றே?— எனக்கு அப்போதே தெரியும். ஒவ்வொருத்தியும் தான் மாட்டுப்பெண்ணாக இருக்கிறபோது இருக்கிற தினுசு வேறேதான்; அவளே ஒரு பெண்ணுக்கு மாமியார் பதவி வகித்த பிற்பாடு நடக்கிற தினுசே வேறுதான். பாவம்! சின்னஞ்சிறு வயசில் ஆசையோடு அகமுடையானைப் பார்க்க வேண்டுமென்று காத்திருக்கும் லக்ஷ்மியின் மனசை அம்மா தெரிந்துகொள்ள முடியாதா? அப்பாவுக்குத் தெரிகிறதே! எல்லாம் கொடுங்கோல் ஆட்சி! மாமியார் என்ற அகங்காரத்தின் விளைவு! கல்யாணத்தின்போதே அது சொத்தை, இது சொள்ளை என்று சம்பந்திகளைப்பற்றிக் குறை கூறின இவளுக்கு, நல்ல எண்ணம் கொஞ்சங் கொஞ்சமாக மறைந்து கொண்டே வருகிறது.'

இன்னும் பல பலவாறெல்லாம் எண்ணினான். அவன் கண்முன் அவன் தாய் வாசலில் நின்று கதவை மூடிவிட்டு, "போகாதே!" என்று பயங்கரசொரூபத்தோடு பயமுறுத்துவது போன்ற காட்சிதான் உண்டாயிற்று. அடுத்த கணம் காட்சி மாறியது. அப்பா முன் வந்தார்.

'இந்தப் பிராமணர் இருக்கிறாரே, இவருக்குத் துளியாவது தைரியம் உண்டா? ஒரு பெண்பிள்ளை சொல்வது, அதற்குத் தாளம் போடுவது என்றால், இதைக்காட்டிலும் வெட்கக்கேடான விஷயம் வேறு என்ன இருக்கிறது? கண்ணைத் துடைப்பது போலக் காகிதம் எழுதியிருக்கிறார். என்ன பிரயோசனம்? கோழையாக, பெண்ணுக்கு அடிமையாக, நினைத்த காரியத்தை நிறைவேற்றத் தைரியம் இல்லாத மனிதர்களெல்லாம் புருஷர்களென்று வேஷ்டி கட்டிக்கொண்டு வந்துவிடுகிறார்கள்!...'

இப்படி ஒவ்வொருவர் குண சித்திரத்தையும் அவன் மனம் அளவிட்டுக்கொண்டிருந்தது.

சிந்தனைக்குள் ஆழ்ந்து இரண்டுமணி நேரம் போனதே தெரியாமல் தலையின்மேல் கை வைத்தபடியே உட்கார்ந்திருந்த அவனைக் கடிகாரம் பத்து மணி அடித்து எழுப்பியது. அவசர அவசரமாக அறையைப் பூட்டிக்கொண்டு சாப்பிடாமலே கம்பெனிக்குப் போய்ச் சேர்ந்தான்.

* * *

கம்பெனியில் 'அக்கௌன்டென்டு' உத்தியோகம். மனசு வைத்து ஒழுங்காக வேலை பார்க்கிறவன் கணேசன். சென்னையில் பிராட்வேயில் அந்தக் கம்பெனி இருக்கிறது. மயிலாப்பூரில் ஓர் அறையில் ஜாகை வைத்துக்கொண்டு ஹோட்டலில் சாப்பிடுகிறான்.

அவன் தகப்பனார் சேலம் ஜங்ஷனில் உதவி ஸ்டேஷன் மாஸ்டர். அவன் மாமனார் விழுப்புரத்தில் பள்ளிக்கூடத்து வாத்தியார். அவன் மனைவி லக்ஷ்மி, தலைத் தீபாவளியில் தன் அருமைப் பர்த்தாவைப் பார்த்துப் பேசிக் களிக்கலாம் என்று கனவு கண்டுகொண் டிருக்கிறவள்.

இன்று கணேசனுக்கு வேலை ஓடவே இல்லை. "தலைவலி பொறுக்க முடியவில்லை" என்ற சாக்குச் சொல்லி மானேஜரின் இரக்கத்துக்குப் பாத்திரமானான். கவலையும், சாப்பிடாமையால் உண்டான சோர்வும் சேர்ந்து அவனை வாட்டின. ஒருவிதமாக அன்று மாலையில் கம்பெனியை விட்டு அறைக்கு வந்து சேர்ந்தான்.

தீபாவளி அணுகிக்கொண் டிருந்தது. ஒவ்வொரு மணியும் அதைச் சமீபத்திலே கொண்டுவந்தது. அவனுடைய சிநேகிதர்களெல்லாம் தீபாவளியைப்பற்றியே பேசினார்கள். தீபாவளி வேஷ்டி, தீபாவளிப் புடைவை, தலைத் தீபாவளி, தீபாவளிப் பட்டாசு, தீபாவளிக் குஷி - இப்படித் தீபாவளிப் பருவத்து வார்த்தைகள் விதவிதமாகக் காதிலே பட்டன. பாவம்! கணேசன் அவற்றைக் கேட்கும்போதெல்லாம் உள்ளம் குமுறினான்; ஏமாற்றமே உருவமெடுத்ததுபோல் ஆகிவிட்டான்.

தீபாவளிக்கு முதல் நாள் அவனுக்கு ஒன்றுமே ஓடவில்லை. விடிந்தால் ஊர் முழுவதும் தீபாவளி ஸ்நானமும் புது ஆடைகளும் பட்டாசும் மத்தாப்புமாக அமர்க்களப்படும். அதற்கு வேண்டிய முஸ்தீபுகள் அன்று பலமாக அவன் கண்முன்னே ஒவ்வோரிடத்திலும் நடந்து கொண்டிருந்தன. மாமனார் வீட்டுக்குப் போகும் மாப்பிள்ளைகள் சுவர்க்கத்தில் காலை வைத்தவர்கள்போல உற்சாகமாக இருந்தார்கள். இந்த உல்லாச உலகத்தில் கணேசன் தனியாகத் துணையின்றி, கப்பல் கவிழ்ந்த வியாபாரிபோல மனம் உடைந்து போயிருந்தான். காலை ஒன்பது மணிக்கே பிராட்வேக்குப் போய் அங்கே ஒரு ஹோட்டலில் சாப்பிட்டு, அதி சீக்கிரமாகக் கம்பெனிக்குப் போய்விட்டான். மற்ற இடங்களில் தீபாவளிப் பேச்சும் ஏற்பாடுகளும் இருந்தன. கம்பெனிக்குள் புகுந்து வேலைமேலே கவனத்தைச் செலுத்தினால் ஒருவாறு தீபாவளியை மறக்கலாம் என்ற நினைவு அவனுக்கு. அங்கே போனால் வேலை ஓடுகிறதா? தீபாவளிப் பேச்சு அங்கே இல்லையா? மானேஜர் பத்து வருஷத்துக்குமுன் நடந்த தம் தலைத்தீபாவளி விமரிசையை அளக்கிறார். டைப் அடிப்பவர் தம் தங்கைக்குத் தலைத்தீபாவளிக்கு எங்கும் கிடைக்காத அபூர்வமான புடைவை வாங்கின கதையைச் சொல்கிறார். அதோ அந்த நாற்காலி காலியாக இருக்கிறதே, அந்த இடத்துக்கு உரிய குமாஸ்தா மூன்று நாள் லீவு வாங்கிக்கொண்டு மாமனார் வீட்டுக்குப் போயிருக்கிறான் -தலைத்தீபாவளிக்குத்தான். எல்லாம் தீபாவளிமயம்! அதுவும் தலைத்தீபாவளி! எந்த இன்பம் தனக்குக் கிடைக்கும் என்று எண்ணிக் காத்திருந்து ஏமாந்தானோ, அந்த இன்பம் கணேசன் ஒருவனுக்குத்தான் இல்லை; மற்றப்படி உலகம் முழுவதும் அதை அநுபவிக்கிறது! இது விதியின் கொடுமையல்லாமல் வேறு என்ன?

ஆறு மணி அடித்தது. எல்லோரும் புறப்பட்டார்கள். தீபாவளிக்குச் சாமான் வாங்க நாலு மணிக்கே பலர் போய்விட்டார்கள். கணேசன் ஆறு மணி வரையில்

இருந்தான்; அதற்கு மேலும் இருப்பான். கதவைச் சாத்தி விடுவார்களே!

அறைக்குப் போனால் அவள் கடிதமும் அப்பாவின் கடிதமும் கண்ணிலே பட்டு இன்னும் வருத்தத்தையும் ஆத்திரத்தையும் உண்டாக்கும். ஆகையால் இப்படியே சுற்றிவிட்டு மெதுவாக அங்கே போகலாமென்று எண்ணி நடந்தே வரத் தொடங்கினான். 'செண்ட்ரல் ஸ்டேஷன்' பக்கத்தில் வரும்போது, அங்கே பார்ஸல் அறையில் குமாஸ்தாவாக இருக்கும் அவன் ஆருயிர் நண்பன் சங்கரன் ஞாபகம் வந்தது. கணேசனுடைய மன இயல்பை நன்றாக உணர்ந்தவன் சங்கரன். அவனைப் போய்ப் பார்த்துப் பேசிக்கொண் டிருக்கலாம் என்று எண்ணி உள்ளே நுழைந்தான். அவன் நுழையும்போதே சங்கரன் ஓடி வந்து, அவன் கையைப் பிடித்துக் கொண்டு, "என்ன பைத்தியமாக இருக்கிறாயே! மணி ஆறரை அடித்துவிட்டது. உன்னுடைய அப்பா அனுப்பியிருக்கிற பார்ஸலை வாங்கிக்கொள்ளவில்லையே என்று நான் காத்துக்கொண் டிருக்கிறேன். இன்று காலை யிலேயே வந்துவிட்டது" என்று சொல்லி அவனைக் கூட்டிக் கொண்டுபோய் ஒரு நாற்காலியில் உட்கார வைத் தான். ஒரு பார்ஸலைக் கொண்டுவந்து அவன் கையில் கொடுத்துவிட்டு, "எங்கே, ரெயில் ரசீதை எடு" என்றான்.

கணேசன் அவனுக்குப் பதில் சொல்லாமலே அவசர அவசரமாக அந்தப் பார்ஸலைப் பிரித்தான். பிரமித்துப் போனான். மிகவும் அழகான பட்டுப் புடைவை ஒன்றும் ரவிக்கைத் துண்டு ஒன்றும் அதில் இருந்தன. "என்ன இது!" என்று ஆச்சரியம் தாங்காமல் வாய் விட்டுக் கூவினான். ஒரு கணத்தில் அவன் மனம் எப்படி எப்படியோ ஓடி ஒரு தீர்மானத்துக்கு வந்தது.

'ஆம்! கடைசியில் அப்பா ஆண் பிள்ளையென்று காட்டிக்கொண்டுவிட்டார். மாட்டுப்பெண்ணுக்கு அழகான புடைவை அனுப்பியிருக்கிறார். ரசீதும் கடிதமும்

அறையிலே கிடக்கும். விழுப்புரம் போகவேண்டியதுதான். முதல் வண்டியிலேயே போக வேண்டும்' என்று நினைத்தானே இல்லையோ, துள்ளி எழுந்தான். "சங்கரா! அப்பா என்னை விழுப்புரம் போகும்படியாகச் சொல்லி இதை அனுப்பியிருக்கிறார். கடிதமும் ரசீதும் அறையில் இருக்கும். ஏழு இருபதுக்கு முதல் வண்டி. எங்கே, ஒரு பத்து ரூபாய் தா. மற்றதையெல்லாம் அப்புறம் பேசிக்கொள்ளலாம்'' என்று வெகு வேகமாகப் பேசினான். சங்கரன் விஷயத்தைப் புரிந்துகொண்டான். அவன் பேசிய வாக்கியங்களுக்குள் தொடர்பை இட்டு நிரப்பிக்கொண்டான். பத்து ரூபாயைக் கொடுத்து, "போய்விட்டு வா அப்பா!" என்று உசிதமறிந்து விரைவாக அனுப்பினான்.

* * * *

பாதி ராத்திரியில் கதவை யாரோ இடிக்கும்போது யார் என்று கேட்க மாட்டார்களோ! வீட்டுக்கார அம்மாள் வேலை செய்த அலுப்பால் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள். வீட்டுக்காரரும் அப்படியே. குழந்தைகளைப்பற்றிச் சொல்ல வேண்டுமா? ஆனாலும் ஒரு ஜீவன் மட்டும் தூக்கம் வராமல் படுக்கையில் புரண்டுகொண்டிருந்தது; லக்ஷ்மிதான். அவள் காதில் மாத்திரம் கதவை இடிக்கும் சப்தமும், ஆத்திரத்தில் கணேசன் 'லக்ஷ்மீ!' என்று தன்னையே அழைக்கும் குரலும் கேட்டன. அவள் தான் கண்டுகொண்டிருந்த கனவில் ஒரு கட்டமென்று முதலில் நினைத்தாள். அடுத்து அடுத்துக் கதவை இடிக்கும் சப்தம் கேட்கவே, யாரோ உண்மையாகவே இடிக்கிறாரென்று தெரிந்தது. அவன் தன் நாயகன் என்று எண்ணினாள். ஆனால் ஆசாபங்கம் அடைந்திருந்த அவளுடைய உள்ளத்தில் அந்த எண்ணம் நிலைகொள்ளவில்லை.

அம்மாவை எழுப்பிவிட்டாள்; அப்பாவும் எழுந்திருந்து கதவைத் திறந்து பார்த்தார். "நீங்களா!" மேலே வார்த்தை ஓடவில்லை.

"நான்தான்; லீவு கிடைக்கவில்லை" என்று சொல்லிய படியே உள்ளே நுழைந்தான் கணேசன்.

பிறகு அவர்களுக்குத் தூக்கமா வரும்? "அப்பா அப்படி எழுதினாரே; நீங்கள் ஏன் வந்தீர்கள்?" என்று கேட்பார்களா? "அப்பா அம்மா வரவில்லையா?" என்று நாசுக்காகக் கேட்டார் மாமனார்.

"அசந்தர்ப்பத்தினால் வரச் சரிப்படவில்லை. என்னை மட்டும் போகும்படி எழுதினார்" என்று கணேசன் பதில் அளித்தான்.

லக்ஷ்மி இந்த உலகத்திலேயே இல்லை. எதிர்பாராத சந்தோஷம் முதலில் அவள் கண்ணில் நீரை உண்டாக்கியது. தன் அருமைக் காதலன் கொண்டுவந்த புடைவையைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்து போனாள்.

"என்ன இருந்தாலும் சம்பந்தியம்மாள் மனுஷர்களுடைய தராதரம் தெரிந்தவள்; மரியாதை தெரிந்தவள்" என்று மாமனார் சொல்வது காதில் விழுந்தது கணேசனுக்கு.

"தராதரம் கிடக்கட்டும். நம் குழந்தையின் சந்தோஷத்தை எண்ணிப்பாருங்கள். அதைக் கெடுக்கக் கூடாதென்று லக்ஷ்மியின் மாமனார் அனுப்பினாரே, அதைச் சொல்லுங்கள்!" என்று மாமியார் சொல்வதும் கேட்டது.

இந்த நிலையில் கணேசன் மாமனார் ஒரு தர்ம சங்கடத்தில் மாட்டிக்கொண்டார். மாப்பிள்ளை வரப்போகிறதில்லை என்று தெரிந்து போனதால் அவர் விசேஷமாக ஜவுளி ஒன்றும் வாங்கவில்லை. தமக்குச் சாதாரணமான ஒரு பத்தாறும், லக்ஷ்மிக்கு இருபது ரூபாயில் ஒரு நூல் புடைவையும், குழந்தைகளுக்கு வேண்டிய ஆடைகளும் வாங்கியிருந்தார். மாப்பிள்ளைக்கு ஒன்றும் வாங்கவில்லை. இப்போது என்ன செய்வது? கடைக்குப் போய் வாங்குவதென்றால் இந்த அகாலத்தில் முடிகிற காரியமா?

புத்திசாலிப் பெண்ணாகிய லக்ஷ்மி இந்த விஷயத்தைத் தன் காதலனிடம் குறிப்பாகத் தெரிவித்தாள். வேஷ்டிக்காகவும் பக்ஷணத்துக்காகவுமா அவன் வந்தான்!

"அந்த வேஷ்டியே போதும். நான் இனிமேல் கதர்தான் கட்டிக்கொள்ள வேண்டுமென்று தீர்மானித்திருக்கிறேன். கல்யாணத்துக்கு வாங்கின பட்டுக்கரை வேஷ்டிகளைக்கூட யாருக்காவது கொடுத்துவிடப் போகிறேன். அப்படி இருக்க, இப்போது வேறு காசைக் கொட்டி எடுக்க வேண்டாம்" என்று அவன் சொன்ன வார்த்தை அமிர்தம்போல் விழுந்தது மாமனார் காதிலே.

* * * *

கணேசன் தலைத் தீபாவளி அமோகமாக நடந்தது. கிரமமாக நடக்கிறபடி முன்கூட்டியே ஏற்பாடுகளுடன் எதிர்பார்த்து நடந்தால், இவ்வளவு சந்தோஷம் நிச்சயமாக இருக்க முடியாது. இப்போது அந்த இளம் தம்பதிகள் எந்த நிலையில் இருந்தார்கள் தெரியுமா? அதை வருணிக்க நமக்குச் சக்தி போதாது. சீதாபிராட்டி ராமபிரானுடைய மோதிரத்தைப் பெற்றபோது அடைந்த சந்தோஷ நிலையை,

> "இழந்தமணி புற்றரவு
> எதிர்ந்ததென லானாள்
> குழந்தையை உயிர்த்தமல
> டிக்குவமை கோணடாள்"

என்று பலவாறு கம்பர் வருணிக்கிறார். அதே நிலையில் இவர்கள் இருந்தார்கள் என்று சொல்லலாம். இந்த அபரிமிதமான சந்தோஷத்தில் கணேசன் இரண்டு நாள் அதிக லீவுக்குக்கூடக் கம்பெனி மானேஜருக்குக் கடிதம் எழுதிவிட்டான்.

அந்த நான்கு நாட்களும் அந்த வீடு சுவர்க்கலோகமாக இருந்தது. கணேசனும் லக்ஷ்மியும் இந்திரனும் இந்திராணியும்போல, மதனனும் ரதியும் போல, திருமாலும்

திருமகளும் போல—போதும்! நீங்களே உபமானம் சொல்லிக்கொள்ளுங்கள்.

* * * *

பிரிய மனம் வராமல் விடை பெற்றுக்கொண்டான். "அடுத்த தடவை வரும்போது அப்பாவைக் கதர் வேஷ்டி வாங்கி வைத்திருக்கச் சொல்கிறேன். நீங்கள் கட்டிக் கொள்ளலாம்" என்று குறும்புத்தனமாக லக்ஷ்மி சொன்ன போது அவனுக்கு உடம்பே தெரியவில்லை. அதிலும் 'கட்டிக்கொள்ளலாம்' என்பதை அழுத்திச் சொன்ன போது அவன் பூரித்துப் போனான்.

சுவர்க்கலோகத்தை விட்டுச் சென்னைமா நகரமாகிய நரகத்தில் மயிலாப்பூராகிய பகுதியில் அறையாகிய சிறைக்கு வந்து சேர்ந்தான். அறைக்குள்ளே கால் வைத்தானோ இல்லையோ, தபால்காரன் சந்து வழியாகப் போட்டிருந்த இரண்டு கடிதங்கள் உள்ளே கிடப்பதைப் பார்த்தான். ஒன்றில் கடிதமும் ரெயில்வே ரசீதும் இருந்தன. அவன் தகப்பனார் எழுதியிருந்தார்.

"....எல்லோரும் புது வேஷ்டி கட்டிக்கொள்ளும் போது நீ மாத்திரம் பழைய வேஷ்டியோடு இருந்தால் வருத்தமாக இருக்குமென்று இதை அனுப்பியிருக்கிறேன். நீ எண்ணெய் தேய்த்துக்கொள்ள வேண்டாமென்று அம்மா எழுதச் சொன்னாள். காலையில் இதைக் கட்டிக் கொள். பிழைத்துக் கிடந்தால் அடுத்த வருஷம் தீபாவளி கொண்டாடலாம்...."

வேஷ்டியா? புடைவை அல்லவா வந்தது? அவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. மற்றொரு கடிதத்தையும் பிரித்துப் பார்த்தான்:

"....துணி வாங்கிக் கட்டி அனுப்படா என்று சொன்னேன். முட்டாள்! அவசரமாகக் காகிதத்தில் சுற்றி அனுப்பிவிட்டான். அந்த அவசரத்தில் உன் அத்திம்பேர் விலாசம் எழுதின சீட்டையும் உன் விலாசம்

எழுதின சீட்டையும் மாற்றி ஒட்டிவிட்டான். உன் அக்கா, அம்மாவிடம் ரூபாய் கொடுத்து வைத்திருந் தாள். கொஞ்சங் கூடப் போட்டு அந்தப் புடைவையை வாங்கி அனுப்பினோம். இன்று அவளிடமிருந்து வந்த கடிதத்தால் பார்சல் மாறின சங்கதி தெரிந்தது. நீ ஏன் அதைப்பற்றி ஒன்றும் எழுதவில்லை? உடனே புடை வையை அத்திம்பேருக்கு அனுப்பிவிடு. பாவம்! தீபாவளி கொண்டாடாவிட்டாலும் புது வேஷ்டியாவது கட்டிக் கொள்ளட்டுமென்று, அம்மாவுடன் வாதாடி, வேஷ்டி வாங்கி உனக்கு அனுப்பினேன். அது உனக்குக் கிடைக்க வில்லை. 'பார்த்தீர்களா! தெய்வமே இப்படித்தான் செய்ய வேண்டுமென்று வழி காட்டுகிறது' என்று அம்மா இப் போது சொல்லிக் காட்டுகிறாள். இந்தக் கூத்தில் உன் அக் காவுக்குத் தீபாவளி சமயத்தில் புடைவை போய்ச் சேர வில்லை. அவள் என்ன பாவம் செய்தாள்? தெய்வச் செயலை யார் அறிவார்கள்?...."

கடிதம் கணேசன் கையிலிருந்து நழுவியது. அவன் வாயிலிருந்து, "தெய்வச் செயலை இப்போதும் அப்பா தெரிந்துகொள்ளவில்லை" என்ற வார்த்தைகள் நழுவின.

# பிச்சைக்காரி

## 1

உடம்பு முழுவதும் புண்ணுடன் குழந்தை வீரிட்டுக் கத்திக்கொண்டிருந்தது. அதன் தாய் பாலில்லாத மார்பில் அதை அணைத்துக்கொண்டு என்ன பிரயோசனம்? ஒரு கணத்தில் அந்தக் குழந்தைக்கு வயிறு நிறையப் பாலூட்ட வேண்டுமென்றுதான் அவள் தாயுள்ளம் நினைத்தது. ஆனால் உடம்பில் வலுவில்லையே! அவள் வயிறு நிறையச் சாப்பிட்டால்தானே பால் சுரக்கும்? அவள் நான்கு நாளாகப் பட்டினி. வெற்றிலை பாக்குக் கடைக்குப் பக்கத்தில் அவள் நின்றுகொண்டிருப்பாள். அங்கே வரும் கனவான் யாராவது ஒரு சீப்பு மலைப் பழத்தை வாங்கி வெகு வேகமாக வாயில் ஒவ்வொன்றாக உரித்துப் போடுவான். கண்களை அகல விரித்துக்கொண்டு அதை அவள் பார்ப்பாள். அந்த மனிதன் அவள் பக்கம் கண்ணைத் திருப்புவானா? திருப்பினாலும் அவள் உருவம் அவன் பார்வைக்குத் தட்டுப்படுமா என்ன?

ஒவ்வொன்றாக அவன் விழுங்கினால் அவளுக்கு எப்படிப் பசி தீரும்? பாவம்! மனசிலே அத்தனை பழத்தையும் தானே தின்றதாகப் பாவனை செய்துகொள்வாள். நாக்கில் சிறிதளவு நீர் சுரக்கும்; அதோடு சரி. ஆனால் ஒரு விஷயத்தை அவள் கற்றுக்கொண்டிருக்கிறாள். கனவான் தோலை உரித்துப் போட்டுவிடுவான். அதை எடுத்துச் சுவைப்பாள். அவளும் சரி, அந்தத் தோலும் சரி; சமூகத்தினரால் எறிந்துவிட்ட நிலையில் இருக்கும் வஸ்துக்கள்! இரண்டும் உறவாடுவது பொருத்தந்தானே?

போதாக்குறைக்கு அவளுக்கு இந்தப் புண் சுமை, குழந்தை என்ற உருவத்தில் வந்திருக்கிறது. மாட

மாளிகையில் ஆறு வேளை உண்ணும் சீமாட்டிகளைப் போல அவள் இந்தக் குழந்தை வேண்டுமென்று தவமா கிடந்தாள்? இல்லை, யாரோ ஒரு பிச்சைக்காரன் தந்த பிரசாதம் அது. அவளும் மனித உணர்ச்சி உள்ளவள் தானே? வயிற்றுப் பசிக்கு வேண்டியது கிடைக்கவில்லை என்றால் மற்றொரு பசியும் அவிந்துவிடுமா? அவளுக்குக் கட்டின புருஷன் என்று நியதியாக யாரும் இல்லை. அவளுக்குத் தகப்பனார் என்று குறிப்பிட்டுச் சொல்ல யாரும் இல்லாதபோது புருஷன் என்ற ஒருத்தனை மாத்திரம் வரையறுத்துக்கொள்ள வசதி ஏது? சமுதாயம் இந்தப் பரம்பரை உரிமையை அவர்களுக்கு விதித்திருக்கிறது.

யாரோ ஒருவனுடன் சில நாள் இருந்தாள். அவனும் அவளும் பசி அடங்கினபோது வந்த ஏப்பம்போலக் குழந்தை பிறந்தது. அவளுக்கு எப்படி அப்பா என்று சுட்டிக்காட்ட ஒருவன் இல்லையோ, அப்படியே இந்தக் குழந்தைக்கும் இல்லை. காதல் புரிந்த பிச்சைக்காரன் ஒரு வார நேசத்தோடு போய்விட்டான். பிறகு அவளைப் பற்றி அவனுக்கோ, அவளைப்பற்றி அவனுக்கோ கவலை இல்லை.

குழந்தை பிறந்த பிறகு அவள் தாயுணர்ச்சி இயற்கையிலேயே அவளைப் பற்றிக்கொண்டது. மாடமாளிகைகளில் வாழும் நாகரிக நாரீமணிகள் தவம் செய்து குழந்தைகளைப் பெறுவார்கள். வேண்டாமல் வந்த குழந்தைகளையும் கண்ணில் ஒரு சொட்டு நீர் விடாமல் குப்பையை எறிவதுபோல, அழுக்கைக் கழிப்பதுபோலக் கழித்துவிடுவார்கள். அவளோ குழந்தைக்குத் தவம் செய்யவும் இல்லை; பிறந்த பிறகு அதை எறியவும் இல்லை.

வயிறு புடைத்துப்போய் அழுத வண்ணமாக இருந்தது குழந்தை. வயிறு புடைத்திருப்பதாகத் தோன்றியதே ஒழிய உண்மை வேறு. உடம்பு முழுவதும் எலும்பும் தோலுமாக ஒட்டியிருப்பதால் வயிறு மாத்தி

ரம் புடைத்ததுபோல் இருந்தது. அந்தச் சின்னஞ் சிறு குழந்தைக்குக்கூட வாழைப்பழத் தோல் தின்னும் கலை தெரிந்திருந்தது.

யார் வீட்டிலாவது விசேஷம் நடந்தால் எச்சில் இலை போடுவார்களே, அதற்கு நாய்களும் பிச்சைக்காரர்களும் போட்டியிடுவார்கள். அந்தப் போராட்டத்துக்குக்கூட இப்போது வழியில்லாமல் போய்விட்டது. வீட்டுக்குள் நூற்றுக்கணக்கான பேர் சாப்பிட்டாலும் வெளியிலே இலை போடுவதில்லை. ரேஷன்காரன் வந்து கணக்கெடுத்து விட்டால் என்ன செய்வது? அத்தனை இலைகளையும் என்ன பண்ணுவார்களோ? பகவானுக்கே வெளிச்சம்! எறிகிற வஸ்துவுக்குக்கூடப் பஞ்சம் வந்துவிட்டது.

அவள் என்னதான் செய்வாள்! எங்கெங்கே மனிதர் கூட்டம் கூடுகிறதோ அங்கெல்லாம் தன் காட்சிப் பொம்மையாகிய குழந்தையையும் சுமந்துகொண்டு போய் உட்கார்ந்து கொள்வாள். திருவாதிரைத் திருநாள்: நடராஜப் பெருமான் ஆனந்த தாண்டவம் புரிந்த திருநாள். கோயிலுக்குள் ஜே ஜே என்ற கூட்டம். எப்போதும் மூன்றணுவுக்கு விற்கும் தேங்காய் அன்று ஐந்தணு. அப்படியும் கடைகளில் போதிய அளவு தேங்காய் இல்லை. வாழைப்பழம் என்று பேருக்குக் காம்பிலே ஒட்டிக்கொண்டிருக்கும் வஸ்துக்களையெல்லாம் அன்று பக்தர்கள் விலை கொடுத்து வாங்கினார்கள்.

வருஷத்துக்கு ஒரு நாள், திருவாதிரை. "அடே திருவாதிரையைப்போல் எத்தனையோ உற்சவங்களும் வருஷத்துக்கு ஒரு நாளாக அடுத்தடுத்து வருகின்றனவே! மொத்தத்தில் வாழ்நாளில் பாதி திருநாளாகவே வைத்திருக்கிறார்களே!" என்று கேட்கலாமா? 'வருஷத்துக்கு ஒரு நாள், வருஷத்துக்கு ஒரு நாள்' என்ற பல்லவியைப் பாடுவது நிற்கவே நிற்காது.

அந்த ஒரு நாளில் ஆனந்தமயமான மூர்த்தி ஆனந்தமயமான தாண்டவத்தைச் செய்தான். என்

றைக்கோ ஒரு நாள் செய்தான். அதை வருஷந்தோறும் கொண்டாடுகிறார்கள். 'குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும்' உடையவனாக நடனமாடினான் பெருமான்.

இப்போதும் அப்படியே ஆடுகிறானா? கோயிலுக்குள்ளே அவனைக் கட்டிப் பொம்மைக் கோலஞ் செய்து சுமந்து தூபதீபம் காட்டி, ஹரஹர என்று கன்னத்தில் அடித்துக்கொள்கிறார்களே, அந்தப் பக்தர்களுக்கு இன்னும் நடராஜப் பெருமான் ஆனந்த தாண்டவம் புரிகிறான் என்ற நிச்சயம் உண்டா?

அதோ கோயில் வாசலிலே புண் அழுகும் உருவம் படைத்த பிண்டத்தை மடியிலே கிடத்திக்கொண்டு வயிறு ஒட்டி வாயுலர்ந்த ஒரு பிச்சைக்காரி உட்கார்ந்திருக்கிறாளே, அவளைக் கண்டும் ஆண்டவன் ஆனந்த தாண்டவம் புரிவானா? உள்ளே தேவார திருவாசக முழக்கம்; பழமும் தேங்காயும் குவிகின்றன. வெளியிலே வெறும் எலும்புக் கூடுகள் இரண்டு கிடக்கின்றன.

"தர்மப் பிரபுக்களே! காலணாக் கொடுங்களேன்" என்று தொண்டையின் அடியிலிருந்து தொனியை எழுப்பிக்கொண்டு அவள் கேட்கிறாள். பாடத் தெரிந்த பரதேசிகளும், கொட்டாப்புளி போலக் கொழுத்திருக்கும் சோம்பேறிகளும் அந்த யாசகத் திருவாசலில் போடும் சப்தத்தில் அவள் தொனி எங்கே கேட்கப் போகிறது?

அவளுக்கு நடராஜ தரிசனம் வேண்டாமா? வேண்டாம்; ஒரு காலணா விழுந்தால் போதும். ஒரு முறை கைலாசம் போன இன்பம் உண்டாகும் அவளுக்கு.

குழந்தை தூங்கிக்கொண்டிருந்தது; களைத்துப் போய் மயக்கம் போட்டிருக்கலாம். அதைக் கவனிக்க டாக்டரா வரப்போகிறார்? பிச்சைக்காரி ஆகாசத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள். யோசனை ஒன்றும் செய்யவில்லை. நாளைக்கு இன்ன முயற்சி செய்யவேண்டுமென்ற திட்டம் இருந்தால்தானே யோசனை எழும்? வானம் சுத்த

சூன்யமாக இருந்தது போலவே, அவள் உள்ளமும் சூன்ய மாக இருந்தது. அது மரத்துப் போய்விட்டது. சென் றதை நினைத்துத் துக்கப்படவோ, வருவதை நினைத்துச் சந்தோஷப்படவோ அதற்குச் சக்தி இல்லை. ஜீவன் முக்த நிலை என்பது இதுதானோ?

பொத்தென்று ஏதோ சப்தம் கேட்டது. நினைப் பும் மறப்பும் அற்ற அவஸ்தையிலிருந்து இறங்கி வந்தாள். அவளுக்கு முன்னால் அணாக் காசு ஒன்று விழுந்து கிடந் தது. கையில் எடுத்துக்கொண்டே முன்னே பார்த்தாள். "அதை எடுத்துக்கொள்" என்ற இளங் குரலைக் கேட் டாள். யாரோ பையன், பத்து வயசுக்குள் இருக்கும். இந்தத் தர்மத்தைச் செய்திருக்கிறான். அவள் ஏதோ சொல்ல வாயெடுப்பதற்குள் அவன் உள்ளே போய் விட்டான். முழுசாக ஓரணாவைப் போட்ட அந்தப் பையன்தான் அவளுக்குத் தெய்வமாகப் பட்டான். உள்ளே இருக்கும் தெய்வத்தைப்பற்றி அவளுக்கு அக் கறை இல்லை. முகத்தில் சிறிது மலர்ச்சி உண்டாயிற்று.

## 2

இன்று ரஸிக ரஞ்சனி சபையில் ஏதோ உதவிக் கச் சேரியாம். மயிலாப்பூர் பங்களாக்களில் ஒரு பெண்மணி பாக்கியில்லை; மாம்பலம், நுங்கம்பாக்கம், திருவல்லிக் கேணி, பட்டணம் எல்லாப் பகுதிகளிலிருந்தும் கூட்டம் வந்திருக்கிறது. பத்து ரூபாய், இருபது ரூபாய் என்று கொடுத்து டிக்கட் வாங்கியிருக்கிறார்கள் கனவான்கள். பிரசித்தமான ஒருவர் கட்டப்போகிற அநாதை விடுதிக் காக அந்தக் கச்சேரி நடைபெறுகிறது. சினிமா நட்சத் திரம் ஒன்று அன்று புது ராகத்தைப் பொழியப் போகி றது. கேட்க வேண்டுமா உற்சாகத்துக்கு? ஆறு பெருக் கெடுத்துப் போவது போலக் கூட்டம் போய்க்கொண்டே இருக்கிறது. சங்கீதத்தைக் கேட்கவும் அதன் மூலமாகத் தர்ம கைங்கரியத்துக்கு உதவி செய்யவும் போய்க்கொண் டிருக்கிறது. நகரத்து ஜவுளிக் கடையில் எத்தனை வித

மான ஆடை வகைகள் உண்டு என்பதைக் காணவேண்டுமானால், கடைகளுக்குப் போகவேண்டாம்; இந்த இடத்தில் அரை மணி உட்கார்ந்து பார்த்தால் போதும். சினிமாச் சுருள் ஓடுவதுபோல உங்கள் கண்முன் நாகரிக ஆடைகள் ஓடிக்கொண்டிருக்கும். இந்தியாவிலே பஞ்சமென்று யார் சொன்னார்கள்? இந்த ரஸிகர்களுடைய கூட்டத்தைப் பார்த்துவிட்டு அப்படிச் சொல்லும் பைத்தியக்காரர்களும் இருப்பார்களா? ஆடைக்கும் ஆபரணத்துக்கும் நடமாடும் காட்சிச் சாலையாக இருக்கும் எத்தனை வனிதா ரத்தினங்களைப் பார்க்கிறோம்! சிரிப்பும் கோலாகலமும் குதூகலமும் நிரம்பின பெரிய மனிதர்கள் எத்தனை பேர் காட்சி அளிக்கிறார்கள்! கலையுலகத்தை நிறுத்துப் பார்க்கும் இளைஞர்கள் எத்தனை பேர் அங்கே வருகிறார்கள்! இந்திர லோகத்தில் இந்தக் காட்சி உண்டா?

அங்கேதான் அவள் வழி ஓரத்திலே நின்றுகொண்டிருந்தாள். பிறகு உட்கார்ந்து கொண்டாள். ஆடை, அணி, சோறு, சுகம், சிரிப்பு, உற்சாகம் என்பவைகளுக்கு அப்பாற்பட்டவள் அவள். மடியிலே கிடக்கும் எலும்புக் கூட்டின் அழுகைச் சங்கீதந்தான் அவளுக்குத் தெரியும். ரஸிகர்கள் கூட்டத்துக்கும் அவளுக்கும் எந்த விதத்திலும் சம்பந்தமே இல்லை. ஆனாலும் ரஸிகர்களின் ஆடை அணிகளின் பெருமையை அளக்க அவள் அளவுகோலாக உதவுவாள்.

கச்சேரி ஆரம்பிப்பதற்குமுன் இடம் பிடித்துக் கொள்ள வேண்டும் என்ற வேகத்தில் எல்லோரும் போய்க்கொண்டிருக்கிறார்கள். சபைக்கு உள்ளே மேடையின்மேல் கலையானது தர்மத்துக்கு அஸ்திவாரம் போடப் போகிறது. கலாரஸிகர்கள் தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக வேகமாகப் போகிறார்கள். அவர்கள் கண்களில் பிச்சைக்காரி விழுவதென்பது சாத்தியமா? அவ்வளவு தூரத்துக்கு அவர்கள் கலைக்கண்கள் கெட்டுப் போய் விடுமா?

"டிக்கெட் விலை ஐந்து ரூபாய்; அதை வாங்க ஒரு ரூபாய் லஞ்சம் கொடுத்தேன்" என்கிறான் ஒருவன்.

"எங்கள் வீட்டுக்கு நாலு டிக்கெட்டுகள் வந்தன. நான் ஒருத்திதான் வந்தேன். வேறே யாருக்கும் மற்ற டிக்கெட்டுகளைக் கொடுக்கக் கூடாதென்று அப்பா சொல்லி விட்டார். இலவசமாக யாரும் இன்றைக்குப் போகக் கூடாதாம்! தர்மகாரியம் அல்லவா?" என்பது ஒரு மட மங்கையின் குயிலனைய குரல்.

இளம் சிறுவன் ஒருவன் சொல்லுகிறான்: "சித்தி, அதோ பார். அந்தப் பிச்சைக்காரி சாப்பிட்டு ஒரு மாசம் ஆகியிருக்கும்போல இருக்கிறதே!"

"சரிதாண்டா, பைத்தியம்! இந்த அவலக்ஷணத்தையெல்லாம் பார்க்கத்தான் வந்தாயா? வா வேகமாக, கச்சேரி ஆரம்பித்துவிடுவார்கள்." - இப்படி அவனை அதட்டி இழுத்துச் சென்றாள் அந்தப் பெண்மணி.

அவன் நகரவில்லை. "இதோ வருகிறேன்" என்று நழுவினான். அவள், "நீ எக்கேடு கெட்டால் என்ன? நான் போகிறேன்" என்று போய்விட்டாள்.

பிச்சைக்காரிக்கு இன்றும் ஓர் அணாக் கிடைத்தது. நிமிர்ந்து பார்த்தாள்; திருவாதிரையில் அணாவைப் போட்ட அதே பையன். "சாமி....." மேலே ஒன்றும் அவன் காதில் விழவில்லை; போய்விட்டான்.

## 3

அவர்கள் நட்பு வளர்ந்து வந்தது. நட்பு என்று சொல்வது பொருத்தமாக இல்லை. இருவரும் ஒரு நிலையில் இருப்பவர்கள் அல்லவே! அவன் அவளிடம் இரக்கம் காட்டினான்; தன்னை அறியாமலே இரங்கினான். "இந்தா அம்மே; எங்கள் பள்ளிக்கூடத்துக்குத் தினம் மத்தியான்னம் ஒரு மணிக்கு வா. உனக்குக் காசு தருகி

றேன்" என்று ஒரு நாள் அவளிடம் சொன்னான். அது முதல் தவறாமல் பி. எஸ். ஹைஸ்கூலின் வாசலில் அவள் வந்து காத்துக்கொண் டிருந்தாள். மணிக்கணக்கு அவளுக்கு எங்கே தெரியப்போகிறது? பத்து மணிக்கே வந்து விட்டாள். பணம் கிடைக்கும் என்ற ஆவலால் வெயிலில் உட்கார்ந்துகொண் டிருந்தாள். ஒரு மணிக்குக் கோபாலன் வந்தான். ஆம், அவன் பெயர்தான். பசுக்களிடத்திலும் குழந்தைகளிடத்திலும் கருணை பூக்கும் கண்ணனுடைய அழகிய பெயர். "அதோ, அந்த ஆலமரத்து நிழலிலே உட்கார்ந்திருக்கலாமே! வெயிலிலே குழந்தையை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறாயே!" என்றான் அவன்.

இதென்ன! அவளுக்குக்கூட அந்தக் குழந்தையிடம் அத்தனை கரிசனம் இருக்காதுபோல் இருக்கிறதே! அவளுக்கு வெயிலும் தெரியவில்லை, நிழலும் தெரியவில்லை. அந்தச் சிறு பிள்ளையினுடைய முகந்தான் அவள் உள்ளத்திலே குடிகொண் டிருந்தது.

அன்று அவன் இரண்டணாக் கொடுத்தான். அது முதல் அதுவே வழக்கமாகிவிட்டது. நாலைந்து நாள் வந்த நிதானத்தால் அவளுக்கு ஒரு மணி இன்ன நேரம் என்ற கால வரையறை திட்டமாகத் தெரிந்தது. அரை மணிக்கு முன்னாலே அவள் வந்து பக்கத்திலுள்ள ஆலமரத்து நிழலில் காத்திருப்பாள். ஒரு மணிக்குப் பிள்ளைகளெல்லாம் வெளியிலே வரும்போது ஆலமரத்தடிக்கு வந்து கோபாலன் பிச்சைக்காரிக்கு இரண்டணாக் கொடுப்பான். அவள் குழந்தையைப்பற்றி விசாரிப்பான். மற்றப் பையன்களெல்லாம் அதே ஆலமரத்தடியிலே சுடச்சுட நிலக்கடலை விற்கும் வியாபாரியிடம் போவார்கள்; கடலை வாங்கித் தின்பார்கள். மாம்பழத்தைத் துண்டு போட்டு விற்கும் கிழவியிடம் போவார்கள்; அதை வாங்குவார்கள். அந்த ஆலமரம் இந்தச் சில்லறை வியாபாரத்துக்கும் இளம்பிள்ளையின் தர்மத்துக்கும் நிழல் கொடுத்துக்கொண்டு நின்றது.

அதன் நிழலிலே எங்கோ பிறந்து காற்றையும் வெயிலையும் தோழர்களாகப் பெற்ற பிச்சைக்காரிக்கும் மாளிகையின் நிழலிலே வளரும் கோபாலனுக்கும் இடையே ஒரு வகையான பாசம் இறங்கிவந்தது.

அந்த வேளையில் எல்லாப் பிள்ளைகளும் கடலையும் மாம்பழமும் வாங்கித் தின்றுகொண் டிருக்க அவன்மட்டும் பிச்சைக்காரிக்கு அணாவைக் கொடுத்துவிட்டுப் பேசிக்கொண்டிருப்பதென்றால் அது விநோதமல்லவா? அதுவும் ஒரு நாளைப்போலவே தினந்தோறும் இது நடந்து வருகிறது. மற்றப் பையன்களுக்கு இது பெரிய வேடிக்கையாகிவிட்டது. "என்னப்பா, அந்தப் பிச்சைக்காரி யாரப்பா? உனக்கும் அவளுக்கும் என்ன சொந்தம்? எதற்காக அவளுக்குப் பணம் கொடுக்கிறாய்?" என்று ஒரு பையன் கேட்டான்.

"சொந்தக்காரர்களுக்குத்தான் உபகாரம் செய்ய வேணுமா? பாவம் பிச்சைக்காரி! கஷ்டப்படுகிறாள். அதற்காகக் கொடுக்கிறேன்" என்பான் கோபாலன்.

"எத்தனையோ பிச்சைக்காரர்கள் இருக்கும்போது இவளுக்கு மாத்திரம் கொடுப்பானேன்?"

"இவள்தான் தினமும் வருகிறாள்."

"இவள் எதற்காக வருகிறாள்?"

"நான் கொடுக்கிறதனாலே."

"நீ எதற்காகக் கொடுக்கிறாய்?"

இந்தக் கேள்வியும் பதிலும் மாறி மாறி முடிவடையாமலே நீளும். ஒரு பையன் கிண்டலாகப் பேசுவான். மற்றொருவன் கோபம் வரும்படி பேசுவான்.

அந்தப் பிச்சைக்காரியிடம் எதற்காக அவனுக்கு அத்தனை பற்று? அவளுக்கும் அவனுக்கும் என்ன தொடர்பு? அவனுக்கே விளங்காத கேள்விகள் இவை. ஆனால் அவளுக்கு இரண்டணாக் கொடுப்பதனால் அவள்

அடையும் ஆனந்தம் இருக்கட்டும்; அவனுக்கே அலாதியான திருப்தி. அவன் மனசு அப்படி என்பதைத் தவிர வேறு என்ன சொல்ல முடியும்?

ஒரு நாள் தன் சிநேகிதர்களின் அலைக்கழிப்புத் தாங்காமல் அவன் சொன்ன பதில் தூரத்தில் இருந்தபடியே கேட்டுக்கொண்டிருந்த வாத்தியார் ஒருவருடைய மனசை உலுக்கிவிட்டது. "எனக்கு அம்மா இல்லை. அம்மாவை நான் பார்த்ததே இல்லை. செத்துப்போனவர்கள் மறுபடியும் பிறந்து, யாரிடம் பாசம் வைத்திருக்கிறார்களோ அவரிடம் வருவார்கள் என்று சொல்கிறார்களே; அப்படி இந்தப் பிச்சைக்காரியும் வந்திருக்கிறாள் என்று நினைக்கிறேன்" என்றான். இது அவன் ஏதோ காரணம் சொல்வதற்காகச் சொன்னது. அவனுக்குப் பத்து வயசு. அம்மா செத்துப்போய் ஒன்பதரை வருஷங்களே ஆயின. அதற்குள் அவள் பிறந்து இத்தனை வயசுள்ள பிச்சைக்காரி ஆகிவிட்டாளா? ஆக முடியுமா? இந்த நியாயங்களையெல்லாம் அவன் யோசிக்கவில்லை. என்னவோ சொல்லி வைத்தான். ஆனால் அதனூடே உண்மை இல்லாமல் போகவில்லை. தாய் என்று ஒருவரிடத்தில் அன்பு வைக்கும் பாக்கியம் அவனுக்கு இல்லை. அது அவனுக்குக் குறையாகவே இருந்தது. சாக்ஷாத் தாயினிடம் வைக்கும் பிரியத்தை அப்படியே மற்றோர் இடத்தில் வைத்ததாகச் சொல்ல முடியாது. ஆனாலும் அந்தக் குறையை நிரப்பிக் கொள்ள அவன் உள்ளம் ஏங்கிக் கிடந்தது. பிச்சைக்காரியிடம் காட்டும் இரக்கம் - அன்பு - அதற்கு ஈடுசெய்ய வந்தது போலும்!

இது எப்படியாக இருந்தாலும் அவனுக்கு அவளிடத்திலே, உருவத்தையும் நிலையையும் தரித்திரத்தையும் அவலக்ஷணத்தையும் எலும்பையும் தோலையும் கடந்து நிற்கும் ஓர் அன்பு - கருணையென்று சொல்லுங்கள், தர்மபுத்தியென்று சொல்லுங்கள், ஈரமென்று சொல்லுங்கள் - ஓர் உயர்ந்த உணர்ச்சி ஏற்பட்டது.

"ஞாயிற்றுக்கிழமை பள்ளிக்கூடம் இல்லையே; அவள் கஷ்டப்படுவாளே!" என்ற கவலைகூட அவனைப் பற்றியது. அதன் விளைவாகச் சனிக்கிழமையன்று அவளுக்கு நாலணுக் கிடைத்தது.

## 4

விஷயம் பையன்களோடு நிற்கவில்லை. வாத்தியார்கள் காதுக்கும் எட்டியது. அவர்கள், "பைத்தியம்!" என்று தான் அவனை மதித்தார்கள். கோபாலன் வீட்டுக்கும் இந்தத் தர்மச் செய்தி சென்றது. பக்கத்து வீட்டுப் பையன் இந்த அதிசயத்தைத் தன் பாட்டியிடம் சொன்னான். அவள் கோபாலனுடைய சிறிய தாயின் காதில் போட்டாள். அந்த அம்மாள் கிருஷ்ணமூர்த்தி ஐயரின் இரண்டாந்தாரம்; கோபாலனுக்கு மாற்றாந்தாய்.

நெருப்புப் பற்றிக்கொண்டது. "உங்கள் அருமைப் பிள்ளையைப் பார்த்தீர்களா? பிறக்கிறபோதே தர்மப்பிரபு ஆகிவிட்டான். நோட்டுக்கென்றும் புத்தகத்துக்கென்றும் வாங்கிக்கொண்டு போகிற காசை யாரோ பிச்சைக்காரிக்குக் கொடுக்கிறானும்!" என்ற அறிக்கையில் ஆரம்பித்தது போர்.

கிருஷ்ணமூர்த்தி ஐயர் முதலில் நம்பவில்லை. பிறகு உண்மையை உணர்ந்தார். அவர் தர்மபுத்தி உள்ளவரே; அன்னதான சமாஜத்துக் காரியதரிசி. ஆனால் என்ன? தினந்தோறும் தர்மம் செய்ய முடியுமா? பிச்சைக்காரிக்கு நிரந்தரமாகச் சம்பளம் ஏற்படுத்திக் கொடுப்பதாகவல்லவா இருக்கிறது அவன் செய்கிற காரியம்? அவனுக்குச் சம்பளம் வேறு, அவளுக்குச் சம்பளம் வேறு? இதென்ன பைத்தியக்காரத்தனம்? பைத்தியக்காரத்தனமா? மடத்தனம். மடத்தனமா? அதிகப்பிரசங்கித்தனம்; அயோக்கியத்தனம்; திருட்டுத்தனம்! அவர் விமரிசனம் ஆலமரம்போல விழுது மேல் விழுது விட்டுப் படர்ந்தது.

அவனைக் கேட்டார். அவன் சாக்குப் போக்குச் சொன்னான். "நீங்கள் கொடுக்கிற காசுக்கு நான் ஒன்றும்

வாங்கித் தின்கிறதில்லை; அவளுக்குக் கொடுத்து விடுகி றேன்'' என்ற உண்மையைக் கக்கினான்.

"நீ தின்னாமல் அவளுக்கு யார் கொடுக்கச் சொல் கிறார்கள்? பட்டினி கிடந்து உனக்கு உடம்புக்கு வந்தால் என்ன செய்கிறது? டாக்டருக்கு வேறு பணம் கொடுக்க வேண்டி வரும். முட்டாள்'' என்று கண்டித்தார். அவன் பதில் ஒன்றும் சொல்லவில்லை.

தர்மம் நடந்துகொண்டுதான் இருந்தது. கிருஷ்ண மூர்த்தி ஐயர் தாம் கொடுப்பதைக் குறைத்துக் கொண் டார். எது கொடுத்தாரோ அதை அப்படியே பிச்சைக் காரிக்குக் கொடுத்துவிடுவான். "முன்போல உனக்குக் கொடுக்க முடியவில்லை. எனக்கே காசு கிடைக்கிறதில்லை'' என்று அவன் அழாக் குறையாகச் சொல்வான். "கொடுக் கிறது போதும் சாமி; எனக்கு எது கிடைக்குமோ அது தான் கிடைக்கும்'' என்று அவள் ஆறுதல் தொனியோடு பேசுவாள்.

கொஞ்ச நஞ்சம் காசு கொடுப்பதையும் அவன் தகப் பனார் நிறுத்திக்கொண்டார். புத்தகம், சம்பளம், நோட்டு எல்லாவற்றுக்கும் ரசீது வாங்கிக்கொள்வார். மிச்சம் பிடிக்க வசதியில்லை.

அவன் என்ன செய்வான்! அவளுக்கு நாலு நாளாக ஒன்றும் கொடுக்கவில்லை. யாரோ ஒரு சிநேகிதனிடம் எட்டணக் கடன் வாங்கி, ஒவ்வோரணாவாகக் கொடுத்து வந்தான். எட்டணா எத்தனை நாளுக்கு வரும்? பிச்சைக் காரி கிடைத்ததை வாங்கிக்கொண்டாள். அவள் அதிகக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அவன்தான் கவலைப் பட்டான். நாளைக்கு வேண்டுமே என்ற விசாரம் அவளுக்கு இல்லை; ஆனால் அவளுக்காக அவன் விசாரப்பட் டான்.

கடன் வாங்கினதைத் திருப்பிக் கொடுக்கவேண்டும். இது ஒன்று. இரண்டாவது, மேற்கொண்டு அவளுக்குக்

காசு கொடுத்துவரவேண்டும். இதற்கு என்ன செய்வது? வீட்டிலிருந்து பணத்தைத் திருடலாமா? இந்த நினைவு வந்தபோது அவன் உடம்பு நடுங்கியது. "கூடவே கூடாது" என்று தீர்மானம் செய்துகொண்டான். வேறு இடங்களில் திருடுவதைப்பற்றிய எண்ணமே அவன் உள்ளத்தில் எழவில்லை.

இந்தச் சமயத்தில்தான் அவனுக்கு ஒரு புதிய உலகம் தென்பட்டது. ஒரு நாள் தன் தகப்பனாருடன் புரசவாக்கம் போயிருந்தான். பஸ் ஸ்டாண்டில் ஐயங்கார்ப் பையன் ஒருவன் நின்றுகொண்டிருந்தான். "ஸார், எனக்குச் சம்பளம் கொடுக்கப் பணமில்லை ஸார். ஏதாவது கொடுங்கள்" என்று பஸ்ஸிலிருந்து இறங்கின கிருஷ்ணமூர்த்தி ஐயரைக் கேட்டான். அவர் அவன் முகத்தைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே நாலணாவை எடுத்துக் கொடுத்துவிட்டு நடந்தார். போகும்போது, "பாவம்! பையனைப் பார்த்தால் சுறுசுறுப்பாக இருக்கிறான். படிக்க வைத்தால் நன்றாகப் படிப்பானென்று தெரிகிறது. ஏழை வீட்டிலே பிறந்திருக்கிறான்" என்று தம் அநுதாபத்தை வெளியிட்டார்.

இந்தச் சம்பவம் கோபாலன் உள்ளத்திலே பதிந்தது. சுத்தமாகத் தலையை வாரிக்கொண்டிருந்தான் அந்தப் பையன்; நெற்றியில் திருமண் தரித்திருந்தான். அவன் முகத்தைப் பார்த்து நாலணாக் கொடுத்தார் தகப்பனார். ஏழைப் பிச்சைக்காரனாக இருந்தால் காலணாக் காசு போட்டிருப்பாரா என்பது சந்தேகம். பையன் கேட்டதும் பிச்சைதான்; பிச்சைக்காரன் கேட்பதும் பிச்சைதான். ஆனால் இருவருக்கும் இடையே எத்தனை வித்தியாசம்!

அவன் சிந்தனை எங்கெங்கோ ஓடியது. ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்தான். அவன் முகம் மலர்ந்தது. தீர்க்க முடியாத சங்கடம் ஒன்றைத் தீர்க்கும் வழி கண்டு பிடித்தவனைப்போலப் பெருமூச்சு விட்டான்.

## 5

"நாளைக்கு என் சிநேகிதன் வீட்டுக்குப் போய்ப் பாடம் படிக்கப் போகிறேன். கணக்கில் எனக்குப் போதாது. அவன் கெட்டிக்காரன். ஞாயிற்றுக்கிழமை ஞாயிற்றுக்கிழமை அவன் வீட்டுக்குப் போய்ப் படித்து விட்டு வருகிறேன்" என்று நயமாகத் தகப்பனாரிடம் சொன்னான் கோபாலன்.

தம் பையன் பிச்சைக்காரியை மறந்துவிட்டதாக அவருக்கு ஞாபகம். நல்ல பிள்ளையாகிக்கொண்டு வருகிறானென்ற சந்தோஷத்தில் அநுமதி கொடுத்துவிட்டார். அவனோ அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டான். புரசவாக்கத்தில் அந்த ஐயங்கார்ப் பையன் செய்த காரியத்தை அவனும் செய்யத் தொடங்கினான். மயிலாப்பூரிலேயே செய்தால் அப்பாவுக்குத் தெரிந்து போய்விடும்; ஆகையால் திருவல்லிக்கேணிக்குப் போனான்.

அது அவன் நினைத்தபடி அவ்வளவு சுலபமான காரியமாக இருக்கவில்லை. யாசகம் பண்ணும் துணிவு அவனுக்கு வரவில்லை. நாக்கு எழும்பமாட்டேன் என்கிறது. உடல் வேர்க்கிறது.

பஸ் நிறுத்தத்தில் நின்றுகொண்டான். சிறிது நேரம் வெறுமனே வருபவர்களையும் போகிறவர்களையும் பார்த்துக்கொண்டே நின்றான். யாரைக் கேட்பது? யாரைக் கேட்காமல் இருப்பது? என்ன கேட்பது? "சம்பளம் கொடுக்கப் பணம் இல்லை" என்றுதான் கேட்கவேண்டும். இந்த யோசனையில் நெடுநேரம் ஆழ்ந்திருந்தான்.

துணிவை அதிகமாக்கிக் கொண்டான். பஸ்ஸிலிருந்து இறங்கினவர்களைப் பார்த்துக்கொண்டு நிற்பதை விட்டுவிட்டு ஒருவரை அணுகினான். அவருக்குப் பக்கத்தில் போனதுதான்; மேலே வாய் எழும்பவில்லை. பேசாமல் நின்றான். அவர் தம் பாட்டில் போய்விட்டார். இது இரண்டாவது கட்டம். மூன்றாவது கட்டத்தையும் துணிவாக அணுகினான்; முயன்றான்; வென்றான்.

யாரோ ஒரு கதர் ஜிப்பா போட்ட கனவானிடம் போய், "சம்பளம்..." என்று கேட்டுவிட்டு நின்றான்; வாக்கியத்தை முடிக்கவில்லை. அவன் கண்களில் நீர் ததும்பியது. புதிய காரியத்தில் தைரியம் வராததுதான் காரணம். அவரோ, அவன் உண்மையில் கஷ்டப்படுகிற வனென்று நினைத்துக்கொண்டார். "என்ன வேண்டும்?" என்று அன்பொழுகக் கேட்டார். "சம்பளம் கொடுக்கப் பணம் இல்லை" என்று, உருப்போட்டு வைத்திருந்ததைத் தட்டுத் தடுமாறி ஒப்பித்தான். அவன் தொண்டை கர கரத்தது; குரல் தடுமாறியது. அவ்வளவும் அவனுக்கு அநு கூலமாகவே முடிந்தன. அந்த மனுஷருடைய உள்ளத்திலே கருணை சுரக்கச் செய்தன. முழுசாக ஒரு ரூபாய் அவன் கையில் விழுந்தது. அவன் திடுக்கிட்டுப் போனான். நம்பக் கூட முடியவில்லை. ஒரு ரூபாய்! எட்டு நாளைக்குக் கொடுக்க லாம் - அந்தப் பிச்சைக்காரிக்குத்தான்.

அவன் அந்தத் தொழிலைப் பழகிக்கொண்டான். ஆனாலும் தர்மத்தின் பொருட்டுத்தான் பழகினான். பஸ் அடியில் யாசகம்; ஆலமரத்தடியில் தர்மம்.

தந்திரம் செய்யவேண்டுமென்று வந்துவிட்டால் அதற்கு ஏற்ற அறிவும் தானாக வந்துவிடுகிறது. அவன் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் ஒரே இடத்துக்குப் போவதில்லை. சென்னப்பட்டணத்தில் இடத்துக்குத்தானா குறைச்சல்? அவனுடைய முகவிலாசமும் தோற்றமும் சிலருக்குச் சந்தேகத்தை உண்டாக்கின; சிலருக்கு இரக்கத்தை எழுப்பின; சிலருக்குக் கோபத்தை உண்டாக்கின. அவன் எத்தனையோ அநுபவங்களைப் பெற்றான். அவமதிப்பை அடைந்தான். ஒவ்வொரு தடவையும் அவன் உள்ளம் போராடியது. ஆனாலும் விடாப்பிடியாகத் தன் காரியத்தைச் சாதித்தே வந்தான்.

அதிகப்படியான காசு வந்தால் சில நாள் பிச்சைக் காரிக்குக் கூடக் கொடுப்பான். ஒவ்வொரு நாளும் அவளுக் குத் தவறாமல் பணம் கொடுக்கத் தக்கபடி அவன் கணக்குப்

போட்டுப் பார்த்துக்கொள்வான். தன் தகப்பனாரிடம் சொன்னபடி தன் பள்ளிக்கூடத்துக் கணக்கை அவன் போடாவிட்டாலும், இந்தக் கணக்கைப் போட்டு வந்தான்.

திடீரென்று முக்கியமான தகவல் வந்ததால் கிருஷ்ணமூர்த்தி ஐயர் வெளியூருக்குப் புறப்பட்டார். காலை 9-மணி வண்டிக்குப் புறப்பட்டார். அதற்கு முன்பே கோபாலன் தன் வேலைக்குப் போய்விட்டான். அவனுக்குத் தகப்பனார் ஊருக்குப் போவது தெரியாது. அவர் எழும்பூர் ஸ்டேஷனுக்கு முன்னால் பஸ்ஸிலிருந்து இறங்கும்போதுகூட அவன் பார்க்கவில்லை. முன் பஸ்ஸிலிருந்து இறங்கிய ஒருவரிடம் அவன் நாடகம் நடித்துக்கொண் டிருந்தான். அவர் சில கேள்விகளைக் கேட்டார். அவன் பதில் சொல்லிக்கொண் டிருந்தான். கிருஷ்ணமூர்த்தி ஐயர் பின் பஸ்ஸிலிருந்து இறங்கியவர் அவன் முதுகைத்தான் பார்க்க முடியும். வண்டிக்கு நேரமாய்விட்டதென்று வேகமாக இறங்கின அவர், கோபாலன் அங்கே கை நீட்டிக்கொண்டு நிற்பதைக் கண்டார். "எங்கள் அப்பா ஏழை; சம்பளம் கொடுக்கப் பணம் இல்லை..........." என்ற வார்த்தைகள் அரைகுறையாக அவர் காதில் விழுந்தன. அவர் ரத்தம் கொதித்தது. "ஏய்!" என்ற அவரை அறியாமல் வாய் கூவியது. அடுத்த கணம் நிதானித்துக்கொண்டார். அந்தச் சமயத்தில் அவனைக் கூப்பிட்டாலும் பேசினாலும் மானம் போய்விடும் என்ற நினைவு வந்தது. ஒரே கணம் இந்தத் தடுமாற்றம். 'பிறகு பார்த்துக்கொள்ளலாம்' என்று வேகமாக ஸ்டேஷனுக்குள் நுழைந்துவிட்டார்.

அவர் கூப்பிட்டது கோபாலன் காதில் அரைகுறையாகத்தான் விழுந்தது. தன் தகப்பனாரென்று நினைக்கவில்லை. அப்போதுதான் அவன் நாடகம் பலிக்கிற சமயம். எதிரே நின்றவர் பணப் பையை எடுத்துப் பணம் கொடுத்தார். அதை வாங்கிக்கொண்டு திரும்பினான். ஸ்டேஷனுக்குள் கைப் பையுடன் நுழைந்துகொண் டிருந்த தகப்பனாரைப் பார்த்துவிட்டான். 'ஏய்!' என்ற சப்தம்

இப்போது தெளிவாக ஞாபகத்துக்கு வந்தது. அவர்தாம் கூப்பிட்டிருக்க வேண்டும்.

அவன் தலை சுழன்றது; கால் தடுமாறியது; கையுங் களவுமாக அகப்பட்ட திருடனைப்போல மார்பு படபட வென்று அடித்துக்கொண்டது. அப்படியே பக்கத்தி லுள்ள ஹோட்டல் சுவரோடு சாய்ந்துவிட்டான்.

மூர்ச்சை தெளிந்து எழுந்தபோது அவன் ஹோட்ட லுக்குள் இருந்தான். யாரோ ஒருவர் விசிறிக்கொண் டிருந் தார். மெல்ல ஒவ்வொன்றாக நினைவுக்குக் கொண்டு வந் தான். அவன் உள்ளத்தில் அச்சம் ஆணியடித்தாற்போல் பதிந்துவிட்டது. அதிலிருந்து பயங்கரமான காட்சிகள் பிரிட்டன.

அருகில் இருந்தவர், விலாசம் விசாரித்துக்கொண்டு அவனை அவன் வீட்டில் கொண்டுபோய் விட்டுவர ஏற்பாடு செய்தார். அவனுக்கு ஏற்பட்ட அதிர்ச்சி அவ னைச் சும்மா விடவில்லை. ஜுரத்தைக் கொண்டுவந்து விட்டது.

* * *

கிருஷ்ணமூர்த்தி ஐயர் ரெயிலில் ஏறினார். அவர் மன சில் சற்று முன் கண்ட காட்சியும் ஏறிக்கொண்டது. முதலில் அவருக்கு அங்கேயே அவனைப் பலிவைக்க வேண்டுமென்ற கோபம் வந்தது. ஆனால் வண்டியில் ஏறின பிறகு நிதானமாக யோசித்தார். அவன் எதற்காக இப்படிச் செய்கிறான்? அவனுக்குப் பணம் எதற்கு? சம்பளப் பணம் கொடுக்க அவர் என்றைக்கும் தடை சொன்னதே இல்லையே!

பிச்சைக்காரியின் ஞாபகம் அப்போது அவருக்கு வந்தது. உண்மையும் புலப்பட்டது. ஆம், அவ னுக்குப் பணம் வேண்டும். பள்ளிக்கூடச் சம் பளத்துக்காக அல்ல; அவளுக்குக் கொடுக்க. அந்த விஷயத்தில் அவருடைய பணந்தான் அவனுக்குக் கிடைக்கவில்லையே! "எங்கள் அப்பா ஏழை" என்ற

வார்த்தைகள் அவர் காதில் விழுந்தபோது அவருக்கு ஆத்திரம் வந்தது. இப்போது, பழைய ஞாபகங்களை வைத்துக்கொண்டு பார்க்கும்போது, அவருக்கு வேறு விதமான எண்ணங்கள் எழுந்தன. அந்த விஷயத்தில் அவர் பணம் உபயோகப்படவில்லையே! அந்த மட்டில் அவர் ஏழைதானே?

அவர் அன்னதான சமாஜக் காரியதரிசி. அதாவது பலரிடம் பணம் கேட்டுச் சேர்த்துத் தர்மம் பண்ணுகிறார். அவன் செய்வதும் அதுதானே? அவர் ரசீது, கணக்குப் புத்தகம், சட்டை, தலைப்பாகை இவைகளுடன் சந்தா, நன்கொடை என்ற பெயரோடு யாசகம் செய்கிறார். அவன் நேரடியாக யாசகம் செய்கிறான். அவர் யாசகம் செய்து பிச்சைக்காரர்களுக்குச் சோறு போடுகிறார். அவன் யாசகம் செய்து பிச்சைக்காரிக்குக் கொடுக்கிறான். பிச்சைக்காரிக்காக அவன் பிச்சைக்காரனாக இருக்கிறான்.

அவர் அவனுக்கு வேண்டியதைக் கொடுத்திருந்தால், அவன் செய்வது தர்மம் என்ற உண்மை உணர்ச்சியோடு அவனுக்குத் தடை போடாமல் இருந்திருந்தால்......?

வண்டி போகிற வேகத்தில் அவர் மனம் யோசித்துக் கொண்டிருந்தது. தாம் செய்தது தவறு என்ற ஞாபகம் தலை காட்டியது. பிச்சையெடுத்தாவது தர்மம் செய்ய வேண்டும் என்ற சங்கற்பத்தின் உயர்வு சிறிது சிறிதாகப் புலப்பட்டது. அவனைக் கண்டித்தது தவறு என்ற முடிவுக்கு வந்தார்.

வெளியூரில் இரண்டு நாள் இருந்து வேலையை முடித்துக்கொண்டு மயிலாப்பூருக்கு வந்தார். வீட்டுக்குள் நுழைந்தார்; கோபாலன் பிச்சையேற்கும் தொழிலை மாற்றவேண்டுமென்ற தீர்மானத்தோடு நுழைந்தார். வீட்டில் கோபாலன் ஜுர வேகத்தால் பிதற்றிக்கொண்டிருந்தான்.

"அம்மாதான், அப்பா; என் அம்மா; அடிக்காதே. நான் அவளோடே போய்விடுகிறேன்; உன் பிள்ளை பிச்சை

யெடுக்கக் கூடாது. அவள் பிள்ளையாக அவளோடே போகிறேன்.''

இதைத்தான் குழறியும் இடையிலே விட்டு விட்டும் அவன் பிதற்றினன்.

அந்த வார்த்தையினூடே உள்ள கருத்தின் ஆழம் அவருக்குத் தெளிவாகப் புலப்பட்டது. அவர் உள்ளம் கரைந்தது; கண் கலங்கியது. படுக்கைக்குப் பக்கத்தில் போய் உட்கார்ந்தார். "கோபாலா!'' என்று நாக்குழறின படியே என்றும் இல்லாத ஆசையுடன் அவன் தலையைத் தடவிக் கொடுத்தார்.

வெளியிலே, "சாமீ!'' என்ற துக்கங் கலந்த குரல் கேட்டது. வேலைக்காரன் யாரையோ அதட்டிக்கொண்டிருந்தான். "அந்தப் பிள்ளையை இந்தப் பாவி கண்ணுலே ஒரு தடவை பார்க்கிறேன் சாமி; கபாலிதான் அந்தப் பிள்ளையைக் காப்பாற்ற வேண்டும்'' என்று மட்டும் அந்தக் குரல் கேட்டது.

ஆலமரத்துப் பிச்சைக்காரிதான்; அவனைக் காணுத தால் விஷயத்தைத் தெரிந்துகொண்டு வீடு தேடிக் கண்டு பிடித்து வந்திருக்கிறுள். துக்கத்தோடு தன் சொந்தப் பிள்ளையைக் காணும் தாய்க்கு எத்தனை பரிவுண்டோ அத்தனை பரிவோடு வந்திருக்கிறுள்.

கிருஷ்ணமூர்த்தி ஐயர் அவளை உள்ளே அழைத்து வரச் சொன்னர். "சாமி, கோபாலு!'' என்று துக்கத்தை அடக்க மாட்டாமல் அவள் கூவினள். அந்தக் குரலைக் கேட்டுக் கோபாலன் கண்விழித்தான்.

"என் கண்ணே, இதோ அவள் வந்திருக்கிறுள். அவளுக்கு நான் பணம் கொடுக்கிறேன். நீயே உன் கையால் கொடு. இனிமேல் உன் இஷ்டப்படியே அவளுக்கு எது வேண்டுமானலும் கொடு'' என்று கண்ணீர் வழியக் கிருஷ்ணமூர்த்தி ஐயர் கூறினர்.

கோபாலன் முகத்தில் லேசாக ஒரு புன்னகை படர்ந்தது.

# கார்த்திகை விளக்கு

"அம்மா, இன்றைக்காவது அந்த விளக்கை வெளியில் எடுத்துத் தேய்த்து ஏற்றி வைக்கிறேன். நல்ல விளக்கைப் பெட்டிக்குள் வைத்துவிட்டு, இந்த வெண்கல விளக்கையும் பித்தளை விளக்கையும் மண் அகல் விளக்கையும் ஏற்றி வைக்கச் சொல்கிறாயே. ஸ்வாமிக்கு முன்னால் அந்த வெள்ளி விளக்கை ஏற்றி வைத்தால் எவ்வளவு பிரகாசமாக இருக்கும்!" என்று சீதாலக்ஷ்மி தன்னுடைய அம்மாவைப் பார்த்துக் கொஞ்சலாகச் சொன்னாள்.

அவளுடைய தாய் தன் அருமை மகளின் தலை மயிரைக் கோதித் தடவிக் கொடுத்தபடியே, "நீ சொல்லுவது சரிதான். ஆனாலும் அந்த விளக்கைக் கண்டால் எனக்கு நல்ல ஞாபகங்களே உண்டாவதில்லை. என்றைக்கு அது இந்த வீட்டுக்கு வந்ததோ, அது முதல் நமக்குக் கஷ்ட காலந்தான். உன்னுடைய அப்பா அதை மிகவும் ஆவலோடுதான் செய்தார். அதை ஒரு கார்த்திகையில் ஸ்ரீ ராமசந்திர மூர்த்திக்கு முன் ஏற்றி வைத்துப் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை. அந்த விளக்கு உனக்கு அழகாக இருக்கலாம். எனக்கு அதைப் பார்த்தாலே பகீரென்கிறது" என்று சொன்னாள்.

சீதாலக்ஷ்மி விடவில்லை; "அம்மா, அப்பா அவ்வளவு பிரியமாக அதைப் பண்ணச் சொன்னார் என்று சொல்கிறாயே; இப்போது அதை ஏற்றி வைத்தால் அவருடைய ஆத்மாவுக்குத் திருப்தி அளிக்கும் அல்லவா? அவர் இருந்தபோது அதை ஏற்றி வைக்கவில்லையென்று சொல்கிறாய். ஆனால் அதைப் பார்த்தால் சில தடவை ஏற்றி வைத்த விளக்குப் போலல்லவா தெரிகிறது? இன்று புதிதாக ஏற்றினால்தானே, நீ பயப்படுவதற்கு நியாயம்

உண்டு? ஏற்கனவே பழகின விளக்கை ஏற்றி வைப்பதில் என்ன தோஷம் வந்துவிடும்?'' என்றாள்.

"அப்படி இல்லையடி அம்மா! அப்படி இல்லை. உன்னுடைய அப்பா, அதை இங்கே வைத்துவிட்டு, நான் வந்த பிறகு கார்த்திகைக்கு ஏற்றி வைக்கலாமென்று சொன்னார். அந்த விளக்கை ஜாக்கிரதையாகப் பாதுகாக்கவேண்டுமென்றும் சொன்னார். அவர் வரவும் இல்லை; கார்த்திகைக்கு ஏற்றவும் இல்லை. அதை எப்படி இப்போது ஏற்றி வைப்பது?''

"அப்படியானால், அப்பா மறுபடியும் உயிரோடு வந்தால்தான் அதை ஏற்றி வைக்கவேணுமென்று சொல்கிறாய்? இது வெகு வேடிக்கையாக இருக்கிறதே!''

* * *

ராமாயணம் நாராயண சாஸ்திரிகள் வால்மீகி ராமாயணப் பிரசங்கத்திலே வல்லவர். அவருடைய பிரசங்கத்துக்கு அவர் வாக்கு வன்மை கவர்ச்சியை அளித்தது பெரிதல்ல; அவருடைய சாரீர சம்பத்தும் அதனுடன் சேர்ந்துகொண்டதனால் அவருடைய பிரசங்கம் குழந்தைகளையும் பாமரர்களையுங்கூடக் கவர்ந்தது. அழகான உருவம்; தேஜசுடன் ஜொலிக்கும் முகம்; பட்டை பட்டையாக விபூதியைப் போட்டுக்கொண்டு சால்வையை உத்தரீயமாக அணிந்து ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியின் படத்தின்முன் உட்கார்ந்து பிரசங்கத்தை ஆரம்பித்துவிட்டாரானால் சோனமாரியாகப் பொழிந்து தள்ளிவிடுவார். சபையோர்களுடைய அபிருசியைத் தெரிந்துகொண்டு அதற்கு ஏற்றபடி விஷயங்களைச் சொல்வதில் அவர் மகா சமர்த்தர். அவருக்குத் தமிழும் தெரியும். கம்பராமாயணப் பாடல்களை முக்கியமான கட்டங்களில் அவர் எடுத்துச் சொல்வதுண்டு.

படித்தவர்களுக்கு முன்னுக்கு வரும் வழியும் நாலு காசு சம்பாதிக்கும் தந்திரமும் அநேகமாகத் தெரிவதில்லை.

நாராயண சாஸ்திரிகள் அப்படிப்பட்டவரல்ல. அவர் எவ்வாறு புத்தகங்களைப் படித்திருந்தாரோ அதற்குப் பதின் மடங்கு அதிகமாக உலகத்தைப் படித்திருந்தார். எப்படிப்பட்ட கிருபணனாக இருந்தாலும் அவனுடைய உள்ளத்தைக் குளிரப்பண்ணி அவனிடம் பணம் கறப்பதில் கைகாரப் பேர்வழி. ஒரு வருஷத்தில் குறைந்த பக்ஷம் இரண்டு பட்டாபிஷேகமாவது நடத்தி முடிக்காமல் விடுவதில்லை. ஒரு பட்டாபிஷேகமென்றால் என்னவென்று நினைக்கிறீர்கள்? ஆறு மாசம் ஓர் ஊரில் தங்குவார்; ஒவ்வொரு நாளும் ராஜோபசாரம்; ராமாயணத்தில் ராமாவதாரம், சீதா கல்யாணம், அங்குளீயப்ரதானம் என்ற விசேஷங்கள் வரும்போதெல்லாம் சந்தர்ப்பத்துக்கேற்ற சம்மானங்கள்; நித்தியப்படி உண்டியலில் சேரும் சில்லறைத் தொகையில் ஒரு பத்து ரூபாய்க்குக் குறைவு இல்லை; பட்டாபிஷேகத்தன்று அவருக்கே பட்டாபிஷேகம் நடப்பது போலத்தான் இருக்கும். ஆயிர ரூபாய் கிடைக்கும்; இரண்டாயிர ரூபாய் கிடைத்த இடமும் உண்டு. முழு மோசமாகப் போனாலும் ஐந்நூறு ரூபாய்க்குக் குறைச்சல் இல்லை.

இப்படிச் சம்பாதித்து மிகவும் ஜாக்கிரதையாகச் செலவழித்து மிச்சத்தை வீடு கொண்டுவந்து சேர்ப்பார். ஊர் ஊராக இப்படிச் செல்லும் பிரசங்கப் பிரயாணங்களிலே சில தடவை தம்முடைய மனைவி விசாலத்தையும் அழைத்துச் செல்வார். பிற்காலங்களில் அந்த அம்மாளை ஊரிலே விட்டுவிட்டு வருஷத்துக்கு இரண்டு மாதம் ஊருக்கு வந்து தங்கிப் போவார். குழந்தை சீதாலக்ஷ்மியின் படிப்புக் கெட்டுப்போகக்கூடாது என்பதற்காகத்தான் இந்த ஏற்பாடு. அப்படியும் இப்படியுமாகச் சேர்த்து நாலு ஏகரா நன்செய் நிலம் ஊரில் வாங்கினார். ஸ்ரீ ராமசந்திரமூர்த்தி அவருக்கு ஆண் குழந்தையை அருளாவிட்டாலும் ஒரு பெண் குழந்தையை அருளினார். அவளுக்குச் சீதாலக்ஷ்மி என்று பேர் வைத்து ஆசையோடு பாதுகாத்து வந்தார்; பாதுகாத்து வந்தவள் விசாலம்; பாராட்டி வந்தவர் நாராயண சாஸ்திரிகள்.

குழந்தைக்கு ஒரு ஸம்ஸ்கிருத வாத்தியாரை ஏற்படுத்தி ஸம்ஸ்கிருதம் கற்பித்ததோடு சங்கீதமும் சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்தார்.

* * *

நாராயண சாஸ்திரிகள் புதுச்சேரியில் ராமாயணப் பிரசங்கம் நடத்திக்கொண்டிருந்தார். பணம் படைத்த பிரபுக்கள் பலர் அவரைத் தலையில் வைத்துத் தாங்கி வந்தார்கள். சீதா கல்யாண கட்டம் வந்தபோது அவர்கள் அவரை மிகவும் வற்புறுத்தி ஊரிலிருந்து அவருடைய தர்ம பத்தினியையும் குழந்தையையும் வருவித்து, தம்பதி சமேதர்களாக இருக்கச் செய்து, பூஜை செய்து கொண்டாடிச் சம்மானங்களை வழங்கினார்கள். விசாலத்துக்கு அங்கே நடந்த உபசாரங்களைப் பார்த்தபோது ஏதோ கனவுலகத்தில் இருப்பதுபோல இருந்தது. தன்னுடைய கணவர் உலகத்தாரால் எவ்வளவு போற்றப்படுகிறார் என்பதை இதற்குமுன் ஓரளவு கண்டிருந்தாள். ஆனால் புதுச்சேரியில் நடந்த வைபவங்களுக்கு ஈடாக எதையும் சொல்ல முடியாது. விசாலத்துக்குத் தன் கணவரே ராமசந்திர மூர்த்தியாகிவிட்டார். அதுகாறும் அவரைத் தன் காதலுக்கு உரிய பொருளாக எண்ணி வந்தவள், அன்று முதல் தன் பக்திக்கு லட்சியமான தெய்வமாகவே எண்ணலானாள். அவளை அறியாமலே அந்த எண்ணம் அவள் உள்ளத்தில் இடங்கொண்டது. சீதா கல்யாணம் ஆன பிறகு குழந்தையை அழைத்துக்கொண்டு விசாலம் ஊருக்கு வந்துவிட்டாள். பட்டாபிஷேகத்துக்கும் வர வேண்டுமென்று அழைப்பு வந்தது. சில அசந்தர்ப்பங்களால் அவள் போக முடியவில்லை.

புதுச்சேரியில் பிரபுக்கள் வழங்க வழங்க வாரிக்கொண்ட பொருள்களோடு நாராயண சாஸ்திரிகள் ஊரில் வந்து இறங்கினார். அதுவரையில் அவர் அவ்வளவு சம்பாத்தியத்தை அடைந்ததில்லை. புதுச்சேரியில் மலிவாகக் கிடைத்த சாமான்களில் ஒன்று பாக்கி விடாமல் அவர்

வாங்கி வந்திருந்தார். ஐப்பசி மாசம் அது. தீபாவளி பக்கத்தில் இருந்தமையால் சீதாலக்ஷ்மிக்கும் விசாலத்துக்கும் பல பல ரகமான துணிகளை வாங்கி வந்தார். வாங்கினது பெரிதல்ல; எப்படியோ சாமர்த்தியமாகப் புதுச்சேரி எல்லையிலுள்ள சுங்க அதிகாரிகளுக்குத் தப்பி அவைகளை ஊருக்குக் கொண்டுவந்து சேர்த்துவிட்டார். அதற்கு அவருக்கா தந்திரம் தெரியாது? புதுச்சேரிப் பிரமுகர்கள் அவரை விழுப்புரம் வரையில் ஒரே கூட்டமாகக் கொண்டு வந்து வழியனுப்பினார்கள்; வழியனுப்பும்படி அவர் செய்துவிட்டார். ஒரு படையே அவ்வளவு தூரம் உடன் வந்தபோது புதுச்சேரி நகரத்தையே கொண்டு வந்துவிடலாமே!

கொண்டுவந்த சாமான்களை யெல்லாம் நண்பர்களுக்குக் காட்டினார். துணிமணிகளைப் பார்த்த ஊரார் பிரமித்துப் போனார்கள். 'ஐயோ! யார் கண்ணுவது படப்போகிறதே!' என்று விசாலம் உள்ளத்துள் பயந்தாள். தன்னுடைய கண்ணே படும்போல் இருந்தது அவளுக்கு. "ரகுராமா! நீதான் காப்பாற்றவேண்டும்!" என்று ஒவ்வொரு பொருளாக எடுத்து உள்ளே வைத்தாள். சாஸ்திரிகள் ஒவ்வொன்றையும் சுட்டிக்காட்டித் தம் பெருமையையும், யார் அதைத் தந்தாரென்பதையும் விசாலத்துக்குக் கதை கதையாகச் சொன்னார். பத்து வயசுப் பெண்ணாக இருந்த சீதாலக்ஷ்மி எல்லாவற்றையும் பார்த்துப் பார்த்து மகிழ்ச்சியால் பூரித்தாள். அப்பா சொன்னதைக் கேட்பதைவிட அந்தப் பண்டங்களை எடுத்தெடுத்துத் திருப்பித் திருப்பிப் பார்ப்பதிலேதான் அவள் மனம் ஈடுபட்டிருந்தது.

"இந்தக் குத்துவிளக்கைப் பார். இது மிகவும் அருமையானது. இதைப் புதுச்சேரியிலே செய்து ஸ்ரீ ராமசந்திர மூர்த்திக்கு முன் நான்கு நாள்தான் ஏற்றி வைத்தேன். புதிதாக இருந்தால் சுங்க அதிகாரிகள் வரி போடுவார்கள். அதற்காக என் பூஜைச் சாமான்களோடு சேர்த்து வைத்திருந்தேன். நாலு நாள் ஏற்றி எண்ணெ

யும் கரியும் படச் செய்தேன். இதை நன்றாகத் துலக்கி ஜாக்கிரதையாக வை; இதை வரும் கார்த்திகைக்கு ஸ்ரீ ராமசந்திர மூர்த்திக்குமுன் ஏற்றி வைத்து ஒரு ஸஹஸ்ரநாமம் செய்ய வேண்டும். இந்த விளக்குக்கே லக்ஷ்மி ஸஹஸ்ரநாமம் செய்யவேண்டும். லக்ஷ்மீகரம் நிறைந்த விளக்கு இது” என்று அந்தப் புதிய வெள்ளி விளக்கைப்பற்றி அவர் சொன்னார். அப்போது அவருடைய முகத்தில் உண்டான ஒளி, அந்த விளக்கைப்பற்றி அவர் எவ்வளவு பெருமையாக எண்ணுகிறாரென்பதைத் தெரிவித்தது.

* * *

திடீரென்று, பத்து நாள் வந்து சீதா கல்யாணம் சொல்லவேண்டுமென்று திருநெல்வேலியிலிருந்து நாராயண சாஸ்திரிகளுக்குத் தந்தி வந்தது. தீபாவளிக்கு மறு நாளே புறப்பட்டுவிட்டார். போகும்போது, “குத்து விளக்கை வெளியில் எடுக்காதே; நான் வந்ததும் எடுத்துக் கார்த்திகைக்கு ஏற்றலாம்” என்று சொல்லிவிட்டுப் போனார்.

திருநெல்வேலிக்குப் போய்ச் சீதா கல்யாணப் பிரசங்கம் ஆரம்பித்தார். முன் கதை நடந்து வந்தது. ராமாவதாரம் முதல் சீதா கல்யாணம் வரையில் பத்து நாள் செய்வதென்றும், ஐந்நூறு ரூபாய் சம்மானம் செய்வதென்றும் பேச்சு. ஒன்பதாவது நாள் ஸ்ரீ ராமபிரான் சிவதனுசை முறிக்கும் கட்டம். அதை முடித்துச் சீதா கல்யாணத்தைச் சுருக்கமாக மறுநாள் சொல்லிச் சம்மானங்களைப் பெறவேண்டும். அந்த ஒன்பதாம் நாள் நாராயண சாஸ்திரிகள் பிரசங்கம் செய்துகொண் டிருந்தபோது திடீரென்று மாரடைத்து, ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியின் சரணங்களை அடைந்துவிட்டார். ஊரெல்லாம் கலகலத்துப் போய்விட்டது.

சீதா கல்யாணம் நாராயண சாஸ்திரிகளின் வியோகமாக முடிந்தது. விசாலாக்ஷி அம்மாளுக்குத் தந்தி

போயிற்று. அவள் அலறிப் புடைத்துக்கொண்டு வந்தாள். தாம்ரபர்ணி தீரத்தில் ஸம்ஸ்காரம் ஆயிற்று. ஊராரெல்லாம் அழுது புலம்பினார்கள். தங்களுடைய துரதிருஷ்டத்தினால்தான் இந்த விபத்து நேர்ந்ததென்று அவர்கள் துக்கித்தார்கள். விசாலத்துக்கு ஒன்றுமே தெரியவில்லை. "அம்மா, உன்னுடைய புருஷர் அவதார புருஷர். அநாயாசமாக ஸ்ரீ ரகுபதி அவரை அழைத்துக்கொண்டார். ஸ்ரீ ராமப் பிரபாவ ஞாபகத்தோடே அவர் உயிரை விட்டார். இது எல்லோருக்கும் கிடைக்காது" என்று சிலர் சமாதானம் சொன்னார்கள். தமக்குள் இரண்டாயிர ரூபாய் வசூல் செய்து அவளிடம் கொடுத்து ஊருக்கு அனுப்பினார்கள். ஊருக்கு வந்து தன் புருஷருடைய அபரக்கிரியைகளையெல்லாம் நடத்தினாள். அவளுக்கு ஒரு தம்பி உண்டு. அவனுடைய சகாயத்தால் குடும்ப சம்ரக்ஷணையையும் ஒழுங்குபடுத்திக்கொண்டாள் விசாலம்.

* * *

"புதுச்சேரியிலிருந்து வந்தபோதே யாரோ பாவிகளுடைய திருஷ்டி பட்டுவிட்டது! எனக்கு மனசுக்குள் அந்தப் பயம் எப்படியோ இருந்து வந்தது. நான் நினைத்தது சரியாகப் போயிற்று. கார்த்திகைக்கு வந்து விளக்கேற்றவேணுமென்று சொல்லிப் போனார். தெய்வம், கண் அவிந்த தெய்வம், என் வீட்டில் எரிந்துகொண் டிருந்த விளக்கையே அவித்துவிட்டது!" என்று சொல்லிப் புலம்பினாள் விசாலம்.

புருஷன் இல்லாமல் வருஷத்தில் பத்து மாதங்களில் குடும்பத்தை நடத்திவந்த பழக்கம் உண்டு அவளுக்கு. அதோடு போதுமான நிலமும் பொருளும் கணவனுடைய சம்பாத்தியத்தால் கிடைத்திருந்தன. ஆகையால் குடும்பத்தை நடத்தும் விஷயத்தில் அவளுக்கு அவ்வளவாகக் கவலை இல்லையென்றுதான் சொல்லவேண்டும். கணவனைத் தெய்வமாகப் பாவித்துப் பழகியதால் கணவனைப் பிரிந்த

தனுலும் அவளுக்கு நிரந்தரமான பெரிய துக்கம் உண்டாக வில்லை. 'இப்போதும் எங்கோ ஓர் ஊரில் ராமாயணப் பிரசங்கம் செய்துகொண் டிருக்கிருர்' என்று நினைத்து ஒரு விதமாக மனசைச் சமாதானம் செய்துகொண்டாள். தன் அருமைக் குழந்தை சீதாலக்ஷ்மியைப் பாதுகாத்து நல்ல பிள்ளையாக ஒருவனைப் பார்த்து அவனுக்குக் கல்யாணம் செய்து கொடுக்கவேண்டும் என்ற ஒன்றுதான் அவளுடைய வாழ்க்கைச் சங்கற்பமாக ஆகிவிட்டது. சீதாலக்ஷ்மியை எப்போதுமே அன்பாகவும் செல்லமாகவும் வளர்த்து வந்தாலும் இப்போது அவளிடத்தில் தன் உயிரையே வைத்துவிட்டாள்.

பெட்டியில் வைத்திருக்கும் வெள்ளிக் குத்துவிளக்கை விசாலம் என்ன காரணத்தாலோ வெறுத்து வந்தாள். தன் கணவர் அதை அருமையாகக் காப்பாற்ற வேண்டுமென்று சொல்லியிருந்தமையால் அதைப் பெட்டியில் வைத்துப் பூட்டியிருந்தாளே ஒழிய, இல்லாவிட்டால் அதை முன்பே யாராவது பிராமணனுக்குத் தானம் பண்ணியிருப்பாள். தன்னுடைய மங்கல வாழ்வுக்கு யமனுக வந்தது அந்த வெள்ளி விளக்கு என்று எண்ணினுள். அதை நாளுங் கிழமையுமாக, இன்று, இந்தக் கார்த்திகைத் திருநாளில், ஏற்றி வைக்க வேண்டுமென்ருல் அவள் மனம் எப்படிச் சம்மதிக்கும்?

* * *

சீதாலக்ஷ்மி என்றும் இல்லாதபடி அந்த விஷயத்தில் பிடிவாதம் பிடித்தாள். "அம்மா, அப்பா இந்த விளக்கை ஏற்றி ஸஹஸ்ரநாமம் பண்ணவேணுமென்று சொன்னுரே; அதை அந்த வருஷந்தான் ஏற்ற முடியவில்லை; ஸ்ரீ ராமசந்திரமூர்த்தி நம் வீட்டில் துக்கத்தைக் கொண்டு வந்து விட்டார். அடுத்த வருஷம் ஏற்றியிருக்கலாமே! அப்பா காலமாகி நாலு வருஷகாலம் ஆயிற்றே. அதை எடுத்து ஏற்றி வைத்துப் பூஜை செய்தால் அப்பாவுக்குத் திருப்தியான

காரியம் ஒன்று நிறைவேறினது போல் ஆகும். எனக்கு இப்படித் தோன்றுகிறது.''

"அசடே! நீ குழந்தை. உனக்கு ஒன்றும் தெரியாது. அதை நீ விளக்கென்று சொல்லுகிறாயே. அதை ஏற்றுவதற்கு முன்பே நம் வீட்டில் இருட்டைப் புகுத்திவிட்டதே! பைத்தியம் மாதிரி பேசுகிறாயே!'' என்று துக்க உணர்ச்சியோடு தன் தாய் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட சீதாலக்ஷ்மி யோசனையில் ஆழ்ந்தாள். எப்படியாவது அந்த விளக்கை வெளியில் எடுத்து வைத்து ஏற்றத்தான் வேண்டுமென்ற ஆசை அவள் உள்ளத்தில் மேன்மேலும் பொங்கியது. திடீரென்று அவளுக்கு ஒன்று தோன்றியது.

"அம்மா, நமக்குள்ளே இந்த வாக்குவாதம் எதற்கு? ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியின் ஆக்ஞையையே தெரிந்து கொண்டு விடுவோம்'' என்று குதித்துக்கொண்டு சொன்னாள்.

விசாலம் தன் பெண்ணை உற்றுப் பார்த்தாள்; "நீ என்ன உளறுகிறாய்?'' என்று சற்றுக் கடிந்து கடுமையான குரலோடு கேட்டாள்.

"ராமாயணத்தில் கயிறு சாத்திப் பார்க்கிறேன். நல்ல இடமாக இருந்தால் ராமசந்திரமூர்த்தியின் அநுக்கிரகம் உண்டாகுமென்று வைத்துக்கொண்டு விளக்கை ஏற்றலாம்; இல்லாவிட்டால் வேண்டாம்.''

விசாலம் திகைத்தாள். 'இந்தப் பேதைப் பெண்ணுக்கு எத்தனை ஆசை!' என்று ஆச்சரியப்பட்டாள். அவள் சொல்வது விசாலத்துக்குப் பொருத்தமாகவே பட்டது.

"சரி; நீயோ கேட்கமாட்டேன் என்கிறாய். கைகால் அலம்பிக்கொண்டு பகவானுக்குப் புஷ்பத்தைப் போட்டு ராமாயணத்துக்கும் அர்ச்சனை செய்து பிரித்துப் பார். ராமசந்திரமூர்த்திதான் துணையிருக்க வேணும்.''

இதைச் சொன்னபோது அவள் தொண்டையில் துக்கம் அடைத்தது; கண்கள் நீரைக் கக்கின.

சீதாலக்ஷ்மி குதித்துக்கொண்டு ஓடினுள். கைகால் அலம்பிக் குங்குமம் வைத்துக்கொண்டு ஸ்வாமி படத்துக்கு முன்போய்ப் புஷ்பம் ஒன்றைப்போட்டு நமஸ்காரம் செய்து விட்டு வால்மீகி ராமாயணத்துக்கும் அர்ச்சனை செய்து, பயபக்தியோடு மனசில், "பகவானே, என் அபீஷ்டம் நிறைவேற வேணும்!" என்ற பிரார்த்தனையோடு புத்தகத் தைப் பிரித்தாள். விசாலம் கண்கொட்டாமல் அவளைப் பார்த்துக்கொண்டே இருந்தாள்.

"அம்மா, அப்பாவுக்குப் பிரியமான இடமல்லவா வந்திருக்கிறது? பகவான் அநுக்கிரகம் செய்துவிட்டார். அப்பா அடிக்கடி சொல்லும் சுலோகமே இருக்கிறது. அவ ருடைய ஆத்மாவுக்குக்கூட இது திருப்திதான்" என்று குதூகலத்தோடு சொல்லிவிட்டு அந்தச் சுலோகத்தை வாசித்தாள் சீதாலக்ஷ்மி.

* * *

குழந்தை ஜயித்தாள். அன்று மாலை கார்த்திகை விளக் குகளுக்கு நடுவே புதுச்சேரி வெள்ளிக் குத்துவிளக்கு நடு நாயகமாக இருக்கப்போகிறது! சீதாலக்ஷ்மிக்குத் தலைகால் தெரியவில்லை. மத்தியான்னம் சாப்பிட்டது முதலே அம்மா விடம் சொல்லிப் பெட்டியைத் திறக்கச் செய்து அந்தக் குத்துவிளக்கை எடுத்தாள். தேய்த்து வைத்து அழகு பார்த்தாள். எடுத்து எடுத்துக் கட்டிக்கொண்டாள். பல காலமாக அவளுடைய ஆசை தடைப்பட்டு அன்று விடு தலை பெற்றமையால் அந்த விளக்கின்மேல் இருந்த ஆசை யும் மதிப்பும் ஆயிரமடங்கு பெருகிக் கொந்தளித்தன.

புதிய ஆடைகளை உடுத்துக்கொண்டாள். அலங் காரம் பண்ணிக்கொண்டாள். லக்ஷ்மி ஸஹஸ்ரநாமத்தை எடுத்து வைத்தாள். அவளுக்குத்தான் அப்போது நன்றாக

ஸம்ஸ்கிருதம் தெரியுமே. விசாலம் கார்த்திகைப் பக்ஷணம் செய்வதில் ஈடுபட்டிருந்தாள். அப்பம், பொரியுருண்டை எல்லாம் செய்தாள். அதுவரையில் அவள் வெறுத்திருந்த குத்துவிளக்கை ஏற்றுவதில் அவளுக்கு அரைச் சம்மதமாக இருந்தாலும் தன் அருமைக் குழந்தை அதைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்து பூரிப்பதைக் கண்டு அந்த வெறுப்பை ஒருவாறு மறந்தாள்.

சாயங்கால நேரம்; விளக்கேற்ற ஆரம்பித்துவிட்டார்கள். சீதாலக்ஷ்மி பாடிக்கொண்டே அந்த வெள்ளிக் குத்துவிளக்கை ஏற்றினாள். அவள் முகத்தில்தான் என்ன ஒளி; என்ன குதூகலம்! மற்ற விளக்குகளையும் ஏற்றி ஸ்வாமிக்கு நைவேத்தியம் செய்துவிட்டு அந்த விளக்குகளை வீடு முழுவதும் அலங்காரமாக வைத்தாள்.

அவள் செய்ததையெல்லாம் கண் குளிரப் பார்த்து ஆனந்தமடைந்தாள் விசாலம். "அம்மா, இனிமேல் ஸஹஸ்ரநாமம் ஆரம்பிக்கிறேன். வாத்தியார் எதற்கு? நான் செய்கிறேன்" என்று சொல்லி ஸ்வாமிக்கு முன் அமர்ந்து ஸஹஸ்ரநாமப் புத்தகத்தை வைத்துக்கொண்டு அந்தத் தீபத்துக்கு அர்ச்சனை செய்யத் தொடங்கினாள். விசாலம் அருகில் உட்கார்ந்துகொண்டு கவனித்து வந்தாள். அவளுக்குப் பழைய ஞாபகங்களெல்லாம் அப்போது ஒன்றன்பின் ஒன்றாக வந்தன; "விசாலம், இந்த விளக்கு லக்ஷ்மீகரம் பொருந்தியது; இதை ஜாக்கிரதையாகப் பாதுகாக்க வேண்டும்" என்று அந்த விளக்கைச் சுட்டிக் காட்டித் தன் புருஷர் சொல்வதாக அவளுக்குத் தோன்றியது. "நான் வரும் வரைக்கும் வெளியில் எடுக்காதே; நான் வந்த பிறகு கார்த்திகைக்கு ஏற்றலாம்" என்ற வார்த்தைகள் அவள் நினைவுக்கு வந்தன; அவளை அறியாமல் கண்ணீர் துளும்பியது. ஐந்து நிமிஷ நேரம் அவள் எல்லாவற்றையும் மறந்து துக்கக் கடலில் மூழ்கி ஸ்தம்பித்துப் போனாள். அதே சமயத்தில் ஸஹஸ்ரநாமம் முடிந்துவிடவே சீதாலக்ஷ்மி எழுந்து விளக்கைச் சிறிது தாண்டினாள். அப்

போது அவள் மேலாக்குத் தற்செயலாக நழுவி விழவே விளக்குச் சுடர் அதில் பற்றிக்கொண்டது.

"அம்மா!" என்று வீரிட்டாள் சீதாலக்ஷ்மி.

"ஐயோ!" என்று கத்திக்கொண்டு எழுந்தாள் விசாலம். மேலாக்கை அவள் அவிழ்த்து வீசி எறிந்தாள். அது மூலையில் விழுந்து எரிந்து போயிற்று. சீதாலக்ஷ்மி நடுங்கிக்கொண்டு நின்றாள். விசாலமோ பேய்பிடித்தவள்போல் ஆனாள். "இந்தப் பாழும் விளக்கை அன்றைக்கே உடைத்திருக்கவேண்டும். என் தாலியைக் கொண்டு போனதோடு என் குலக்கொழுந்தையுமா சாப்பிட வந்தாய்?" என்று பல்லைக் கடித்துக்கொண்டு அந்த விளக்கை இரண்டு கையாலும் எடுத்தாள். முற்றத்து வாசற்படிக்குப் போய் அந்தக் கல்லில் தன் பலங்கொண்டமட்டும் ஓங்கிப் போட்டாள்.

'க்ளிங்' என்ற சப்தத்துடன் அது கழுத்து முறிபட்டு நசுங்கி விழுந்தது. சீதாலக்ஷ்மி அங்கே ஓடிவந்து நின்றாள். "இனிமேல் நீ இதைக் கேட்கமாட்டாயே!" என்று வெறி படர்ந்த பார்வையோடு சொல்லிவிட்டு விசாலம் பெருமூச்சு விட்டாள்.

அந்த இடத்தில் உட்கார்ந்துகொண்டாள் விசாலம். படபடப்புத் தணிவதற்கு ஐந்து நிமிஷங்கள் ஆயின. அதுவரையில் அவள் இந்த உலகத்திலேயே இல்லை. பழைய நினைவுகளிலே அவள் மனம் சஞ்சரித்துக்கொண்டிருந்தது. சீதாலக்ஷ்மியும் ஸ்தம்பித்துப்போய் அருகில் நின்றுகொண்டிருந்தாள்.

படபடப்பு ஒருவாறு தணிந்தது. "நல்ல நாளும் அதுவுமா..." என்று சீதாலக்ஷ்மி ஆரம்பித்தாள். "என் வயிற்றெரிச்சலைக் கிளப்பாதே. நல்ல நாளில் ராவண சம்ஹாரம் ஆச்சு. சரி, இனிமேல் தட்டானைக் கூப்பிட்டு இந்தப் பீடையை உருக்கச் சொல்லவேண்டியதுதான்" என்று சொல்லிக்கொண்டே விசாலம் தன் பார்வையை உடைந்து

கிடக்கும் விளக்கின்மேல் செலுத்தினாள். அந்தத் துண்டு இரண்டையும் எடுத்தாள். ஆத்திரமெல்லாம் அடங்கின அந்த நிலையில் அவளுக்குப் பரிதாப உணர்ச்சி சிறிது உண்டாயிற்று. உள்ளே கொண்டுபோய் விளக்கு வெளிச்சத்தில் பார்த்தாள்.

"இதென்ன இது? இது வெள்ளியில்லைபோல் இருக்கிறதே! வெண்கலமா!"

உற்று நோக்கினாள். மேலே வெள்ளிமுலாம் கனமாகப் பூசின விளக்கு என்று தெரிந்தது. உள்ளே இருந்தது வெண்கலமா? நன்றாகப் பளிச்சிட்ட லோகமாகத் தெரிந்தது. ஒருவேளை தங்கமாக இருக்குமோ? அவளுக்கு உடம்பெல்லாம் மயிர்க்கூச்செறிந்தது.

"புதுச்சேரி விளக்காயிற்றே! அவர் தந்திரமாகத் தங்கத்தில் விளக்குப் பண்ணிச் சுங்க அதிகாரிகளுக்குத் தெரியாமல் இருக்க இப்படிச் செய்தாரோ!"

சந்தேகம் பலப்பட்டது. சந்தேகம் எதற்கு? தன் தம்பிக்கு ஆள் விட்டு வருவித்து விஷயத்தைச் சொன்னாள். சந்தேகம் தீர்ந்தது. மகா சாமர்த்தியசாலியாகிய நாராயண சாஸ்திரிகள் தங்கத்தால் விளக்குப் பண்ணி வெள்ளி முலாம் பூசியிருந்தார். அதில் லக்ஷ்மீகரம் இருக்கிறதென்று அவர் சொன்னதன் தாத்பர்யம் இப்போது தான் விசாலத்துக்குத் தெரிந்தது.

"புதையலை எடுக்க வேணுமானால் பலியிட வேண்டும் என்பார்கள். இந்தப் புதையலுக்குச் சீதாலக்ஷ்மியின் மேலாக்குப் பலியாயிற்று. நல்ல வேளை! அதோடு நின்றது. எல்லாம் ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியின் சோதனை!" என்று ஆறுதல் பெற்றாள் விசாலம்.

# தீபாவளிப் புடைவை

குந்தனூர்ப் பழனியப்ப முதலியார் புதுப் பணக்காரர். இளமையில் அவர் ஏழையாகத்தான் இருந்தார். முதலில் கூலிக்கு நெசவு வேலை செய்து வந்தவர் பிறகு தாமே தறி போட்டார். கல்யாணம் செய்துகொண்ட பிறகு இரண்டு தறி போட்டு நூல் புடைவைகள் நெய்து வியாபாரம் செய்து வந்தார்.

இப்போது கிட்டத்தட்ட ஒரு லகாரம் சேர்த்திருக்கிறாரென்று சொல்லிக்கொள்கிறார்கள். இப்போது இருநூற்றுக்கு மேற்பட்ட தறிகள் ஓடுகின்றன. சிறுகச் சிறுக ஆரம்பித்த புடைவை வியாபாரம் பெருகி விரிந்துவிட்டது. சென்னையில் அவர் இப்போதுதான் ஒரு கடையை ஏற்படுத்தியிருக்கிறார்.

கிழவர்கள் சிலர் அவரைப் பார்த்து ஆச்சரியப்பட்டுப் போகிறார்கள். "தெய்வபக்தி என்பது லவலேசமும் இல்லாதவன், இப்போது கோயிலென்ன குளங்களென்ன இவைகளைக் கட்டுவதும் அபிஷேக ஆராதனை செய்வதுமாகக் கணக்கு வழக்கில்லாமல் செலவழிக்கிறான். அந்தக் காலத்தில் காலணாக் காசுகூடச் செலவழிக்க மனமில்லாதவன் இப்போது ஆயிரக்கணக்கில் தானதர்மம் பண்ணுகிறான். மனிதன் மாறுகிறானா, ஸ்வாமி மாற்றுகிறாரா? தெரியவில்லை" என்பார்கள்.

பழனியப்ப முதலியார் செய்துவரும் நல்ல காரியங்களில் மிகவும் முக்கியமானது, விசேஷமானது, தீபாவளிப் புடைவை உற்சவம். அந்த ஊர்க் கோவிலில் என்றும் எங்கும் இல்லாத திருவிழாவாக அது நடைபெறும். ஏழை எளியவர்களுக்குச் சாப்பாடு, பிராம்மண போஜனம்,

வேத பாராயணம், தேவார பாராயணம், ஸ்வாமி எழுந் தருள்வது, அதில் கச்சேரி வகைகள் - இப்படியாகப் பிர மாதப்படும். ஸ்வாமி திருவீதியில் எழுந்தருளுவதைக் காட்டிலும் தீபாவளிப் புடைவை கோயிலுக்குச் செல்லும் போது நடக்கிற விமரிசை இன்னும் அதிகமாக இருக்கும். ஒவ்வொரு வருஷமும் புதிய புடைவை ஒன்றை இதற் காகவே நெய்யச் செய்து அதைப் பெட்டியில் வைத்துப் பூஜை செய்து கோயிலுக்கு மேள தாளத்துடன் எடுத்துச் செல்வார்கள். அம்பிகைக்கு அபிஷேகாதிகள் நடைபெற்ற பிறகு அந்தப் புடைவையைச் சாத்துவார்கள்.

'தீபாவளிப் புடைவை உற்சவம்' என்பது வேறு எந்த ஊரிலும் இல்லை. குந்தனூருக்கு மாத்திரம் சொந்தம். பழனியப்ப முதலியார் தம் ஆயுளில் முக்கியமான நிகழ்ச்சி யாக அந்த உற்சவத்தை நடத்தி வருகிறார். அதில் அவ ருக்கு இருந்த பக்தி சிரத்தை வேறு எதிலும் இல்லை.

இவ்வளவு விசேஷமாக அவர் இந்தப் புது விதமான உற்சவத்தை ஆரம்பித்ததற்குக் காரணம் என்ன? அது ஒரு கதை.

* * *

பழனியப்ப முதலியார் ஒரு தறிபோட்டு நடத்திவந்த காலம் அது. குறிப்பிட்ட சில குடும்பங்களுக்குப் புடைவை நெய்து கொடுத்து அதில் வரும் லாபத்தைக் கொண்டு காலக்ஷேபம் செய்து வந்தார். அவருடைய மனைவி சுந் தரம்மாள் மிகவும் பொறுமையும் சாமர்த்தியமும் உடைய வள். செட்டும் கட்டுமாகக் குடித்தனத்தை நடத்தி வந் தாள். குடித்தனம் அப்படி ஒன்றும் பெரியதல்ல. புருஷன், பெண்சாதி, முதலியாருடைய கிழட்டுத் தாய், ஒரு வேலைக்காரப் பையன் ஆகியவர்கள் அடங்கிய குடும்பம் அது.

முதலியாருக்கு வேலையிலே கண். காலை முதல் மாலை வரையில் உழைப்பார். வேலைக்காரனிடம் நன்றாக வேலை

வாங்குவார். 'அனுவளவு தவிடுமிகள் பிறிரவிட மனம்' வராது. கோயிலோ குளமோ வேடிக்கையோ திரு விழாவோ ஒன்றும் அவருக்குத் தெரியாது. அந்த முப்பது வயசிலே அவருக்கு ஒன்றிலும் பற்றில்லாத விரக்தியா வந்துவிட்டது? இல்லை, இல்லை; எப்படியாவது காசு சேர்க்க வேண்டுமென்ற தீவிர உறுதி அவர் உள்ளத்துள் இருந்தது.

அதை அவர் மனைவி உணராமல் போகவில்லை. ஆனால் செய்யவேண்டிய சாங்கியங்களைக்கூடச் செய்யா மல் கருமித்தனம் பண்ணுவது அவளுக்குப் பிடிப்பதில்லை. தன் கருத்தை வற்புறுத்திச் சொல்வதற்கும் அவள் பிரியப் படுவதில்லை. புருஷனிடம் அவளுக்கு அவ்வளவு பக்தி.

காசு சிறுகச் சிறுகச் சேர்ந்துகொண்டு வந்தது. சேரச் சேர முதலியாரின் கருமித்தனமும் இறங்கி வந்தது. அதற்கு முன்பு வயிற்றுக்குச் சாப்பிடும் விஷயத்தில் அவர் கொஞ்சந்தான் கணக்குப் பார்த்தார். இப்போது அதில்கூடச் செட்டுப் பண்ண ஆரம்பித்தார்.

வாய் திறந்து தனக்கு இன்னது வேண்டுமென்று கேட் கும் சுபாவம் சுந்தரம்மாளிடம் இல்லை. அவள் மனசுக்குள் ஆசை இல்லாமலா இருக்கும்? நாலு பெண்களைப் போல அவளும் உடுக்கவும் உண்ணவும் பூணவும் ஆசை வைக் கிறவள்தான். ஆனால் அந்த ஆசையை அடக்கப் பழகி யிருந்தாள். அதுதான் வித்தியாசம்.

அவளுடைய சக்திக்கு, அடக்கும் சக்திக்கு, மீறின ஆசையாக ஒன்று வளர்ந்துவந்தது; 'ஊராருக்கெல்லாம் சேலை நெய்து கொடுக்கும் இவர் தீபாவளிக்கு நமக்கு நல்ல சேலை ஒன்று நெய்து தருவதில்லை. இந்த வயசில் கட்டிப் பார்க்காமல் வேறு எப்போது கட்டிக்கொள்வது? கையில் வெண்ணெய் இருந்தும் நெய்க்கு அழும் கதையாக இருக் கிறது இது' என்று அவள் எண்ணினாள்.

ஏதோ ஒரு நாள் அவரோடு உல்லாசமாகப் பேசிக் கொண்டிருக்கையில், "இந்தத் தீபாவளிக்கு எனக்கு ஒரு

புடைவை நெய்து தரமாட்டீர்களா?'' என்று கேட்டுவிட்டாள். அவர் காதில் அது விழுந்தது தான் தாமதம். கோபம் பொத்துக்கொண்டு வந்தது. அதை அடக்கிக்கொண்டார். புடைவை வியாபாரக்காரர்களுக்கு வாய்ப்பேச்சுச் சொல்லிக் கொடுக்கவா வேண்டும்? "நான் இப்போதெல்லாம் மட்டமான புடைவை நெய்வதில்லை. முன்னாலே சொல்லி அச்சாரம் வாங்கியவர்களுக்கு வேண்டியவைகளைப் போட்டுக் கொடுக்கிறேன். அவைகளெல்லாம் நாற்பது ஐம்பது விலை உள்ளவை. உனக்கு நான் வேறு வாங்கித் தருகிறேன். உனக்காக நான் நெய்யத் தொடங்கினால் வேறு ஒரு புடைவை போடுவது நின்று லாபமும் போய்விடும். உனக்குப் புடைவை தானே வேண்டும்? இந்தத் தீபாவளிக்கு நம் குட்டையனிடம் ஒன்று வாங்கித் தருகிறேன்'' என்றார்.

அவளுக்கும் கோபந்தான் வந்தது. "உங்கள் கையாலே நெய்த புடைவையைக் கட்டிக்கொள்ள வேண்டுமென்ற ஆசை எனக்கு இருக்கிறது. அதனால் தான் நான் சொன்னேன். வேறு புடைவை வாங்கிக் கட்டிக்கொள்வதில் எனக்கு ஒன்றும் விசேஷம் தோன்றவில்லை'' என்று தயங்கித் தயங்கிச் சொன்னாள்.

"அதற்கென்ன? எனக்கு வேலை இல்லாதபோது உனக்குத் தக்கபடி ஒன்று நெய்கிறேன். இப்போது உயர்ந்த நூல் வாங்கிப் பாவு போட்டிருக்கிறேன். அதை விட்டுவிட்டு மறுபடி உனக்காக ஒன்று போடுவதானால் நாள் ஆகும்; கைமேல் இருக்கிற வேலையும் கெட்டுப் போகும்; லாபமும் இல்லை. சரியான காலத்தில் நாலு காசு சம்பாதித்தால்தானே உண்டு? இது உனக்குத் தெரியாதா? இப்படிச் சம்பாதிப்பதெல்லாம் யாருக்காக? உனக்கும் அதில் சொந்தம் இல்லையா? நாளைக்கு நமக்குக் குழந்தை பிறந்தால் அதற்கு நாலு காசு சேர்த்து வைத்தால்தானே ஊரில் மானமாகப் பிழைக்கலாம்?''

குழந்தை பிறப்பதைப்பற்றிய பேச்சை அவர் ஆரம்பித்தவுடன் அவளுக்கு நாணம் வந்துவிட்டது; "நாளைச்

சமாசாரத்தைப்பற்றி இப்போது என்ன?'' என்று சொல்லிக்கொண்டே அவள் அடுப்பங்கரைக்குப் போய்விட்டாள்.

முதலியாருக்கு இன்று ஒரு புதிய விஷயம் தெரிய வந்தது. அவர் மனைவியின் உள்ளத்தில் ஆசைப்பேய் பற்றிவிட்டது. இனிமேல் அதைச் சரியானபடி அடக்கி ஆளாவிட்டால் அவர் வியாபாரத்துக்கே ஹானி வந்துவிடும். நாலு குடும்பங்களை அண்டி அவர்களுக்கு வேண்டிய புடைவைகளை நாணயமாகக் குறித்த காலத்தில் நெய்து கொடுத்துப் பிழைக்கும் பிழைப்புக்கும் கேடு வந்துவிடும். அவருடைய கனவெல்லாம் கலைந்துவிடும்.

சுந்தரம்மாள் தீபாவளிக்குப் புடைவை கேட்டதிலிருந்து இவ்வளவு விளைவுகளை அவர் எதிர்பார்த்தார்.

* * *

தீபாவளி நெருங்கிக்கொண்டிருந்தது. சுந்தரம்மாள் மறுபடியும் தன் விருப்பத்தைச் சொன்னாள். "இந்த வருஷம் நான் வாங்கித் தரும் புடைவையைக் கட்டிக்கொள். அடுத்த வருஷம் உனக்கு நிச்சயமாக ஒன்று நெய்து தருகிறேன்'' என்று சமாதானம் செய்தார்.

அடுத்த வருஷமும் வந்தது. சுந்தரம்மாள் வற்புறுத்த ஆரம்பித்தாள். முதலியார் சாக்குப்போக்குச் சொல்லியும் பலிக்கவில்லை. சரி என்று சொல்லி ஒரு புடைவை அவளுக்காக நெய்யத் தொடங்கினார். அவளுக்கு அதிருஷ்டம் இல்லை; அந்தப் புடைவையை யாரோ அதிக விலை கொடுத்து வாங்கிக்கொண்டு போய்விட்டார். மற்றொன்று நெய்யத் தொடங்கினார். அது முடிந்தவுடன் அவருக்கு ஆபத்தில் உதவி செய்யும் அயலூர்ப் பண்ணைக்காரர் பிடிவாதமாக அதையும் வாங்கிக்கொண்டு போய்விட்டார். பழனியப்ப முதலியார் பிடிவாதம் காசுக்கு முன் ஓடிவிடும். அதிக விலை வரும்போது அதை இழந்துவிட அவருக்கு மனசு வரவில்லை. புடைவையைக் கொடுத்துவிட்டு வீட்டுக்குள் நுழைந்தபோதுதான் அவர் மனசு கொஞ்சம்

சலனம் அடைந்தது. சுந்தரம்மாளைக் கண்டபோது அவருக்குப் பேச நா எழவில்லை. இனிமேல் ஒரு புடைவை நெய்யலாம் என்றாலோ நாள் இல்லை. தீபாவளிக்கு இரண்டே நாட்கள் இருக்கின்றன.

பேச்சுச் சாமர்த்தியத்தால் ஒரு விதமாகத் தம் மனைவியை அந்த வருஷமும் சமாதானப்படுத்தினார். அவர் மனசு மட்டும் சமாதானமாகவில்லை. 'எப்படியாவது அடுத்த வருஷம் உயர்ந்த புடைவை ஒன்று நெய்து கொடுத்துவிடுவது' என்று தீர்மானித்துக்கொண்டார். அவளிடத்தில் உள்ள அன்பு மேலெழுந்தது. இரண்டு முறை அவளை ஏமாற்ற நேர்ந்தமையால் அவள்பால் அவருக்கு அதிக இரக்கம் உண்டாயிற்று. 'எத்தனை லாபம் வந்தாலும் சரி; நம்மோடு வாழும் இவளுக்கு இல்லாமல் வரும் பணம் வேண்டாம்' என்று உறுதி செய்துகொண்டார்.

இந்தத் தீர்மானத்தை அவர் மறக்கவில்லை. அடுத்த வருஷம் மற்றொரு விஷயம் அவருடைய தீர்மானத்துக்குப் பலத்தைக் கொடுத்தது. சுந்தரம்மாள் கருத் தரித்தாள். 'இந்த நிலையில் இவளை ஏமாற்றுவது மகா பாவம்!' என்ற எண்ணம் முதலியாருக்கு உண்டாகி அவர் மனத்தை உறுத்திக்கொண்டே இருந்தது.

புரட்டாசி மாதம் பிறந்தது. அவளுக்கு ஏழு மாதம் நிரம்பி எட்டாவது மாதம் பிறந்தது. ஆசாபங்கம் அடைந்த அவள் புடைவை விஷயத்தையே எடுப்பதில்லை. ஆசை காட்டாமல் காரியத்திலேயே காட்டவேண்டுமென்று எண்ணி முதலியாரும் அதைப்பற்றிப் பேசவில்லை. உயர்ந்த நூல் வாங்கித் தம் தொழில் திறமையை எல்லாம் காட்டி ஒரு புடைவை நெய்து தம் ஆசைக் காதலிக்கு அளிக்கவேண்டும் என்று அவர் ஏற்பாடு செய்தார். அவள் அதைக் கட்டிக்கொண்டு அடையப்போகும் சந்தோஷத்தைக் கற்பனை செய்து பார்த்தார். 'அந்தச் சந்தோஷ மிகுதியால் அவளுக்குச் சுகப் பிரசவம் உண்டா

கும்; அழகான குழந்தை பிறக்கும்' என்றெல்லாம் அவர் உள்ளம் இன்பக் கனவுகளில் உலவிக்கொண் டிருந்தது.

புரட்டாசி மாதம் சுந்தரம்மாளின் தாய் வந்து அவளைத் தன் ஊருக்குக் கூட்டிக்கொண்டு போனாள். தீபாவளிக்கு வரவேண்டுமென்று மருமகனிடம் சொல்லிச் சென்றாள். 'இதுவும் ஒரு விதத்தில் நல்ல காரியந்தான். புடைவையைப்பற்றி அவள் கேட்கவோ நாம் சமாதானம் சொல்லவோ இடமில்லாமல் இருக்கும். திடீரென்று தீபாவளிக்கு நாம் புடைவையோடு போய் நிற்போம்' என்று முதலியார் நினைத்தார்.

* * *

தீபாவளிப் புடைவை உருவாகிக்கொண் டிருந்தது. அப்போது அந்த ஊர்த் தேவஸ்தான தர்மகர்த்தா ஒரு நாள் அங்கே வந்தார். அந்தப் புடைவை நெசவில் இருந்தது. "பழனியப்பா, இது என்ன, மிகவும் அழகாக இருக்கிறதே! இது யாருக்காக அப்பா நெய்கிறாய்?" என்று கேட்டார். தம் மனைவிக்கு என்று சொல்ல முதலியாருக்கு வெட்கம்; "சும்மாத்தான் நெய்கிறேன்" என்றார்.

"அப்படியானால் ஒரு காரியம் செய். நம்மூர்க் கோவில் அம்பிகைக்கு உற்சவ காலங்களில் சாத்த நல்ல புடைவை ஒன்றும் இல்லை. இந்தப் புடைவையை நெய்து கொடு. உண்டான விலையை வாங்கிக்கொள். புடைவை வெகு லக்ஷணமாக இருக்கிறது. மனுஷ சரீரத்திலே படத் தக்கதாகத் தோன்றவில்லை. கருணாம்பிகைக்கு ஏற்றதாக இருக்கிறது. நீ கொடு. கருணாம்பிகையின் கருணை உனக்குக் கிடைக்கும்" என்று தர்மகர்த்தா சொன்னார். அவர் ஆசையாகக் கேட்டார்; அன்பாகத்தான் பேசினார்.

ஆனால் முதலியார் காதில் நாராசம் புகுந்ததுபோல் இருந்தது. தெய்வ பக்தி அவருக்குக் கொஞ்சமேனும் இல்லை என்பது காரணமல்ல. தடை ஒன்றும் இல்லாமல் இந்த வருஷம் தம் தீர்மானத்தை நிறைவேற்ற வேண்டு

மென்ற சங்கற்பம் உடையவர் அல்லவா? 'அதற்குத் தடையாக இந்த மனுஷன் எங்கேயடா வந்தான்?' என்று அவர் நினைத்தார். அதுமட்டுமா? "மனுஷ சரீரத்திலே படத் தக்கதாகத் தோன்றவில்லை" என்று அந்த அப்பாவி மனுஷர் சொன்னதைக் கேட்டபோது முதலியாருக்குச் சுரீரென்றது. அவருக்கல்லவா தெரியும் அவர் மனைவி அடைந்த ஏமாற்றம்! கருணாம்பிகை கருணை கிடக்கட்டும்; சுந்தரம்மாள் மனசல்லவா குளிரவேண்டும்?

தர்மகர்த்தாவுக்குப் பதில் சொல்ல வாயெடுத்தார். "என் புடைவை கல்லைச் சுற்றத்தான் உபயோகப்படுமென்று நினைக்கிறீர்களோ?" என்று கேட்டுவிட்டார்.

தர்மகர்த்தாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது; "அட பாவி! என்னடா, நாக்கில் நரம்பில்லாமல் பேசுகிறாய்? தெய்வத்தைப் பழிக்கிறாயே! கடவுள் கல்லா! உனக்குக் கொடுக்க இஷ்டம் இல்லாவிட்டால் இல்லை என்று சொல்லிவிடேன். ஏன் தெய்வ அபராதத்துக்கு ஆளாகிறாய்? உன் முகத்தில் விழிப்பது பாவம்!" என்று சொல்லிக்கொண்டே அந்த முதியவர் வெளியேறினார்.

இந்தச் சண்டை முதலியார் உள்ளத்தைக் குழப்பி விட்டது. மனசுக்குள் என்னவோ தொல்லை கொடுத்துக் கொண்டே இருந்தது. எப்படியோ புடைவையை நெய்து விட்டார்.

ஐப்பசி பிறந்தது. தீபாவளிக்குப் பத்து நாள் இருக்கும்போதே ஊரிலிருந்து ஆள் வந்தது; சுந்தரம்மாளுக்குப் பிரசவ வேதனை எடுத்துவிட்டதென்றும், முதல் பிரசவமாகையால் கஷ்டமாக இருக்கிறதென்றும் செய்தி வந்தது. தீபாவளிப் புடைவையை எடுத்துக்கொண்டு முதலியார் மாமனார் ஊருக்கு ஓடினார்.

அவர் போனபோது சுந்தரம்மாள் பிரசவ வேதனையினால் துடித்துக்கொண்டிருந்தாள். மருத்துவச்சிகள் உதவிக்கு வந்திருந்தார்கள். கஷ்டமான பிரசவம் என்று

தெரியவந்தது. எல்லோரும் நல்லபடியாக ஆகவேண்டுமே என்று கடவுளைப் பிரார்த்தித்துக்கொண் டிருந்தார்கள். கடைசியில் குழந்தை பிறந்தது; பெண் குழந்தை. சுந்தரம்மாள் அயர்ச்சியால் மெய்ம்மறந்து கிடந்தாள். உணர்வு வந்ததும் குழந்தையைப் பார்த்தாள். பிரசவக் கோளாறினால் அவள் நிலை மாறியது. அப்போது முதலியார், "தீபாவளிப் புடைவை நெய்துகொண்டு வந்திருக்கிறேன்" என்ற செய்தியைச் சொல்லி அனுப்பினார். சுந்தரம்மாள் அபாய நிலையை அடைந்திருந்தாள். "புடைவையைக் கருணாம்பிகைக்குக் கொடுத்துவிடச் சொல்லுங்கள்" என்று பாதி நினைவோடு அவள் சொன்னாள். அதற்கு மேல் அவள் பேசவில்லை; எழுந்திருக்கவும் இல்லை.

"கருணாம்பிகைக்கா!" முதலியார் இடி விழுந்து போனார். "தர்மகர்த்தா சாபம் இட்டுவிட்டார். ஐயோ! என் வாழ்வைக் குலைக்க வந்தானே!... நான்தான் மகா பாவி! இவள் மனசைப் போன வருஷமே திருப்திப்படுத்தினேனா? இவள் அம்பிகைக்குக் கொடுக்கும்படி சொல்லி விட்டாள். இவள் கடைசி ஆசையல்லவா அது? தர்மகர்த்தாவும் அதைத்தானே சொன்னார்?.. தெய்வம் செய்த சதியா இது? நான் செய்த அபராதத்துக்குத் தண்டனையா? தெய்வத்தை நான் நினைக்கவில்லை என்பதை இவள் சுட்டிக் காட்டி உபதேசம் போலச் சொல்லிவிட்டுப் போய்விட்டாளா?" இப்படி எண்ணி எண்ணி மனம் புண்ணானார். இனிமேல் என்ன செய்வது?

சுந்தரம்மாள் காரியத்தை முடித்துவிட்டுக் குழந்தையைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்ளும்படி சொல்லித் தீபாவளிப் புடைவையை எடுத்துக்கொண்டு ஊர் வந்து சேர்ந்தார். முதல் காரியமாகத் தர்மகர்த்தா காலில் போய் விழுந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். "ஸ்வாமி, நான் அன்பை உணரவில்லை. தெய்வத்தின் அருளையும் உணரவில்லை. காசு பெரிதென்று அன்பை உதறினேன். அன்புடையவன்போல நான் நடிக்கத் தொடங்கினேன். தெய்

வத்தின் சோதனை வந்தது. தெய்வத் திருவருளை இகழ்ந்தேன். அதன் பயன் இது. நீங்கள் இந்தப் புடைவை மனுஷ சரீரத்தின்மேல் படத்தக்கதன்று என்று சொன்னீர்கள். அது தெய்வ வாக்கென்று, பாவி நான் உணரவில்லை. தெய்வத்தை அவமதித்தேன். அந்த வாக்கை, இன்றைக்குத் தெய்வமாகிவிட்ட அவள் ஆமோதித்தாள். 'கருணாம்பிகையின் திருவடியிலே வைத்து அத்தேவியின் கருணையை யாசித்துப் பணிவாயாக' என்று கட்டளையிட்டு மறைந்தாள். எனக்கு ஞானம் உதயமாகிவிட்டது. நான் செய்த தவறுகளுக்கு என் வாழ்வு முழுவதும் பரிகாரம் செய்துகொண்டு வருவேன். ஒவ்வொரு தீபாவளிக்கும் ஒரு புடைவை நெய்து கருணாம்பிகையின் திருவடிகளில் வைப்பேன். அதனால் அம்பிகையின் அருள் கிடைக்கும். பூத உடம்பை விட்டாலும் அன்புருவமாக மறைந்து நிற்கும் சுந்தரம்மாளின் ஆத்மாவுக்குத் திருப்தி உண்டாகும். என்னை மன்னித்து ஆட்கொள்ளுங்கள்" என்று சொல்லி விம்மி விம்மி அழுதார். கிழவருக்குக்கூட அழுகை வந்துவிட்டது. ஆறுதல் கூறினார்.

* * *

அது முதல் பழனியப்ப முதலியார் வேறு மனிதர் ஆகிவிட்டார். உண்மையிலே தெய்வத்தின் கிருபை அவருக்கு உண்டாயிற்று. நாளுக்கு நாள் அவர் தொழிலில் முன்னேறினார். இன்று லக்ஷாதிபதியாகிவிட்டார்.

இரண்டாவது மனைவியைக் கல்யாணம் செய்துகொண்டிருக்கிறார். முதல் மனைவியின் குழந்தைக்குக் கருணாம்பிகை என்று பெயரிட்டுக் கண்ணில் வைத்து இமையில் மூடுகிறார்.

சுந்தரம்மாளுக்குத் தீபாவளிப் புடைவை கிடைக்கவில்லை; ஆனாலும் திருக்கோயிலில் கருணாம்பிகைக்கு வருஷந்தோறும் தீபாவளிப் புடைவை கிடைக்கிறது. குந்தனாருக்குத் தீபாவளிப் புடைவை உற்சவத்தின் குதூகலம் கிடைக்கிறது.

# அன்னத்தின் வெற்றி

ஏதோ கைக்கு வந்த புத்தகத்தைப் புரட்டுவது என்ற பழக்கத்தில் ஒரு பள்ளிக்கூடத்துப் பையனுடைய பாட புத்தகத்தைப் புரட்டினேன். ரெயில் வண்டி, கப்பல், ஆகாய விமானம்-இவற்றின் படங்களைக் கண்டேன். கண்ணை அந்தப் பக்கத்தில் ஓட்டினேன். "வாகனங்கள்" என்ற தலைப்பில் ஒரு பாடம். வரவர விஞ்ஞான ஆராய்ச்சியினால் மனிதர்களுக்கு ஏற்பட்டுவரும் வசதிகளையும், மனிதன் தரைமீது காலால் நடந்து, வண்டியில் போய், கடல்மீது போய், வானத்திலும் பறக்கும் வகை வந்த கதையையும் பாடத்தில் கண்டேன். 'நிலம் நீர் வானம் என்று மூன்று இடங்களிலும் செல்லும் ஆகாய விமானங்களே இனி வரும் உலகத்து வாகனங்கள். சண்டையானாலும் சமாதானமானாலும் இந்த மூன்று இயல்பும் ஒருங்கே பொருந்திய விமானங்களுக்குத்தான் இனிமேல் மதிப்பு உண்டு' என்று பாடம் முடிந்திருக்கிறது. படித்துப் புத்தகத்தை மூடினேன். கண் இமைகள் தாமே மூடின. நித்திராதேவி இறுகத் தழுவினாள். கனவு உதயமாயிற்று.

## 1

"தாயே, எனக்கு இனி இந்த வாழ்வு போதும். பரம கருணாநிதியாகிய உன்னுடைய சந்நிதானத்தில் நாக்கைப் பிடுங்கிக்கொண்டு பிராணனை விட்டுவிடுகிறேன். எங்கள் ஜாதி முழுவதும் நிர்மூலமாகப் போகட்டும். அதனால் எனக்கு ஒன்றும் துக்கமில்லை. ஆனால் பதவிச் செருக்காலும் செல்வாக்கினாலும் மமதை ஏறிப்போனவர்களுடைய ஏளனச் சொற்களைக் கேட்டு மானமின்றி உயிர்

வாழ்வதென்பது இனி ஆகாத காரியம். எங்கள் ஜாதிக்கு உயர்வு எதுவும் வேண்டாம். தாழ்வு இராமல் இருந்தால் போதும். ஹே கருணாலோசனி, சர்வ ஜீவர்களுக்கும் மாதாவாகிய உன் திருச்செவியில் என் விண்ணப்பம் ஏறு விட்டால் எனக்கு இனிப் புகலிடம் இல்லை.''

சிலம்பு ஒலிப்பது போன்ற தொனியில் இந்த முறை யீடு அம்பிகையின் திருச்செவியில் விழுந்தது. ஸ்ரீ கைலா சத்தில் இறைவனுடன் திருவோலக்கத்தில் இருந்து தேவர்களுக்கெல்லாம் கருணைகடாட்சத்தை வழங்கி விட்டு அப்போதுதான் அந்தப்புரத்துக்கு வந்து இளைப் பாற அமர்ந்தாள் தேவி. அவள் காதில் இந்தத் துக்கக் குரல் விழுந்தது. தன் குழந்தைகளின் துயரத்தைத் தானே உணர்ந்து வலியச் சென்று திருவருள் பாலிக்கும் பரமேசுவரி, இதைக் கேட்ட பிறகு வாளா இருப்பாளா? பரக்கப் பரக்க மஞ்சத்திலிருந்து எழுந்து எட்டிப் பார்த் தாள். அழகிய ராஜஹம்ஸம், பிரமதேவனது சிங்கார வாகனம், தளர்ந்த உடம்பும் சோர்ந்த முகமும் மேல் வாங் கும் மூச்சும் உடையதாக நிலைக்கு வெளியே நின்றது.

''குழந்தாய், இப்படி உள்ளே வா'' என்று அம்பிகை தேனொழுகக் கூறினாள்.

மெல்ல மெல்ல அன்னம் உள்ளே நுழைந்தது. அம்பி கையின் திருவடி மலர்களில் விழுந்து, ''அஞ்சல் என்று சொன்னாலன்றி எழுவதற்கு எனக்குச் சக்தியில்லை'' என்று பொங்கி வரும் விம்மல் சுருதி கூட்டப் புலம்பி யது.

''பயப்படாதே. உனக்குத் துக்கம் வர நியாயமே இல்லையே! ஆருயிர்களைச் சிருஷ்டித்து, அவர்களுக்கு வேண் டிய பொருள்களையும் சிருஷ்டித்து, அவர்களுக்குரிய இன் பங்களையும் சிருஷ்டித்துத் தன் செங்கோல் நடத்தும் நான் முகனுக்கு வாகனமாக இருக்கும் பாக்கியம் இருக்கும் போது உனக்குக் குறை ஏது?''

இந்த ஆறுதல் வார்த்தையே ஹம்ஸராஜாவினுடைய துயரத்தைக் கிளறிவிட்டது. விம்மல் அதிகமாயிற்று. மெல்லத் தலையெடுத்துப் பார்த்தது. சிறிது நேரம் பேச முடியவில்லை. பிறகு, "போதும், அந்தப் பாக்கியம். இனி, பிரம்மதேவர் வேறு வாகனத்தை ஏற்றுக்கொள்ளட்டும். எனக்கு அந்தப் பதவி வேண்டாம். எங்கள் இனத்திற்கே வேண்டாம். பூவுலகத்தில் வாத்தோடும் நாரையோடும் சேர்ந்து நத்தையையோ மீனையோ கொத்தி வயிறு வளர்த்துக்கொள்கிறேன். உண்மையாகச் சொல்கிறேன், தாயே! என் பதவியை வாங்கிவிட ஏற்பாடு செய்யவேண்டும். போதும் நான் பட்ட சுகம்!"

தேவி புன்முறுவல் பூத்தாள்; "பாவம்! எப்போதும் ராஜயோகத்திலே இருப்பவர்களுக்கு ஒரு சிறு துக்கம் வந்தாலும் பூகம்பம் வந்ததுபோல நடுக்கிவிடும். நீ ராஜ யோகம் உடையவன். உனக்குத் துக்கத்தின் சாயை லேசங்கூடத் தெரியாது. ஏதோ சிறு புரைசல் எங்கோ நிகழ்ந்திருக்கிறது. அது உனக்கு இவ்வளவு தாபத்தை உண்டாக்கியிருக்கிறது. நடந்தது என்ன? சொல்" என்று அன்போடு வினவினாள்.

"தாயே, பூவுலகத்தில்தான் ஏழையென்றும் செல்வனென்றும், கூலிக்காரனென்றும் எஜமானனென்றும், உயர்ந்த ஜாதியென்றும் தாழ்ந்த ஜாதியென்றும் பிரிவுகள் இருக்கின்றன என்று கேட்டிருக்கிறேன். பேதமில்லாத பொதுவுடைமை ராஜ்யம் சொர்க்கமென்றே நம்பியிருந்தேன். இங்கேயும் பேதம் உண்டென்று இப்போது தெரிந்துகொண்டேன்; உயர்வு தாழ்வு உண்டென்று உணர்ந்துகொண்டேன்."

"விஷயத்தைச் சொல்; எதற்காகக் காடு சுற்றுகிறாய்? உன்னுடைய தாபத்தால் தோன்றிய உணர்ச்சிகளைக் கொட்டாதே. அதற்கு மூலமான சம்பவத்தைத் தெரிவி. மற்றதையெல்லாம் நான் பார்த்துக்கொள்கிறேன்."

அன்பான பேச்சிலே, நடுவில் சிறிது கடுமை தேவியின் குரலில் தொனித்தது, கற்கண்டுப் பாகிலே கடுக்கென்று சிறிய கற்கண்டுத் துண்டு தட்டுப்பட்டதுபோலே. அன்னம் விழித்துக்கொண்டது. நேரடியாகச் செய்தியைச் சொல்ல ஆரம்பித்தது.

*　　*　　*

இன்று காலையில் பிரம்மதேவர் ஸ்ரீ கைலாசத்துக்குப் புறப்பட்டார். ஸோமவாரத்தில் ஸர்வலோக நாயகராகிய சிவபெருமானுடைய தரிசனம் இல்லாவிட்டால் அவருக்கு ஒன்றும் ஓடாது. என்மேல் ஆரோகணித்துக்கொண்டு ஸ்ரீ கைலாசத்துக்கு எழுந்தருளினர். வழக்கம் போல என்னைக் கோயிலுக்குப் புறம்பே நிறுத்திவிட்டுப் பரமேசுவர தரிசனத்துக்கு எழுந்தருளினர். ரிஷபதேவர் இருக்கும் மண்டபத்தில் என்னை விட்டுச் சென்றார். நான் உள்ளே போனேன். அங்கே புகுந்தவுடனே எனக்கு ஒரு விஷயம் தெரியவந்தது. நாராயண மூர்த்தியும் அன்று பரமசிவனுடைய தரிசனத்துக்கு வந்திருக்கிறாரென்பதை உணர்ந்தேன். ரிஷபதேவர் இருக்கும் இடத்தில் கருடதேவரும் இருந்தார். இருவரும் உல்லாசமாகப் பேசிக்கொண்டிருந்தனர். நெடு நாள் காணாமல் சந்தித்தவர்கள் போல மிகவும் சந்தோஷத்தோடு சிரித்துக்கொண்டு சல்லாபம் செய்துகொண் டிருந்தார்கள்.

ரிஷபதேவர் என்னைக் கண்டவுடன் திடீரென்று பேச்சை நிறுத்திவிட்டுக் கண்ணைக் காட்டினர். அந்தக் குறிப்பினால் நான் வருவதைத் தெரிந்துகொண்ட கருடதேவர் என்னைத் திரும்பிப் பார்த்தார். பார்த்தவர் ஒன்றும் பேசவில்லை. வா என்றும் சொல்லவில்லை.

நான் எப்போதும் போல, "என்ன, திடீரென்று பேச்சை நிறுத்திவிட்டீர்களே! நான் வந்தது தடையாக இருக்கிறதோ?" என்று வேடிக்கையாகக் கேட்டேன்.

ரிஷபதேவர் என்னை ஏறெடுத்துப் பார்த்தார். ஏளனமாகச் சிரித்தார்; "ஓகோ! உனக்காகப் பயந்துகொண்டு நாங்கள் மௌனம் சாதிப்போம் என்று நினைத்துவிட்டாயோ?" என்று அதுகாறும் கேட்காத ஏதோ தொனியிலே சொன்னார். என் காதை அது அராவியது.

"பேசிக்கொண்டே இருந்தவர்கள், திடீரென்று நிறுத்திவிட்டீர்களே என்று கேட்டேன்" என்று நான் சிரித்தபடியே சொன்னேன்.

"பேசுவதும் பேசாமல் இருப்பதும் எங்கள் இஷ்டம். தலை போயும் மானம் போகாமல் உயிர் வாழ்வோருடைய சேவகன் கட்டளை இடவேண்டிய அவசியம் இல்லை" என்று பிரம்பால் அடித்ததுபோலப் பேச்சு வந்தது; பார்த்தேன். கருடதேவரே அத்தனை ஆக்கிரோஷத்துடன் பேசினார்; பறவை இனத் தலைவராக விளங்கும் சாக்ஷாத் கருடஸ்வாமியே இப்படி ஆத்திரத்துடன் பேசினார்.

எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. எம்பெருமானுகிய சதுர்முகப் பிரம்மாவையும் அவர்கள் இழுத்து வரும்படியாக அவர் அவர்களுக்கு என்ன செய்தாரோ தெரியவில்லை. என்றைக்கோ நடந்ததாகச் சொல்லும் கதையை அவர்கள் இப்போது எடுத்துப் படிக்கக் காரணமும் விளங்கவில்லை. சிருஷ்டிகர்த்தா ஐந்து முகங்களை முதலில் பெற்றுப் பிறகு பரமேசுவரனுக்குத் தம் சிரசையே சமர்ப்பணம் செய்து வன்மை பெற்றதை அந்த இரண்டு பெரியவர்களும் அப்போது நினைக்க வேண்டிய அவசியம் என்னவோ, தெரியவில்லை.

நான் நிதானித்துக்கொண்டேன். "பெரியவர்கள் பேச்சை இங்கே இழுக்கவேண்டாம்; அடியேனைப்பற்றி எது வேண்டுமானாலும் சொல்லுங்கள். எம்பெருமானைப் பற்றிச் சொல்லாதீர்கள். என்மேல் உண்டான கோபத்துக்கு அவர் காரணமாக மாட்டார்" என்றேன்.

இப்படிப் பேசிக்கொண்டிருந்தபோதே, "பூவுலகத்தில் குலாலன் சட்டிபானை பண்ணுகிறான். தேவ

லோகத்தில் இவர் பண்ணுகிறார். அவனுக்கும் இவருக்கும் வித்தியாசமே இல்லை. இந்த அழகுக்கு, இவரையும் சேர்த்து மும்மூர்த்திகளென்று சொல்லும்படியாகச் சட்டம் வேறு போட்டிருக்கிறார்கள்'' என்று ரிஷபதேவர் கொதித்துப் பேசினார்.

"அவர்கள் மூவரும் சேர்ந்து நின்றால் நமக்கு என்ன? நம்மைப் பற்றிய அளவில் நம்முடைய விமரிசனத்தை வைத்துக்கொள்வோமே!'' என்று நான் பணிவாகவே சொன்னேன். இதில் என்ன தாயே குற்றம் இருக்கிறது? திரிமூர்த்திகளுடைய அந்தஸ்தை எடை போட்டுப் பார்க்க எங்களுக்கு அறிவோ, அதிகாரமோ ஏது?

என் வார்த்தைகள், எரிகிற தீயில் எண்ணெய் விட்டதுபோல் ஆயின. இரண்டுபேரும் மாறி மாறிச் சீற ஆரம்பித்துவிட்டார்கள்.

"யாருக்கடா புத்தி போதிக்க வருகிறாய்? நண்டையும் நத்தையையும் தின்று வயிறு வளர்க்கும் ஜாதிக்குப் பேச்சைப் பார், பேச்சை! திரிமூர்த்திகளாம்! கண்டானும்!'' என்று ஒருவர் குமுறினார்.

"பெண்ணைப்போல நடந்து பெண்ணைப்போல நெளியும் உனக்கு ஆணவம் தலைமேலே ஏறியிருக்கிறது. பூ என்று ஊதினால் நாற்பது காதம் போய் விழுவாய். தாமரைப் பூவாவது சிறிது கனமாக இருக்கும். அதைவிட லேசான ஆகிருதி படைத்த உனக்கு வாய் வேறேயா?'' என்று ஒருவர் பொங்கினார்.

"நானும் திரிமூர்த்தியிலே ஒருவன் என்று அவர் சொல்கிறாராம். இவன் நானும் உங்களோடு சேர்த்தி என்று இங்கே வந்தானும்! போதும் போதும் உன்னுடைய உறவு. இனிமேல் இந்தப் பக்கம் எட்டிப் பாராதே. உன் எஜமானன் வந்தால், அவரோடே போய் நில். இல்லாவிட்டால் கைலாச மலை அடிவாரத்தில் மற்றத் தேவர்கள் வாகனங்கள் நிற்கும் கொட்டகை இருக்கிறது. அங்கே போய் நீ

உன் அதிகாரத்தையும் நியாயத்தையும் காட்டு. இந்தப் பக்கம் எட்டிப் பார்த்தாயோ...'' என்றார் ரிஷபதேவர்.

“நான் பட்சிராஜா என்ற மரியாதைகூட இல்லை. என்ன துணிச்சல் உனக்கு? சீ புழுக்கை!'' என்று உத்தண்டமாகப் பேசிக் காறித் துப்பினார் கருடஸ்வாமி.

அவர்கள் திருவாக்கிலிருந்து வந்த வார்த்தைகளை அப்படியே சொல்ல எனக்குத் திராணி இல்லை. அவ்வளவையும் சொல்ல முடியவும் முடியாது. நான் தேவலோகத்தில் வாழ்ந்தது போதும். என்னால் பிரம்மதேவருக்கு இகழ்ச்சி வந்ததும் போதும். உன்னுடைய கருணை எனக்கு இருக்குமென்று துணிந்து முறையிட வந்தேன். என்னைப் பழித்தது பெரிதல்ல; சிருஷ்டி கர்த்தாவையே பழித்தார்கள்; அதற்குமேல் பெண்குலத்தையே பழித்தார்கள். எனக்கு அருள்க, தாயே!

* * *

இந்த விவரத்தைச் சொல்லிவிட்டு மீட்டும் விக்கி விக்கி அழத் தொடங்கியது ஓதிம அரசு. தேவி மனம் கனிந்து, “ஹம்ஸ ராஜாவே, எதற்காக இப்படித் துக்கிக்கிறாய்? இதெல்லாம் என்னுடைய திருவிளையாட்டென்று எண்ணிச் சந்தோஷப்படு. அவர்கள் சொன்ன வார்த்தைகளுக்கு நீ பதில் சொல்லாமல் பணிந்து வந்தாயே, அதை மெச்சுகிறேன். உன்னுடைய துக்கத்தை மாற்ற வழி தேடுகிறேன். நீ கலைப்படாதே. நீ போய் வழக்கம் போல் உன் கடமையைச் செய்துகொண்டிரு. அகங்காரத்துக்குக் கைலாசம் இடம் கொடாது. இந்த எல்லைக்குள் அகங்காரத்தை அடைந்தவர்கள் யாரானாலும் தண்டனை பெறுவார்கள். நீ எல்லாவற்றையும் மறந்துவிடு'' என்று அருள் செய்து ஹம்ஸத்துக்கு விடை கொடுத்து அனுப்பினாள் அகிலாண்ட நாயகி.

ஹம்ஸம் அம்பிகையின் குழலொலி போன்ற அந்த மதுர வார்த்தைகளால் தாபம் ஆறிச் சத்திய லோகத்தை அடைந்தது.

ஸ்ரீ கைலாசத்தில் அன்று ஏதோ ரகசிய ஆலோசனை நடந்தது. வழக்கம்போல ரிஷப தேவரும் கருடதேவரும் திருக்கோயிலின் வெளியிலே உள்ள மண்டபத்தில் இருப்பவர்கள், அடிவாரத்து மண்டபத்திலே இருந்தார்கள். மிகவும் அந்தரங்கமான ஆலோசனை நடக்கும்போது தான் இப்படி அவர்களுடைய ஸ்தானத்துக்கு மாறுதல் ஏற்படும். ஆனால் இந்த மாதிரியான ரகசியக் கூட்டம் யுக யுகாந்தரங்களுக்கு ஒரு முறைதான் ஏற்படும். இப்போது யுகசந்தி ஒன்றும் இல்லை; பிரளயமும் இல்லை; புதிய சிருஷ்டியும் இல்லை. அப்படி இருக்க இந்த அந்தரங்க ஆலோசனைக்குக் காரணம் தேவர்களுக்கு விளங்கவில்லை. மும்மூர்த்திகளைத் தவிர இந்திரனுக்குக்கூட அந்த ஆலோசனையில் இடமில்லை. திருமாலினுடைய அந்தரங்க ஆலோசனைகளுக்குக் கருடதேவர் புறம்பாக இருக்க மாட்டார். அவர் அறியாத ரகசியமே இல்லை. ரிஷபதேவரும் சிவபெருமானுடைய பிரதான பிருத்யராகிய நந்தியின் அம்சம் அல்லவா? இந்த இருவரையுங்கூட விலக்கிவைத்து மந்திராலோசனை நடக்கிறது.

மந்திராலோசனையின் முடிவு வெளியாயிற்று; வாயு தேவன் அதைப் பிரகடனம் செய்தான். "தேவலோகத்தில் ஏதாவது புதிய விநோதம் நடக்கவேண்டுமென்பது திரிமூர்த்திகளின் யோசனை. பூலோகத்தில் வாகனங்களை ஓடவிட்டுப் பந்தயம் நடத்துகிறார்களாம். அப்படி இங்கும் வாகனங்களைக் கொண்டு பந்தயம் நடத்துவதாகத் திருவுள்ளங் கொண்டிருக்கிறார்கள் மும்மூர்த்திகளும். முதல் முதலில் தங்களுடைய சொந்த வாகனங்களைக் கொண்டே இந்த விநோதத் திருவிளையாட்டை நடத்தத் தீர்மானித்திருக்கிறார்கள்" என்ற செய்தி தேவலோகம் முழுவதும் பரவியது. பரவாத இடங்களுக்கெல்லாம் தாமே போய்ப் பரப்பினார் நாரத பகவான்.

செய்தி ரிஷபதேவர் காதில் விழுந்தது; கருடபகவான் செவியேற்றார்; பிரம்மதேவருடைய அன்னமும் தெரிந்து

கொண்டது. 'நம்மையுமா அந்தக் கூட்டத்தில் சேர்த்தார்கள்? நாம் ஜயிக்கிறோமோ இல்லையோ? அந்த இரண்டு வாகனப் பெரியாரோடும் சேர்ந்து போவதே ஒரு புதிய மதிப்பு. இது அம்பிகையின் கருணைபோலும்!' என்று ஹம்ஸம் எண்ணியது.

'இதென்ன பைத்தியக்கார யோசனை! உலகையெல்லாம் க்ஷண நேரத்தில் சுற்றிவரும் நம்முடைய பராக்கிரமத்துக்கும், எட்டினமட்டும் பறந்து வானலோக சாம்ராஜ்யத்துக்கு ஆதிபத்தியம் வகிக்கும் கருடனுடைய பராக்கிரமத்துக்கும் முன்னே, கர்ப்ப ஸ்திரீயைப் போல அசைந்து அசைந்து நடை போடும் பேதை அன்னம் எம்மாத்திரம்! எம்பிரான் திருவுள்ளத்தில் இந்த விசித்திர எண்ணம் தோன்றக் காரணம் என்னவோ!' என்ற நினைவில் ஆழ்ந்தார் ரிஷபதேவர்.

'அன்னக் குஞ்சின் சிறுமையை வெளிப்படுத்த இப்படி ஒரு சந்தர்ப்பம் வருமென்று யார் எதிர்பார்த்தார்கள்? நம் பெருமை இன்னும் ஒரு முழம் உயரப்போகிறது!' என்று கர்வத்தோடு சிறகை அடித்துக்கொண்டார் வைனதேயர்.

இந்தத் தேவலோக விளையாட்டுக்கு நாள் குறிப்பிட்டாயிற்று. சத்திய லோகத்தில் பந்தயம் தொடங்குவதாகத் திட்டம் போட்டார்கள். சத்திய லோகத்தில் புறப்பட்டு அதைக் கடந்து க்ஷீராப்தியைத் தாண்டி அப்பால் கைலாசமலையை அடைய வேண்டும். யார் முன்பு அதை அடைகிறார்களோ, அவரை அம்பிகை தன் வாகனமாக ஏற்றுக்கொள்வதோடு வேறு சிறப்புக்களும் செய்வாள். இதுதான் பந்தயத்தின் நிபந்தனை. "பூ, இது தானா பிரமாதம்! இம்மென்பதற்குள்ளே ஏழு தடவை சத்தியலோகம், க்ஷீராப்தி, கைலாசம் இந்த மூன்றையும் ஒரே தாவாகத் தாவி வந்துவிடுவேன்" என்று வீறு பேசினார் விடைக்குலத் தலைவர். "இந்த மூன்றென்ன? இந்திர லோகத்தையும் எட்டுப் பிரதட்சிணம் செய்து

விட்டு, கற்பக நிழலில் இளைப்பாறிவிட்டு வா என்றாலும் வருவேன்'' என்று கருட பகவான் கூறினார்.

தேவர்களுக்கு இந்த வேடிக்கையைப் பார்க்க வேண்டு மென்று ஆவல் அதிகமாக இருந்தது. அப்ஸரஸுகளெல்லாம், "ஐயோ! பாவம்! அன்னத்தை இப்படித் துன்பப்படுத்தலாமோ!'' என்று அங்கலாய்த்தார்கள். தேவலோக முனிவர்களெல்லாம், "பரமேசுவரனுடைய திரு விளையாட்டு இது. இதில் ஏதோ சூக்ஷ்மம் இருக்கிறது'' என்று சொல்லிக்கொண்டார்கள்.

* * *

பந்தய நாள் வந்தது. சத்திய லோகம் என்றும் இல்லாத சோபையோடு விளங்கியது. திரிமூர்த்திகளும் தக்க ஆசனத்தில் வீற்றிருந்தார்கள். நாரதமா முனிவரே பந்தயத்துக்கு ஆணையிடும் அதிகாரியாக நியமிக்கப் பெற்றார்.

மூன்று வாகனங்களும் வந்து நின்றன. ரிஷபதேவர் தலை நிமிர்ந்து நின்றார். கருடதேவர் உடம்பைக் கோதிக் கொண்டு நின்றார். அன்னமோ அடங்கி ஒடுங்கிப் பணிவாக நின்றது.

நாரதர் பேசலானார்: "ஹே விருஷப ராஜாவே, பந்தயத்தின் நிபந்தனைகள் தெரியும் அல்லவா? உமக்குரிய கைலாசந்தான் லக்ஷ்ய ஸ்தானம். பரமசிவனுடைய வாகனமாகிய உமக்கு எப்போதும் முதல் ஸ்தானம் அளிப்பது சம்பிரதாயமாகிவிட்டது. அந்தப் பதவியைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும். இதிலே கலந்துகொள்ள இஷ்டமில்லாவிட்டால் இப்போது அதைத் தெரிவித்துவிடலாம்'' என்று சொல்லவே, ரிஷபதேவர் தம் சலங்கைமணியை ஒரு முறை உதறிவிட்டுக்கொண்டே, "என்ன மகரிஷே, அப்படிக் கட்டளையிடுகிறீர்கள்? என்னுடைய சக்திக்கு எப்போதாவது குறைவு நேர்வது உண்டா? இந்தச் சிறிய காரியத்துக்குப் பயந்துகொண்டு

நான் கைலாசத்தில் வாழ முடியுமா? பரமேசுவரனைத் தரி சிப்பதற்கு முன்பு தேவர் என்னைத் தரிசித்துச் செல்லும் பதவி எனக்குச் சும்மாவா கிடைத்தது?" என்று முறுக் காக விடை கூறினர்.

"சரி, அப்படியானல் உம்முடைய உள்ளம் போல உமக்குக் கௌரவம் கிடைக்கட்டும்" என்று அதன் கழுத் தில் ஒரு மாலையை இட்டார் நாரதர்.

அப்பால் கருடனை நோக்கிக் கூறலானார்: "பாற்கட லைக் கண்டவுடன் பழைய ஞாபகத்தில் அங்கே இறங்கி விட வேண்டாம். அதற்கு மேலும் போய்க் கைலா சத்தை அடையவேண்டும், கருடதேவரே! மகாவிஷ்ணு வுக்குப் பெரிய திருவடியாக இருக்கும் உம்முடைய பாக்கியமே பாக்கியம். நீர் பட்சி ராஜாவாக விளங்கு கிறீர். பந்தயத்திலே உம்முடைய முழு ஆற்றலையும் காட்டவேண்டும்."

"ஸ்வாமி, கைலாசம் எனக்குப் புதிதல்லவே? பாற்கடலிலிருந்து அடிக்கடி கைலாசம் போகும் வழக்கம் இந்தச் சிறகோடு உடன்பிறந்ததல்லவா? 'ஈயாடுவதோ கரு டற் கெதிரே' என்ற பழமொழி சர்வ லோகத்திலும் என் னுடைய ஜயத்தைக் கோஷித்துக்கொண் டிருக்க இந்தச் சிறிய விளையாட்டிலே எனக்கு உற்சாகம் உண்டாவதற் குத் தடை என்ன?"

நாரதர் மெல்ல அன்னத்தை நோக்கினர்; "குழந்தாய், உன்னுடைய ஊரிலிருந்து புறப்படுகிறாய்; பாற்கடலைத் தாண்டி, கைலாசத்துக்குப் போகவேண்டும். பலிஷ்டர் களாகிய இரண்டு பேர் உன்னோடு வருகிறார்கள். நீ தைரி யமாக இந்த விளையாட்டிலே கலந்துகொள்வாயா?" என்று கேட்டார்.

"ஸ்வாமி, நான் வெறும் கருவி. எம்பெருமான் களெல்லாம் சேர்ந்து நிர்த்தாரணம் செய்த இந்தக் காரியத் தைச் செய்வது என் கடமை. இதில் வெற்றியோ தோல்

வியோ அதுபற்றி எனக்குக் கவலை இல்லை. என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்றது அன்னம்.

"ஐயோ! பாவம்!'' என்று லக்ஷ்மியின் தோழி ஒருத்தியின் குரல் காற்றோடு இழைந்து வந்தது. அரம்பையர் யாவரும் அந்த அநுதாபத்திலே கலந்துகொண்டார்கள்.

நாரதர் மறுபடியும் கனைத்துக்கொண்டு பேசலானார்: "ஒரு முக்கியமான சங்கதியைச் சொல்ல மறந்துவிட்டேன். உங்களுடைய எஜமானர்களின் கருணையால் நீங்கள் பெற்ற பலத்தைக் கொண்டு இங்கே பரீட்சை செய்யக் கூடாது. அது தவறு. உங்களுக்கு ஸ்வபாவமாக உள்ள ஆற்றலை, உங்கள் ஜாதியினர்களுக்கு எவ்வகையான சக்தி உண்டோ அந்த இயல்பான சக்தியை வைத்துக்கொண்டே நீங்கள் ஜயிக்கவேண்டும். இல்லாவிட்டால் இந்தப் பந்தயம் திரிமூர்த்திகளின் பலாபலத்தைச் சோதித்ததாக முடியும். அது மிகவும் அபசாரம். ஆகையால் உங்கள் மூவரிடத்திலும் உள்ள தெய்வ சக்தியை இதோ கிரகித்துக் கொள்கிறேன். உங்கள் சொந்த பலத்தைக்கொண்டே ஜயிக்கும் ஆற்றல் உங்களுக்கு உண்டு. உங்களுக்கு மங்களம் உண்டாகட்டும்! இனி ஆரம்பிக்கலாம்.''

மந்திராக்ஷதையைத் தூவி ஆக்ஞை கொடுத்தார் நாரதர். தேவர்கள் வைத்த கண் வாங்காமல் பார்க்கத் தொடங்கினார்கள். ரிஷபதேவர் துள்ளிக் குதித்தார். கருட பகவான் தத்தித் தாவிப் பறந்து குதூகலித்தார். அன்னம் மெல்ல நடந்தது. க்ஷண நேரத்தில் ரிஷபதேவர் சத்திய லோகத்தின் எல்லையை அடைந்துவிட்டார். கூரிய கண் படைத்த தேவர்கள் இருந்த இடத்திலிருந்தே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

## 3

கருடதேவர் ரிஷபதேவரை அடுத்துச் சென்றார். அன்னம் இருவருக்கும் சற்றுத் தூரத்திலே நடந்தது. ரிஷபதேவர் வாலைக் கிளப்பிக்கொண்டு மேகத்தை முட்டி

எழும்பிக் குதித்தார். பக்ஷிராஜா மேக மண்டலத்தூடே புகுந்து புறப்பட்டார். அன்னமோ கீழே தரையில் நடந்து சென்றது.

ரிஷபதேவர் சத்தியலோகத்தின் எல்லையை அடைந்த வுடன் க்ஷீராப்தி தோன்றியது. என்றும் இல்லாதபடி அன்று ஒரே கொந்தளிப்பு. அலைகள் மலைபோல எழும்பி அடித்தன. ரிஷபதேவர் அதன் கரையிலே நின்று திரும்பிப் பார்த்தார். பக்ஷிராஜா நெடுந்தூரத்தில் தெரிந்தார். அன்னம் கண்ணுக்கே தெரியவில்லை. அவருக்கு உற்சாகம் மூண்டது. 'பாற்கடலை ஒரே தாண்டலாகத் தாண்டலாமா? அல்லது உள்ளே குதித்து நீந்தலாமா?' என்று யோசித்தார். முன்பெல்லாம் ஒரு க்ஷணத்தில் தாண்டிப் போய்விடுவார். இப்போது நிமிர்ந்து, அக்கரை தெரிகிறதா என்று பார்த்தார்; தெரியவில்லை. அலைகள் உயரமாக எழும்புவதனால் மறைக்கிறது போலும் என்றெண்ணித் துள்ளிக் குதித்துப் பார்த்தார். அப்போதும் கடலின் எல்லை கண்ணுக்குத் தெரியவில்லை. உள்ளே குதித்துத் துளைந்து செல்வதுதான் வழியென்று எண்ணித் தாவினார். தரைமேல் நடந்து வந்தது போலச் சுலபமாகப் படவில்லை.

அவர் உள்ளத்தில் அப்போதுதான், 'இது விளையாட்டல்ல, வினை' என்ற உண்மை புலப்பட்டது. 'ஒரு சிறு குழிபோல இருந்த இந்தக் கடல் இவ்வளவு பெரிதாகி விட்டதே! எப்படி?' என்று யோசித்துப் பார்த்தார். விஷயம் விளங்கியது. 'நம்மிடத்தில் இறைவன் கருணையாகிய பலம் இருந்தது. அதனால் பெரியவனாக இருந்தோம். இப்போது அந்தத் தெய்வ பலம் போய்விட்டது போலும்!'- இப்படி எண்ணுகையிலேயே கால் தளர்வது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. பாற்கடலின் அலைகள் பேய் அறைவது போல அறைந்தன. முகத்தை மேலே தூக்கிக்கொண்டார். மூக்குக்குள்ளெல்லாம் பால் புகுந்தது. மூச்சு விட முடியவில்லை. வாயைத் திறந்து பெருமூச்சு விட்டார். முன்னங்காலால் அடித்துத் துழாவி நீந்தினார். பளீர் பளீர் என்று

அலைகள் கன்னத்தில் அடித்தன; காதில் அடித்தன. அப்போது எந்த ஞாபகமும் அவருக்கு வரவில்லை. இதுகாறும் அநுபவிக்காத பிராண சங்கடம் ஒன்றை அநுபவித்தார். நரகம் என்பதை அவர் பார்த்ததில்லை. அதுதான் நரகமோ என்றுகூட எண்ணினார்.

வாய்விட்டுக் கதறி அறியாத ரிஷபதேவர் அன்று, முதல் முறையாக, "அம்மா!" என்று அலறினார். அவ்வளவு தான் தெரியும்; அவர் நினைவிழந்தார்.

* * *

கருடதேவர் சத்தியலோகத்தின் எல்லைக்கு வந்த போது ரிஷபதேவரைக் காணவில்லை. அவர் முன்னாலே நெடுந்தூரம் போய்விட்டாரென்று எண்ணிக்கொண்டார். பாற்கடல் கொந்தளித்துக்கொண் டிருந்தது. கருடபகவானுக்கு க்ஷீராப்தியைக் கண்டவுடன் பின்னும் உற்சாகம் உண்டாகிவிட்டது. கரையோரமாகச் சென்று சிறிது நின்றார். சிறகைக் கோதிக்கொண்டார். ஒரே வேகமாகப் பறந்து போனால் ரிஷப தேவரைப் பிடித்துவிடலாம் என்று எண்ணி எழும்பிப் பறந்தார். பாற்கடல் என்றும் இல்லாமல் பல மடங்கு நீண்டுவிட்டதோ என்று தோன்றியது அவருக்கு. பறக்கப் பறக்கத் தூரம் மாளவே இல்லை. பறப்பதென்றால் கருடஸ்வாமிக்கு அளவற்ற உற்சாகம். அதுவும் க்ஷீராப்திக்கு மேலே பறப்பது அவருக்கு நித்திய விளையாட்டு. இன்றோ, இதென்ன இப்படி? சிறகுகள் சேருமிடத்தில் தோள்பட்டையில் கொஞ்சம் வலியெடுக்கிறது போல் இருக்கிறதே! இந்தப் புதிய அநுபவம் முதலில் அவருக்கு விசித்திரமாக இருந்தது; மயக்கமோ என்று தோன்றியது; பிறகு வாஸ்தவமாகப்பட்டது. சிறிது நேரம் சிறகை அசைக்காமல் வானவெளியில் தூங்குவதுபோல மிதந்தார். சிறிது களைப்புத் தீர்ந்தது. மேலே பறக்க வேண்டுமே! பாற்கடலைக் கடந்து செல்லவேண்டுமே! தம் கூரிய திருஷ்டியால் பின்னே பார்த்தார். அது வரையில் கண்ணுக்கே தெரியாமல் இருந்த அன்னம் சிறிய

ஈயைப்போல நெடுந் தூரத்தில் பறந்துவருவது தெரிந்தது. முன்னால், ரிஷபதேவர் எவ்வளவு தூரம் போனாரோ என்ற எண்ணத்தோடு பறந்தார். இப்போதோ, 'இவன் வந்து விட்டானே' என்ற ரோசம் உந்தியது. பலங் கொண்ட மட்டும் சிறகுகளை மடக்கி விரித்து வானக்கடலில் ஒரு தாவுத் தாவினார்.

மனோவேகம் என்றுதான் சொல்லவேண்டும். அவ்வளவு வேகத்தில் நெடுந்தூரம் போய்விட்டார். ஆனால் சிறகுகளின் மூட்டுவாய்களிலே இப்போது இசிவு கண்டது. சிறிது ஆறுதலாக மிதந்தார். சிறகை விரித்த படியே மிதப்பதில் எப்போதுமே அவருக்குச் சிரமம் இல்லை. பூமியின்மேல் படுத்திருந்தால் நமக்குச் சிரமமோ முயற்சியோ இருக்குமா? அதுபோலத்தான் இருக்கும் முன்பு. ஆனால் என்ன ஆச்சரியம்! அப்போது அப்படி மிதப்பதற்குக்கூட முயற்சி வேண்டியிருந்தது. 'சக்தியில்லாமல் தத்தளிக்கும் நிலை ஒன்று உண்டு' என்பதைக் கனவிலும் நினைத்துப் பார்த்ததில்லை அவர். இப்போதோ, 'சக்தி நம்மிடமிருந்து குறைகிறது' என்பதை அணு அணுவாகத் தெரிந்துகொள்ளும் சந்தர்ப்பம் வந்துவிட்டது. 'என்ன இது! பறக்கிறோம் என்ற நினைவே இல்லாமல் வானவெளியில் வட்டமிட்ட நாம் இன்று திடீரென்று முடமாகிவிட்டோமா?' என்று நினைத்தபோது, சுரீரென்று தோள்பட்டையில் வலியெடுத்தது.

'ஜல் ஜல்!' என்ற ஒலி அவர் காதில் விழுந்தது. அன்னம் வந்துகொண்டிருப்பது தெரிந்தது. மானம் தாங்க முடியவில்லை புள்ளரசுக்கு. மற்றொரு முறை மூச்சைப் பிடித்துக்கொண்டு வானக்கடலிலே தாவினார். இதோ அக்கரை அவர் கண்ணுக்குப் புலப்பட்டது. இனிமேல் உயிரைப் பிடித்துக்கொண்டாவது பறக்கலாமென்ற துணிவு வந்தது. ஆனால் சிறகு வேலை செய்யவில்லை. உடம்பெல்லாம் ஒரே இசிவு. சிறகை யாராவது கழற்றிவைத்தால் தேவலை என்று தோற்றியது. பின்னால்

திரும்பிப் பார்த்தபோது அன்னத்தைக் காணவில்லை. சிறிது ஆறுதல் உண்டாயிற்று. அடுத்த கணத்தில் மீண்டும் அன்னத்தின் சப்தம், சிலம்பு போன்ற ஒலி, காதில் விழுந்தது. இப்போது கீழேயிருந்து அந்தத் தொனி கேட்டது. 'சரி, தொலைந்தான். நாம் பட்ட பாட்டுக்கு இவன் எந்த மூலை? இந்தப் பாற்கடலுக்கு இரையாகிவிட்டான்' என்று எண்ணிய எண்ணத்திலே ஒரு துளி போலியான இன்பம் அவருக்குக் கிடைத்தது. ஆனால் உடனே இரண்டு விலாவிலும் சுரீரென்று வேதனை எழுந்தது. கடலைக் கடக்க வேண்டுமே! பந்தயம் ஜயித்தாலும் ஜயிக்காவிட்டாலும் கடலைக் கடந்து தரையில் போய்த்தானே நிற்கவேண்டும்? நடுக்கடலில் இளைப்பாற முடியுமா? பிராணனைக் காப்பாற்றிக்கொள்வதற்காகப் பறக்கவேண்டியது அவசியமாகிவிட்டது.

புதியமலைப்பு ஏற்பட்டது. சோர்வினால் உடம்பு கொஞ்சம் கீழே இறங்கியது. என்ன ஆச்சரியம்! அன்னத்தின் குரல் அவர் காதில் இப்போதும் விழுந்தது. தம் திருஷ்டியைக் கீழே செலுத்தினார். வெண்ணிறப் பாற்கடற் பரப்பிலே சுலபமாக அன்னத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. பொன்னிறம் பெற்ற அதன் கொண்டை பளபளத்தது. அது கண்ணிலே பட்ட பிறகுதான் கருடதேவருக்கு அந்தச் சின்னஞ் சிறு பறவையின் இருப்பிடம் தெரிந்தது. அது ஏதோ வாயினால் சொல்லிக்கொண்டே இருக்கிறதே! "அம்மா, கருணாகரீ" என்ற சப்தம், குழறுவதுபோலக் கருடன் காதில் விழுந்தது. கூர்ந்து கவனித்தார். ஆச்சரியத்தின்மேல் ஆச்சரியம்! அன்னம் ஒய்யாரமாகப் பாற்கடல் திரையைத் தெப்பமாகவும் அம்பிகையின் திருநாமத்தைக் கோலாகவும் கொண்டு சுகமாக மிதந்து நீந்தி வருகிறது! அன்னம் அல்லவா அது? நீர்நிலைக்கு அஞ்சுமா?

கருடபகவானுக்கு நெஞ்சிலே இடி விழுந்தது போல் ஆயிற்று. எந்த வானவெளியைத் தம்முடைய ஏகபோக ராஜ்யமாக எண்ணி அரசுசெலுத்தி வந்தாரோ அந்த

ஆகாசப் பரப்பு அவரை ஏற்றுக்கொள்ள மறுக்கிறது. அவர் தம் சொந்த முயற்சியினால் எதிரிட்டுப் பறந்தாலொழிய அந்தப் படுபாவியாகிய வானம் அவரைத் தள்ளிவிடக் காத்திருக்கிறது. கீழே அவருடைய நாயகருக்கு இல்லமாக உதவும் பாற்கடலோ தயாதாக்ஷிண்யமின்றி அலைக் கரங்களை ஆட்டி, "கீழே வந்தால் அமிழ்த்திக் கொன்று விடுவேன்" என்று கொக்கரிக்கிறது. 'நமக்கென்று இப் போது என்ன பலம் இருக்கிறது? அன்னக் குஞ்சு என்று அற்பமாக நினைத்தோமே! நமக்குச் சொந்தமான வானமும், நம் தெய்வத்துக்குச் சொந்தமான க்ஷீராப்தியும் நம்மைக் கைவிட்டபோது எதிர் நிற்க நமக்குச் சக்தியில்லையே! அன்று நமக்கு மிஞ்சியவர் இல்லை என்று இறுமாந்தோமே. அதோ சாந்தமயமாக விளங்கும் அந்த ஹம்ஸத்தை ஏளனம் செய்தோமே! இன்று நம் நிலை...' மேலே நினைக்க அவருக்கு உணர்ச்சி இல்லை. "அம்மா!" என்ற கோஷத் துடன் அவர் வலியற்று விழுந்தார்.

* * *

ஹம்ஸம் ஒன்றையும் கவனிக்கவில்லை. எல்லாவற்றை யும் மறந்து அம்பிகையின் திருவடி ஒன்றையே தியானித் துக்கொண்டும், அவள் திருநாமத்தை ஜபித்துக்கொண்டும் பாற்கடலைத் தாண்டிக்கொண் டிருந்தது. வேகமாகவே சென் றது. பாற்கடலின் கரைக்கும் வந்துவிட்டது. அங்கிருந்து மெல்ல மெல்லப் பறந்து கைலாசத்துக்குமேலே போயிற்று. அப்பா! என்ன சிரமமான காரியம்! அம்பிகையின் அந்தப் புரத்தை அடைந்தது. கருணையே உருவாகிய தேவி அங்கே அதை எதிர்பார்த்து நின்றுகொண் டிருந்தாள். அதைக் கண்டவுடன், "வா, என் கண்ணே!" என்று ஆவ லுடன் எடுத்து மடியில் வைத்துக்கொண்டாள். உடம் பெல்லாம் தடவிக் கொடுத்தாள். அமுதமயமான அந்த ஸ்பரிசம் அன்னத்துக்குப் பரமானந்தமாக இருந்தது.

"குழந்தாய், நீ ஜயித்தாய். விநயம் வென்றது; ஆண வம் தோற்றது. தேவலோக ராஜ்யத்திலும் அடக்கத்துக்

குத்தான் மதிப்பு உண்டு என்பதை இன்று உலகமெல்லாம் அறிந்துகொள்ளும். இனிமேல் நீ எனக்கு வாகனம் ஆவாய். உன் ஜாதியில் மற்றொன்று நான்முகனுக்கு வாகனம் ஆகட்டும். உன்னுடைய பெருமையைத் தேவர்கள் அறியட்டும். பூவுலகத்தினர் அறியட்டும். உன் பெயரால் ஒரு மந்திரம் இதோ வெளியிடுகிறேன். ஜபிக்காத மந்திர மாகிய அதற்கு அஜபா மந்திரம் என்ற பெயர் இருக்கும். உன் பேரால் ஹம்ஸ மந்திரம் என்றும் வழங்கும். மகா யோகிகளுடைய உள்ளத் தடத்திலே இந்த மந்திர உருவத்தில் நீந்தி விளையாடுவாயாக!

"இது மட்டுமன்று. பூலோகத்திலும் உன்னுடைய அம்சம் வெல்லட்டும். தரையில் செல்லும் வண்டியும் நீரில் செல்லும் கப்பலும் வானத்தில் செல்லும் விமானமும் இதுவரையில் பூவுலகத்தில் இருந்தன. அவற்றின் மதிப்பு இனி மங்கும். நிலத்திலும் வானத்திலும் நீரிலும் ஒருங்கே இயங்கும் விமானங்களே இனி உலகில் மதிப்பைப் பெறும். உன் அம்சமான அவற்றால் இனி உலகத்தார் போர் புரிவார்கள்; பிரயாணம் செய்வார்கள். ஹம்ஸமே, நீ வாழ்க!"

அன்னம் மெய்ம்மறந்து போயிற்று. சிறிது நேரம் கழித்து மெல்லக் கண் திறந்து அம்பிகையின் திருமுகத்தைப் பார்த்தது. "அம்மா, அவர்கள்..." என்று தயங்கித் தயங்கி ஆரம்பித்தது.

"அந்த ஆணவப் பிண்டங்களா? இங்கே வா" என்று சொல்லி வெளி மண்டபத்துக்கு அழைத்துச் சென்றாள் தேவி. "அம்மா என்று அலறி விழுந்ததால் இவற்றை இங்கே கொண்டுவரச் செய்தேன்" என்று சொல்லிக் காட்டினாள், அன்னத்துக்கு. மூர்ச்சை போட்ட நிலையில் உடம்பெல்லாம் பாலும் ரத்தமும் சேர்ந்து கசிய ரிஷபமும் கருடனும் கிடந்தன.

அன்னம் துணுக்குற்றது. அதன் உள்ளம் நெகிழ்ந்தது. "அம்மா, ஒரு வரம் கேட்கிறேன்" என்று தீனமான குரலோடு சொல்லியது.

"கண்ணே, கேள், தைரியமாகக் கேள்" என்றாள் தாய். "இவர்களை மறுபடியும் பழைய நிலையிலே வைத்துவிட வேண்டும். மகா மூர்த்திகளுக்கு வாகனமாக இருந்த புண்ணியம் படைத்தவர்களல்லவா? இந்த ஏழைக்கு உன் கருணை நிரம்ப உண்டென்பதை நினைக்கும்போது அடியேனுடைய புல்லிய நெஞ்சில் சிறிது அகங்காரத்தின் பொறி எழுகிறது. ஆகையால் எல்லோருடைய அறிவிலும் ஒரு படலத்தை விரித்து, இந்தச் சம்பவம் அடியோடு மறந்துவிடும்படியாகக் கருணை பாலிக்கவேண்டும்."

* * *

"ஓம்!" என்ற சம்மதத் தொனி எழும்பியது; பிறகு ஓரே மௌனம்! "ஹம்ஸஸ் ஸோஹம் - ஹம்ஸஸ் ஸோஹம் - ஹம்ஸஸ் ஸோஹம் - ஹம்ஸோஹம்" என்ற இனிய நாதம் அதனூடே நாரதர் வீணையிலிருந்து எழுந்தது.

# அக்கினி சாட்சி

"என்ன இருந்தாலும் நீங்கள் அவ்வளவு இடம் கொடுக்கக்கூடாது. எப்போது பார்த்தாலும் அவர்கள் வீட்டிலேயே இருந்துகொண் டிருந்தால் குழந்தைக்கு நல்ல பழக்கம் வரவேண்டாமா?" என்ருள் பார்வதி.

"அவர்கள் என்ன, கெட்ட பழக்கம் உடையவர்களா? அல்லது குழந்தையை அடிக்கிருர்களா? வைகிருர்களா? என்னவோ பாவம்! அதனிடத்தில் எத்தனையோ அபிமானமாக இருக்கிருர்கள். 'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில்' என்று வசனம் சொல்வதை நீ கேட்டதில்லையா? அதற்கு அவர்களைக் கண்டால் பிடித்திருக்கிறது. அதனுல் அங்கே போய் விளையாடுகிறது" என்ருர் பரமேசுவரையர்.

"ஆமாம்; அவர்களைக் கண்டால் பிடிக்கிறது, என்னையும் உங்களையும் கண்டால் பிடிக்கிறதில்லையாக்கும்! ஒழுங்காயிருக்கிறது வார்த்தை! குழந்தையைப் பத்து மாதம் சுமந்து பெற்றவள் அவள்தானே?"

"இந்தா: சும்மா வரா வரா என்று கத்தாதே. அவர்கள் உன் குழந்தைக்கு விஷம் கொடுத்துக் கொன்றுவிடுகிருர்களா, என்ன? வேளைக்கு வேளை நீ சோறுபோடத் தவறினுலும் அவர்கள் தவறுவதில்லை. ஏன் இப்படி அநாவசியமாக அசூயைப்படுகிருய்?"

"சொல்லுகிற வார்த்தை வாயில் இருக்கிறபோதே வள்ளென்று விழுகிறீர்களே! இந்தக் குழந்தையை இப்படியே விட்டுவிட்டால் நாளைக்குப் படிப்பு கிடிப்பு ஒன்றும் வேண்டாமா? 'தொட்டில் பழக்கம் என்னவோ மட்டும்' என்று

சொல்கிறார்களே ; அப்படி, இப்போதே அந்தப் பிராம் மணன் அல்வாவும் ஜிலேபியும் தந்து படிப்பு வாசனைக்கே போகாமல் அடித்துவிட்டால்...''

பரமேசுவரையருக்குக் கோபம் மூண்டது. "ரொம்பப் படிப்பைக் கண்டுவிட்டதுபோல் பேசுகிறாயே. நாலு வய சுக் குழந்தைக்குப் படிப்பு வரவில்லையே என்று அங்க லாய்க்கிறாயாக்கும்! நாளைக்கு மூன்று தடவை குழந் தையை அடிக்கிறதில் குறைச்சல் இல்லை; பத்து மாசம் சுமந்தாளாம், பெற்றாளாம்! படிப்பு வராதாம். நீ குழந் தையை வளர்க்கிற அழகு எனக்குத் தெரியாதாக்கும்'' என்று வெடுவெடுவென்று சொல்லியபடி அவர் வெளி யிலே போய்விட்டார்.

பார்வதி அப்படியே ஓர் இடத்தில் உட்கார்ந்துகொண் டாள். அவளுக்குத் துக்கம் துக்கமாக வந்தது. அழுது ஆற்றிக்கொள்ள வேண்டும்போல் இருந்தது. எதற்காக அழு வது? எந்தக் காரணத்தை எடுத்துச் சொல்லி அழுவது?- இந்தக் கேள்விகளுக்குப் பதில் சொல்லவேண்டுமே என்று பயந்துதான் அழவில்லைபோலும்!

அப்போது நான்கு வயசுள்ள ஆண் குழந்தை ஒன்று, "அம்மா! இதோ பார், மாமா குடுத்தா'' என்று மழலை மொழியிலே கொஞ்சிக்கொண்டு கையில் ஒரு ஜிலே பியுடன் அவள் எதிரே வந்து நின்றது. பார்வதி அவசர அவசரமாக எழுந்தாள். சடக்கென்று குழந்தை கையில் இருந்த ஜிலேபியைப் பிடுங்கித் தூர எறிந்தாள். "நீ நாச மாய்ப் போக!'' என்று அந்த இளங்குழந்தையின் முதுகில் பல்லைக் கடித்துக்கொண்டு நாலு அறை வைத்தாள். "இனி மேல் அந்தப் பக்கம் போ, உன்னைப் பிணம் புரட்டிவிடுகி றேன். மாமா முறையைப் பார், மாமா முறையை! உங்கள் அம்மாவுடன் கூடப்பிறந்த மாமா முறை தட்டுக்கெட்டுப் போகிறது! வழியிலே போகிற கட்டையிலே போகிறவன் எல்லாம் நமக்குச் சொந்தக்காரனாக வந்துவிடுகிறான். இனி மேல் அங்கே போகாதே! போகவில்லை என்று சொல்!''

என்று மறுபடியும் இரண்டடி வைத்தாள். குழந்தை அடி தாங்காமல் வீரிட்டு அழத் தொடங்கியது.

வாசற்பக்கத்திலிருந்த அறையிலிருந்து ஒரு பெண் மணி தலையை நீட்டி இந்தக் கோலத்தைக் கண்டு பரபர வென்று அங்கே வந்து, "அம்மாமி, குழந்தையை ஏன் அடிக்கிறீர்கள்? ஒரு பாவமும் அறியாத அதை எதற்காக அடிக்கவேணும்? உங்கள் கோபத்தை அதன்மேல் காட்டு கிறீர்களே!" என்றாள்.

பார்வதிக்கு முன்பே கோபம். அது இப்போது பிரசண்ட ரூபத்தை எடுத்துக்கொண்டது.

"நீதான் என் கோபத்தைக் கண்டாயோ! என் குழந் தையை நான் அடிக்கிறதை நீ யாரடி வந்து தடுக்க? அதன் மேல் உனக்கு அவ்வளவு கரிசனம் என்று என்னிடந்தான் காட்டிக்கொள்ள வேணுமோ? உற்றார் உடன்பிறந்தார் மாதிரி நியாயம் பேச வந்துவிட்டாயே. மண்ணுங்கட்டி தெருப் புழுதியை யெல்லாம் வாங்கிக்கொண்டு வந்து கொடுத்துக் குழந்தையை வசியம் பண்ணுகிறீர்களோ? நாளைக்கு அதற்கு ஏதாவது நோய்நொடி வந்தால் நீங்கள் தாம் கவலைப்படப் போகிறீர்களோ! ரொம்ப அக்கறை யோடு பேச வந்துவிட்டாள்!"

"அம்மாமி, உங்கள் இஷ்டப்படி யெல்லாம் பேசிக் கொண்டு போங்கள். பதில் சொல்ல நான் ஆளல்ல. உற்றார் உறவினருக்குத்தான் மனசு இருக்கும், மற்றவர்களுக்கெல் லாம் மனசு கல்லால் ஆனது என்று நீங்கள் எண்ணி யிருக்கலாம். ஆனால் எங்களுக்கும் ஈவு இரக்கம் உண்டு. குழந்தைக்கு விஷம் கொடுத்துவிடவில்லை. அவர் தனியே நல்ல நெய்யில் குழந்தைக்காகப் பண்ணிக்கொண்டு வந்து கொடுத்தது அது" என்று அவள் சொல்லிக்கொண்டு வரும் போது, 'ஹா! இதென்ன? இவளும் அதையே சொல்கி றாள். குழந்தைக்கு விஷம் கொடுத்துவிடவில்லை என்று அவர் சொன்னதையே சொல்கிறாளே! இதென்ன?

இரண்டு பேரும் பேசி வைத்துக்கொண்டார்களோ!' என்று பார்வதியின் சிந்தனை சுழன்றது.

குழந்தை அழுதுகொண்டே அந்தப் பெண்மணியிடம் போக எண்ணித் திரும்பியது. பார்வதி வெடுக்கென்று அதன் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு மறுபடியும் இரண்டு அடி கொடுத்துவிட்டு, "இதோ பார், இந்தக் குழந்தையின் வழிக்கு நீங்கள் வந்தால் வீணாக அவமானப்பட்டுப் போவீர்கள். என் குழந்தைக்கு நல்லவர்கள் சகவாசம் வேணுமேயொழிய ஹோட்டல்காரர் சகவாசம் வேண்டாம்" என்று படபடவென்று கொட்டிவிட்டாள்.

"அவர்களும் மனிதர்கள் என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள் அம்மாமி. மட்டு, மரியாதை, மானம், அவமானம் எல்லாம் அவர்களுக்கும் உண்டு. கோபத்தில் வார்த்தைகளைக் கொட்டிவிடலாம். வார்த்தை நிற்கும். மறந்து போகாது" என்று சொல்லிவிட்டு வேகமாக அவள் தன் அறைக்குப் போய்விட்டாள்.

## 2

ஒரே வீட்டில் குடித்தனம் செய்யும் நடுத்தர அந்தஸ்துள்ள குடும்பம் ஒன்று, ஏழைக் குடும்பம் ஒன்று, ஆகிய இந்த இரண்டு குடும்பங்களிலும் தலைமை வகிக்கும் ராணிகள் இந்த இரண்டு பேரும். பார்வதியம்மாள் கோபால நாயகர் ஹைஸ்கூலில் வாத்தியார் வேலை பார்க்கும் பரமேசுவரையரின் பத்தினி. ஜானகி கமல விலாஸ் ஹோட்டலில் சரக்குப்போடும் ராமசாமி ஐயரின் பெண்டாட்டி. இரண்டு குடும்பங்களும் எப்படியோ சுப்பு செட்டியாருக்குச் சொந்தமான அந்த வீட்டில் குடித்தனம் இருக்கும்படி நேர்ந்துவிட்டது. மேல்மாடியில் இரண்டறைகளும் கீழே ஒரு சமையலறையும் பார்வதியம்மாளின் ஆட்சிக்கு உட்பட்டவை. வீட்டின் முன் பாகத்திலுள்ள இரண்டு சிறிய அறைகளைப் பெருக்கி மெழுகிக் கோலம் போட்டு அங்கே சமைத்துச் சாப்பிட்டுத் தன் புருஷனுடன் வாழ்பவள் ஜானகி.

பார்வதியின் குழந்தையாகிய நாலு வயசுள்ள ஜயராமன் இந்த இரண்டு குடும்பத்துக்கும் சொந்தமானவனைப்போல வளர்ந்தான். குழந்தைகளைக் கண்டாலே ராமசாமி ஐயருக்குப் பிரியம். அவருக்கு மேலே ஜானகிக்கும் விருப்பம். ஜயராமனும் அவர்களிடம் சகஜமாகப் பழகினான். அடிக்காமல் வையாமல் நல்ல தின்பண்டங்களைக் கொடுத்தும் விளையாட்டுக் காட்டியும் அந்த ஏழைக் குடும்பத்தாரே ஜயராமனை வளர்த்தார்கள் என்று சொல்லிவிடலாம்.

பரமேசுவரையர் ஒரு பி. ஏ., எல். டி; சாது; உலகப் பழக்கம் உடையவர். தம்முடைய குழந்தையை இவ்வளவு அன்போடு பாதுகாக்கிறார்களே என்று அந்த ஏழைகளிடத்தில் வியப்பும் மதிப்பும் அவருக்கு உண்டாயின. குழந்தையைப்பற்றிய கவலை அவருக்குச் சிறிதும் இல்லாமல் போயிற்று. பார்வதிக்கு முதலில் விகற்பமாக ஒன்றும் படவில்லை. அன்று ஒரு நாள் யாரோ சொந்தக்காரப் பாட்டி ஒருத்தி அவளைப் பார்க்க வந்திருந்தாள்; யோக க்ஷேமம் விசாரித்தாள். "இந்த வீட்டில் எத்தனை குடித்தனம்?" என்று கேட்டாள்.

"நானும் ஜானகியும் குடியிருக்கிறோம்."

"அது யார், ஜானகி?"

"அதோ முன் கட்டில் குடியிருக்கிறாளே; அவள்தான்."

"உன் குழந்தையை வைத்துக்கொண்டிருக்கிறாளே, அந்தப் பெண்ணா?"

"ஆமாம், அவள்தான். ஜயராமனுக்கு அவள்தான் அம்மா. சதா அவர்கள் வீடே கதி. சாப்பாடுகூடப் பாதி நாள் அங்கேதான்."

"அப்படியா? அவள் அகமுடையானுக்கு எங்கே வேலை?"

"என்னவோ பாவம், ஓட்டல் வேலை செய்கிறார்."

"அதென்னடி அது! நான் சொல்கிறேனென்று நினைத்துக்கொள்ளாதே. நீங்கள் இருக்கிற அந்தஸ்துக்கு இந்த மாதிரி மனுஷர்களோடு சேர்ந்து கூடியிருக்கலாமோ! குழந்தையை வேறே தத்துக் கொடுத்துவிட்டாய். நாளைக்குக் குழந்தைக்கு அந்தப் பழக்கந்தானே வரும்? ஏற்கனவே நம் அகத்துப் பையன்களெல்லாம் படிப்பில் சுப்பிரதீபந்தான். இன்னும் இந்த நிரக்ஷரகுக்ஷிகள் போடுகிற சாதத்தை வேறு சாப்பிட்டுவிட்டால் சொல்லவே வேண்டாம்."

பாட்டி இப்படி வைத்த வத்திதான் பிடித்துக்கொண்டது. பார்வதியின் பார்வையையே மாற்றிவிட்டது.

இந்த மாற்றத்தை முதல்முதலில் அறிந்தவள் ஜானகி. அது பிறகு அவள் கணவருக்கும் தெரிந்தது. பரமேசுவரையருக்குந் தெரிந்துவிட்டது. முதலில் அவர் இதைப் பெரிதாக நினைக்கவில்லை. ஆனால் வரவரப் பார்வதியின் போக்கு, கட்டுக்கு அடங்காமல் போயிற்று. பரமேசுவரையர் கூறிய சமாதானம் ஒன்றும் பயன்படவில்லை.

ஜானகியும் அவள் கணவரும் உள்ளூற வருத்தமடைந்தார்கள். குழந்தையிடம் அவர்களுக்கு இருந்த அன்பு மாசு மறுவற்றது. அவர்கள் உலகமக்களின் கண்முன் ஏழைகளாக இருக்கலாம். ஆனால் அவர்களிடம் நிறைய அன்புச் செல்வம் இருந்தது. உலகத்தார் மதிப்பில் தாழ்ந்த தொழிலை ராமசாமி ஐயர் செய்பவராக இருக்கலாம். ஆனாலும் அவர் உள்ளம் உயர்ந்தது. மரியாதைக்குக் கட்டுப்பட்டு மானத்துக்கு அஞ்சி வாழ்பவர் அவர். பணம் இல்லையென்றால் எல்லாமே இல்லையாகிவிடுமா? பணம் இருந்துவிட்டால் நல்ல குணங்களெல்லாம் அவர்களிடம் அடைக்கலம் புகுந்துவிடுமா? பணம் குணக்குறைவை மறைக்க உதவுகிறது. குணம் இருந்தாலும் அதைத் தொலைத்துவிடச் சூழ்ச்சி செய்கிறது.

குழந்தையினிடம் அன்பு வைத்தது பிழையா? அதற்கு ஒவ்வொரு நாளும் தனியே சுத்தமான நெய்யில் செய்த பக்ஷணம் கொண்டுவந்து கொடுத்தது தவறு? காலை

யில் எழுந்தவுடன் குழந்தைக்கு முதலில் காபி கொடுத்து விட்டுப் பிறகே அவர் உண்டது அதர்மமா? பார்வதியம்மா விடம் இந்தக் கேள்விகளை யார் கேட்பார்கள்?

எப்படியோ அவள் உள்ளத்தின் ஒரு மூலையில் ஒரு பொறி விழுந்துவிட்டது. அது வாவரப் பற்றிக்கொண்டே வந்தது. ஒரு நாள் பரமேசுவரையரிடம், "இனிமேல் இந்தப் பிச்சைக்கார நாய்களுடன் ஒரு க்ஷணமாவது சேர்ந்து இருக்கக்கூடாது. ஒன்று, அவர்கள் வேறு வீடு பார்த்துக் கொள்ளட்டும். அல்லது நாம் வேறு வீட்டுக்குப் போய் விடலாம்" என்று உத்தரவு போட்டாள். பரமேசுவரைய ருக்குச் சிரிப்பு வந்தது; அடக்கிக்கொண்டார். "அவ்வளவு சுலபமாக இப்போதெல்லாம் வீடு கிடைத்துவிடுமா? இந்த வீட்டில் நமக்கு இடம் கொடுத்திருக்கிறவர் ராமசாமி ஐயர். அவரே இந்த வீடு முழுவதையும் வாடகைக்கு எடுத்துக் கொண்டிருக்கிறார். நமக்கு மலிவாக இந்த இடத்தைத் தந்தி ருக்கிறார். அவரைப் போகச் சொல்ல நமக்கு அதிகாரம் இல்லை. நம்மை வேண்டுமானால் அவர் போகச் சொல்லிவிட லாம்" என்று விஷயத்தை அவளுக்கு அவர் ஞாபகம் மூட்டினார்.

"அப்படியானால் சரி; இன்றைக்கே நோட்டீசு கொடுத்துவிடுங்கள். நாலு ரூபாய் கூடப் போனாலும் போகிறது; வேறு வீடு பார்க்கத்தான் வேண்டும். இல்லா விட்டால் வீட்டுக்காரச் செட்டியிடம் நீங்கள் நேரிலே போய் வீடு முழுவதையும் நானே எடுத்துக்கொள்கிறேன் என்று சொல்லி இரண்டு ரூபாய் அதிகமாகச் சொல்லுங் கள். செட்டி வழிக்கு வந்துவிடுவான்."

பரமேசுவரையர் காது கொடுத்துக் கேட்டார். நிதான மாகப் பதில் சொன்னார்:

"பார்வதியம்மாளவர்கள் தந்திரம் நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் அந்தச் செட்டியாருக்கு ராமசாமி ஐய ரிடம் உள்ள நம்பிக்கை என்னிடம் இல்லை. சும்மா கிடந் தாலும் சரி, ராமசாமி ஐயர் சொல்கிறபடிதான் நடப்பார்."

"ஓகோ, அவன் வீட்டிலேயும் ஒரு குழந்தை இருக்கிறதாக்கும்! ஜிலேபி, கிலேபி இல்லையா? இரண்டு நாளைக்குக் கொண்டுபோய்க் கொடுத்து ஏமாற்றியிருப்பான். கடைக்குச் சொந்தக்காரன் சொத்துத்தானே? கடைத் தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைக்கிற வியாபாரந்தானே இது?"

ராமசாமி ஐயரைப்பற்றி அவள் சொன்னதைப் பொறுமையாகக் கேட்டுக்கொண் டிருக்க அவரால் முடியவில்லை. "சட்! வாயை மூடு; உளறுதே. வாயை அலம்பிக் கொள். நல்ல மனிதர்களைப்பற்றி நல்லது சொல்லத் தெரியாவிட்டாலும் மௌனமாக இருப்பதே நல்லது. சாதுக்கள் மேல் பழி சொன்னால் தெய்வத்துக்குச் சகிக்காது" என்று சொல்லி வெளியே போய்விட்டார். மேலே சம்பாஷணையை வளர்த்த அவருக்கு மனம் இல்லை.

## 3

பரமேசுவரையர் வேறு வீட்டுக்குக் குடி போவதென்று தீர்மானித்தார். பார்வதி தினந்தோறும் அவரைத் துளைத்து வந்தாள். அதற்காக அவர் பயப்படவில்லை. ஒவ்வொரு நாளும் வீட்டில் அநாவசியமான சச்சரவும், அந்த ஏழைகள் எவ்வளவு அடங்கிப் போனாலும் அவள் வீண் சண்டைக்கு இழுப்பதுமாக இருந்தது. இது அவருக்குப் பிடிக்கவில்லை. வேறு வீட்டுக்குப் போய்விட்டால் அவர்களுக்கு இந்தத் தொல்லையிலிருந்து விடுதலை கிடைக்கும் என்று எண்ணினார்.

வீடு சுலபமாகக் கிடைக்கிறதா? முதலில் தாம் வேறு வீடு பார்ப்பதை அவர் ராமசாமி ஐயரிடம் சொல்லவில்லை. ஒரு நாள் கடைவீதியில் கண்டபோது சொன்னார். ராமசாமி ஐயருக்கு என்னவோ ஒருவிதமான வேதனை உண்டாயிற்று. ஜயராமனைப் பிரிந்திருப்பதை அவர் சகிக்கமுடியாது. அவர் அந்தக் குழந்தையிடம் ஒப்பு உயர்வில்லாத அன்பை வைத்திருந்தார்.

வீடு மாற்றிக்கொண்டு போவதற்குக் காரணம் இன்ன தென்று அவருக்குத் தெரியும். பரமேசுவரையர், ராமசாமி ஐயர் இருவரும் பரஸ்பரம் அன்புடனும் மரியாதையுட னும் பழகுகிறவர்கள். தம்முடைய அந்தஸ்து பரமேசு வரையரைவிடத் தாழ்ந்தது என்ற எண்ணத்தினால் ராம சாமி ஐயர் அவரை வெளியிடங்களிலே சந்தித்துச் சல்லா பம் செய்வதில்லை. அறியாதவரைப் போலவும் இருப்பவ ரல்ல. பரமேசுவரையரோ அவர் அப்படி இருப்பதை அடக்கமான சுபாவம் என்று நினைத்துக்கொண்டார். "ஓட்டலில் வேலை செய்யும் மனிதருக்கு எத்தனை அடக்கம், என்ன அன்பு, என்ன உபகார சிந்தை!" என்று அவர் வியப்பார். ராமசாமி ஐயரால் அவருக்குப் பலவகை யில் உபகாரம் உண்டு.

ராமசாமி ஐயர் தம் மனைவியிடம் பரமேசுவரையர் தீர் மானத்தைத் தெரிவித்தபோது அவளுக்கு அழுகையே வந்துவிட்டது. "அந்த அம்மாமியிடம் போய்க் காலில் விழுந்து கெஞ்சுகிறேன். நான் ஏதாவது தப்புப் பண்ணி யிருந்தால் பொறுத்துக்கொள்ளும்படி வேண்டிக்கொள் கிறேன். குழந்தையைப் பார்க்காமல் நமக்கு எப்படிப் போது போகும்? அவர்கள் என்ன சட்டம் வேண்டுமானாலும் போடட்டும்; நாம் குழந்தைக்கு ஒன்றும் கொடுக்கவேண் டாம்; தொடக்கூடவேண்டாம். கண்ணால் பார்த்துக்கொண் டும் அதன் வார்த்தைகளைக் காதால் கேட்டுக்கொண்டும் இருந்தாலே போதும்...என்ன சொல்கிறீர்கள்? போய்க் கேட்கட்டுமா?" என்றாள் ஜானகி.

ராமசாமி ஐயர் மனம் உருகியது. அவள் அன்பு தம் அன்பையும் மிஞ்சி நிற்பதை உணர்ந்தார். தினந்தோறும் அவளே பார்வதியின் தூஷணைகளை வாங்கிக் கட்டிக்கொள் வாள். ஆனாலும் இப்போது அதை மறந்து அவள் காலில் போய் விழத் தயாராக இருக்கிறாள். அன்பின் அதிசய சக்தி எப்படியெல்லாம் வேலை செய்கிறது!

ராமசாமி ஐயருக்கு ஒன்றும் தோன்றவில்லை; "அசடே, அழாதே. ஆயிரம் இருந்தாலும் குழந்தை அவர்களுடையது. சொத்துக்கு உடையவர்களைக் கட்டுப் படுத்த நாம் யார்?...ஒன்று தோன்றுகிறது. நமக்காக அவர் கள் சிரமப்பட்டு வீடு தேடுவானேன்? நாமே வேறு வீடு பார்த்துக்கொண்டால் போகிறது. சரி, அப்படிச் செய்வது தான் நல்லது" என்று சொல்லித் தம் கருத்தைப் பரமேசுவ ரையரிடம் தெரிவித்தார். அவருக்கு ராமசாமி ஐயரிடம் இருந்த மதிப்பு இன்னும் அதிகமாயிற்று. 'எத்தனை நல்ல வர்! நம்முடைய கஷ்டத்தைப் போக்கத் தாம் வேறு வீட் டுக்குப் போகிறேன் என்கிறாரே! இவர் இந்த யுகத்தில் பிறந் திருக்கக்கூடாது. இந்த உலகம் மிகவும் கெட்டது. தொழி லில் என்ன இருக்கிறது? அந்தஸ்தில் என்ன இருக்கிறது? எல்லாம் போலி வேஷம்' என்று அவர் சிந்தனை படர்ந்தது.

"ராமசாமி ஐயரே, நான் ஏதோ முகஸ்துதிக்காகச் சொல்கிறேனென்று நினைக்கவேண்டாம். நீர் ஆயிரத்தில் ஒரு மனுஷர். உம்முடன் இருக்க நான் கொடுத்துவைக்க வில்லை. அவ்வளவுதான். நீர் எனக்குச் செய்த உபகாரம் அதிகம். உமக்கு என் குடும்பத்தால் அசௌகரியம் உண்டாவதைப் பாராட்டாமல், நீரே வேறு வீடு பார்த்துக் கொள்கிறேன் என்கிறீர். இதுவும் உம்முடைய பெருந்தன் மையையும் உபகாரசிந்தையையும் காட்டுகிறது. உமக்கு நான் என்ன செய்யப் போகிறேன்! நீர் என்னைப் பெரிய கடனாளியாக்கிவிட்டீர்!'" என்று கண்களில் நீர் துளிக்கப் பரமேசுவரையர் சொன்னபோது, அவர் உள்ளம் எவ் வளவு தூரம் வேதனைப்பட்டதென்பது வெளியாயிற்று.

"நான் பிரமாதமாக ஒன்றும் செய்துவிடவில்லை. நீங்கள்தாம் எனக்கு ஒரு பெரிய உபகாரம் செய்யவேண் டும். உங்கள் காலைப் பிடித்துக்கொள்கிறேன். நாங்கள் வேறு வீட்டுக்குப் போனாலும் குழந்தை ஜயராமனை அடிக்கடி நாங்கள் பார்ப்பதற்கு அநுமதி கொடுங்கள். அவனைப் பார்க்காவிட்டால் எனக்கு ஒன்றுமே தோன்றாது. ஏதோ

பூர்வ ஜன்மத்தில் இருந்த பாந்தவ்யமோ என்னவோ, என் மனசு அவனிடம் பதிந்துவிட்டது. நாங்கள் ஏழைகளே; இந்த மாதிரி அழகான குழந்தையிடம் அன்பு காட்டுவதற்குக்கூட யோக்கியதை இல்லாதவர்களே! ஆனு லும் தெய்வாதீனமாகப் பழகிவிட்டோம். இப்போது மனசு அலைபாய்ந்து தவிக்கிறது. நான் என்னவோ உளறு கிறேனென்று நினைத்துக்கொள்ளாதீர்கள். நான் மகாபாவி! எனக்குக் குழந்தை இல்லாததற்கு நான் வருந்தவில்லை. அயலார் குழந்தையிடம் பழகக்கூடப் பாக்கியம் இல்லையே என்றுதான் அங்கலாய்க்கிறேன். ஏதோ பாவம் செய்து இந்தத் தொழிலுக்கு வந்திருக்கிறேன். ஆனாலும் அதைப் பற்றி நான் வருத்தப்படவில்லை. குழந்தையை நினைக்கும் போதுதான்...பாவி!...மகா பாவி!...'' அவர் வாக்குத் தடைப்பட்டது; உணர்ச்சி பொங்கியது.

"ராமசாமி ஐயர், நீர் கவலைப்படாதேயும். நீர் வருத் தப்படுவதைப் பார்த்தால் எனக்குச் சகிக்கவில்லை. குழந் தையை அடிக்கடி உங்களிடம் நானே அழைத்து வரு கிறேன். உங்களுக்காக இல்லாவிட்டாலும் குழந்தையின் க்ஷேமத்துக்காகவாவது அப்படிச் செய்யவேண்டுவது அவ சியம். இல்லாவிட்டால் அவன் ஏங்கிப் போய்விடுவான். பேருக்குத்தானே அவன் எங்கள் குழந்தை? தர்மநியாயப் படி அவன் உங்கள் குழந்தைதான். நான் இதை உணராத வன் அல்ல. ஆனாலும் என்ன செய்வது? உலகத்தில் கட வுள் எல்லோரையும் ஒரே மாதிரி படைக்கிறாரா? மனிதர் களுக்குள் தேவர்களும் இருக்கிறார்கள்; பேய்களும் இருக் கின்றன.''

* * *

ராமசாமி ஐயர் வேறு வீட்டுக்குக் குடிபோனார். அவர் இருந்த இடத்துக்கு வேறொருவரை அவரே ஏற்பாடு செய்து வைத்துவிட்டுத்தான் போனார்.

பரமேசுவரையர் சொன்னபடி குழந்தை ஜயராமன் அவர்களோடு போவேனென்று அழுதான்; பிடிவாதம்

பிடித்தான்; பார்வதியினிடம் அடி வாங்கிக்கொண்டான். "குழந்தைக்குச் சூன்யம் வைத்துவிட்டார்களோ!" என்ற வழியனுப்பு உபசாரத்தோடு ராமசாமி ஐயர் அந்த வீட்டை விட்டுப் போனார்.

பரமேசுவரையர் மாலை நேரத்தில் குழந்தையையும் அழைத்துக்கொண்டு உலாவப் போவார். போகும்போது குழந்தையை ராமசாமி ஐயர் வீட்டில் விட்டுவிட்டுப் போவார்; வரும்போது அழைத்து வருவார். ராமசாமி ஐயர் அந்த நேரத்துக்கு ஹோட்டலிலிருந்து வீட்டுக்கு வந்து இருந்துவிட்டுக் குழந்தை போனவுடன் போவார்.

குழந்தை 'மாமா'விடம் போய்விட்டு வருகிறதைப் பார்வதி குறிப்பாக அதன் வாய்மூலமாகத் தெரிந்து பரமேசுவரையரிடம் சீறி விழுந்தாள். அவர், ஏதோ ஒரு நாள் இரண்டு நாள் போனதாகச் சொல்லிச் சமாதானம் செய்தார். இப்படி ஒரு விதமான நாடகம் நடந்து வந்தது.

## 4

தீபாவளி விருந்து சாப்பிட்டுவிட்டு அவரவர் வீட்டில் கொண்டாட்டமும் குதூகலமுமாக இருந்தது. பரமேசுவரையர் யாரோ நண்பர்களைப் பார்த்து வருவதாகப் புறப்பட்டார். வீட்டில் குடியிருந்தவர்கள் சொந்தக்காரர் வீட்டுக்குத் தீபாவளி விருந்தினராகப் போய்விட்டார்கள். பார்வதி குழந்தையை அருகில் விட்டுக்கொண்டு படுத்திருந்தாள். மணி மூன்று இருக்கும். வெளியிலே அன்று என்றும் இல்லாமல் நல்ல வெயில் அடித்தது. இரண்டு நாட்களாகத் தீபாவளிப் பக்ஷணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை ஒன்றியாகச் செய்த அலுப்பும், விடியற்காலையில் இரண்டு மணிக்கே விழித்துக்கொண்டு தீபாவளி ஸ்நானத்துக்கு ஏற்பாடு செய்த சிரமமும் சேர்ந்து அவளை மிகவும் அயர்ந்த நித்திரையில் ஆழ்த்தின. வீட்டிலும் யாரும் இல்லை; சந்தடியில்லாத கூடத்தில் சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தாள்.

குழந்தை ஜயராமன் சிறிது நேரம் படுத்துக்கொண் டிருந்தவன், பிறகு விழித்துக்கொண்டான். மேல் மாடியில் ராத்திரி பட்டாசுகளைச் சுட்ட துண்டுகள் கிடந்தன. அவற்றைப் பொறுக்குவதற்காக அவன் மேலே போய்த் தன் காரியத்தைப் பார்த்துக்கொண் டிருந்தான்.

திடீரென்று பக்கத்து வீட்டில் குழந்தைகள் புஸ் வாணம் கொளுத்தினதால் தீ விபத்து ஏற்பட்டு வீடு பற்றிக்கொண்டது. அது வேகமாக இந்த வீட்டுக்கும் பரவியது. அதற்குள் தெருவில் கூட்டம் கூடிவிட்டது. ஜனங்கள் ஆரவாரம் செய்தனர். பரமேசுவர ஐயரின் வீட்டுக் கதவை இடித்தார்கள். பார்வதி திடுக்கிட்டு எழுந்து கதவைத் திறந்து வெளியே வந்தாள். தன் வீட்டு மேல்மாடியில் தீப்பற்றிக் கொண்டதைக் கண்டாள். "ஐயோ, குழந்தை!" என்று அலறிக்கொண்டு உள்ளே ஓடினவள் நிலை தடுக்கிக் கீழே விழுந்தாள்; மூர்ச்சை போட்டுவிட்டது.

வாசலில் ஒரே கூட்டம். வீடு முழுவதும் புகை சூழ்ந்தது. விழுந்த பார்வதியைச் சிலர் வெளியில் தூக்கி வந்து ஆசுவாசப்படுத்தினார்கள். அவள், "ஐயோ குழந்தை!" என்றது, ஆரவாரத்தில் யார் காதிலும் விழவில்லை.

நெருப்பை அணைக்கும் முயற்சிகள் ஒரு பக்கம் நடந்துகொண் டிருந்தன. அக்கினிபகவான் நடுப் பகலில் தீபாவளி வேடிக்கை காட்டிக்கொண் டிருந்தான். தீ விபத்துச் செய்தி ஊர் முழுவதும் பரவிவிட்டது. ஒரே கூச்சல் மயம்.

"வழி விடுங்கள், வழி விடுங்கள்! குழந்தை எங்கே? குழந்தை எங்கே?" என்ற சப்தந்தான் கேட்டதே ஒழிய அப்படிச் சொன்னவர் யாரென்று தெரியவில்லை. ஓர் உருவம் புகை மூண்ட அந்த வீட்டுக்குள் புகுந்தது. "ஜயராமா!" என்ற அலறல், "அம்மா!" என்ற குழந்தைக் குரல் இரண்டும் அடுத்தடுத்துக் கேட்டன. சில நிமிஷங்களில் உள்ளேயிருந்து கையில் குழந்தையை ஏந்திக்

கொண்டு அவ்வுருவம் ஓடிவந்தது. மேல் வேஷ்டியால் குழந்தையை இறுக மூடியிருந்ததால் நெருப்பு அதைத் தீண்டவில்லை; ஆனால் அந்த மனிதரை ருசி பார்த்துவிட்டது. அவர் தலை மயிர் பொசுங்கியது. உடம்பில் நெருப்புக் காயம். "அப்பா" என்று சொல்லிக் குழந்தையை வெளியில் விட்டு அவர் கீழே சாய்ந்தார். ஜனங்களின் ஆரவாரம் பலமாயிற்று. ஆம்புலன்ஸ் கார் வந்தது. மயக்கம் போட்டிருந்த குழந்தையையும் நெருப்புக் காயம் பட்டுச் சோர்ந்து வீழ்ந்த மனிதரையும் எடுத்து ஆஸ்பத்திரிக்குச் சென்றது.

பார்வதி மூர்ச்சை தெளிந்து எழுந்தாள். "என் குழந்தை எங்கே?" என்று கேட்டாள். அப்போதுதான் பரமேசுவரையர் அங்கே ஓடிவந்தார். அவரும், "குழந்தை எங்கே?" என்று பரபரப்புடன் கேட்டார். சுற்றி நின்றவர்கள், "யாரோ ஒருவர் குழந்தையை எடுத்துக்கொண்டு வந்தார். ஆஸ்பத்திரிக்குப் போயிருக்கிறார்கள்" என்றார்கள். பார்வதியை நண்பர்களின் பாதுகாப்பில் விட்டுவிட்டு அவர் ஆஸ்பத்திரிக்கு ஓடினார். விபத்துக்கு உள்ளானவர்கள் சிகிச்சை பெறும் பகுதியை அடைந்தார். விசாரித்துக்கொண்டே உள்ளமும் உயிரும் தத்தளிக்கத் தேடினார். கடைசியில் பார்த்தார். யாரை?

ராமசாமி ஐயர் தீப்பட்ட காயங்களுடன் படுக்கையில் கிடக்கிறார். அருகில் குழந்தை ஜயராமன் உட்கார்ந்துகொண்டிருக்கிறான். "மாமா, உனக்கு என்ன? உவ்வாவா?" என்று அவன் கேட்கிறான். "இல்லே கண்ணு" என்று சொல்லி அந்த இளங் குழந்தையின் ஒளி வீசும் கண்களை அவர் பார்த்துக்கொண்டே, தம் நோவையும் மறந்து உள்ளங் குளிர்கிறார்.

இந்தக் காட்சியைத்தான் பரமேசுவரையர் பார்த்தார். அவர் அப்படியே ஸ்தம்பித்துப் போனார். ராமசாமி ஐயரின் கால்மாட்டில் போய் அவர் காலைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக்கொண்டு, "ஐயா, நீர் மனிதர் அல்ல;

தெய்வம்!'' என்று சொல்லிப் பலபலவென்று கண்ணீர் உதிர்த்துவிட்டார்.

"அப்பா, மாமாவுக்கு உவ்வா!" என்று குழந்தை சொல்லித் தன் சின்னஞ் சிறு கையால், உடல் புண்பட்டாலும் உள்ளம் புண்படாத அந்த உபகாரியைச் சுட்டிக் காட்டியது.

பரமேசுவரையருக்கு என்ன தோன்றிற்ருே; "இதோ வருகிறேன்'' என்று சொல்லி மறுபடியும் ஆஸ்பத்திரியிலிருந்து ஓடினர். சிறிது பொழுதில் தரதரவென்று பார்வதியை இழுத்துக்கொண்டு வந்து அங்கே நிறுத்தி, "இதோ, பாரடி, முண்டம்! பார், கண்ணைத் திறந்து பார். நீ பூட்டி வைத்துக் காப்பாற்றிய ஜயராமனை அக்கினி பகவான் விழுங்கிவிட்டானென்று எண்ணிக்கொள். இந்தப் புண்ணியவான் மறுபடியும் உயிர் கொடுத்து இவனைப் பெற்றுவிட்டார். இனிமேல் இவன் நம்முடைய பிள்ளை அல்ல; இந்த மகாபுருஷன் பிள்ளை. இவர்களைப் பிரித்து வைத்தால் ஏழேழு ஜன்மத்துக்கும் பாவம் வந்து சம்பவிக்கும்.இந்த மகாநுபாவனுடைய அன்புக்கு அக்கினியே சாட்சி சொல்லுமே!'' என்று உணர்ச்சி வசப்பட்டு வேகமாகப் பேசினர்.

மயக்கத்திலிருந்து தெளிந்து சிறிது நேரமே ஆகியிருந்த பார்வதியின் கண்கள் மெல்ல எதிரே படுக்கையிற் கிடந்த உத்தம புருஷரையும், அவர் பக்கத்தில் காலன் வாயிலிருந்து மீண்டு அமர்ந்திருக்கும் குழந்தையையும் பார்த்தன.

அவளை அறியாமலே அவள் கைகள் கன்னத்தில் அடித்துக்கொண்டன; இரண்டு பாதங்களையும் தொட்டுக் கண்ணில் ஒற்றிக்கொண்டன. மலர்களால் அர்ச்சனை செய்யும் நிலையில் அவள் இல்லை. ஆனல் அவளது மலர் விழியிலிருந்து அந்தப் புண்பட்ட அடிகளின்மேல் முத்துக்கள் உதிர்ந்தன.

# சாகும் வரம்

எவ்வளவோ காலம் தவம் புரிந்தான். காய்கனி உண்டு தவம் செய்தான்; பிறகு இலைகளைத் தின்று தவம் புரிந்தான்; அப்புறம் நீரை மாத்திரம் உண்டான்; கடைசியில் காற்றை நுகர்ந்து கடுந்தவம் புரிந்தான். அவனுடைய தவக்கனல் மேலுலகத்தை யெல்லாம் தகித்தது. அமரர்கள் அஞ்சி நடுங்கினர். இந்திரன் தன் பதவிக்குக் கேடு வந்துவிடுமோ என்று பயந்தான். பிரம்மாவுக்குக்கூட நெஞ்சம் துணுக்குற்றது.

மகாவிஷ்ணு யோகநித்திரையில் ஆழ்ந்திருந்தான். தேவர்கள் கூட்டமாக வந்து தங்களுடைய தோத்திரங்களால் திருமாலின் துயிலைப் போக்கப் பார்த்தனர். நாரதர் பகவானை அணுகித் தம்முடைய மாகதி யாழை மீட்டி இனிய கானத்தை இசைக்கத் தொடங்கினர். பகவான் திருவிழி மலர்ந்து தண்ணிய திருப்பார்வையை நாரதர் மேலே ஓடவிட்டான்.

"எம்பெருமானே, அமரலோகம் தட்டுக்கெட்டுத் தடுமாறுகிறது. கற்பகவிருக்ஷம் வாடிவிட்டது. காமதேனு பால் தருவதில்லை. யாரோ ஒரு நரன் செய்யும் தபசின் உஷ்ணம் அமரலோகத்திலே ஓர் உஜ்வலமான ஜ்வரத்தை உண்டாக்கியிருக்கிறது. தேவரீருடைய கடைக்கண் பார்வையால் ஒரு முறை பார்வையிட்டால் அடியேன் சொல்வதன் உண்மை விளங்கும். பிரபோ, இந்தச் சமயத்தில் எளியேங்களைச் சோதனை செய்யக் கூடாது" என்று நாரத முனிவர் கரங்குவித்து விண்ணப்பித்துக்கொண்டார். ஆழிவண்ணன் திருமுகத்தில் புன்முறுவல் அரும்பியது. "தேவர்களைப் பயப்பட வேண்டாமென்று சொல்; நாம் அந்தத் தபஸ்விக்குத் தரிசனம் தந்து ஆட்கொள்கிறோம்" என்று திருவாய்மலர்ந்தருளினன்.

"இந்திரன் வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டிருக்கிறான். என்னுடைய பிதாவாகிய பிரம்மதேவரும் தம்முடைய பதவிக்கு ஏதேனும் நேருமோ என்று அஞ்சுகிறார். அவர்களுடைய அச்சத்தைப் போக்கிப் பாதுகாப்பது தேவரீருடைய பாரம்."

"அப்படியே செய்வோம். நீ போய் அவர்களுக்கு ஆறுதல் கூறு. மண்ணுலகத்தின் பெருமை விண்ணுலகத்தினருக்கு இந்த மாதிரியான சந்தர்ப்பங்களில்தான் விசதமாகிறது. போகம் நிரம்பிய ஸ்வர்க்கலோகத்தில் தேவர்கள் நமக்கு அருகிலிருந்தும் இங்கே எட்டிக்கூடப் பார்ப்பதில்லை. இந்த மாதிரி அபாயகாலங்களில் மாத்திரம் தங்களுடைய அபயகோஷத்தை முழக்கிக்கொண்டு வந்துவிடுகிறார்கள். மனுஷ்யர்கள் கிஞ்சித்ஞர்கள்; அல்பாயுளை உடையவர்கள்; பலஹீனர்கள்; மரணபயத்தைக் கொண்டவர்கள். வைகுண்டத்திற்கும் மண்ணுலகத்திற்கும் நெடுந்தூரமானாலும் அவர்களுடைய அன்பிலே கட்டுண்டு நாமே அவர்கள் உள்ள இடத்திற்குப் போய் அநுக்கிரகம் செய்கிறோம். அமிர்தம் உண்ட தேவர்களோ தங்கள் சுக போகத்திலே குருடர்களாகி விடுகிறார்கள்!"

இந்தச் சமயத்தில் பகவான் சூடு கொடுப்பதைக் கேட்டு நாரதர் வெட்கி நின்றார். அவர் என்ன சொல்லுவார்! உண்மையை எம்பெருமான் வெளியிடும்போது அதை மறுத்துப் பேச அவர் யார்? வந்த காரியம் நிறைவேறவேண்டும்; அதற்காக மிகவும் விநயமாக, "அபராதம் செய்வது அமரர்களின் ஸ்வபாவம்; அபராதங்களையெல்லாம் க்ஷமித்துக் கிருபைசெய்வது பரம கருணாநிதியாகிய தேவரீரது இயல்பு. அடியேங்களுடைய அகங்கார மமகாரங்கள் காரணமாக உண்டான தோஷங்களைத் திருவுள்ளத்திற் கொள்ளாமல் இந்த ஆபத்திலிருந்து பாதுகாத்தருளவேண்டும்" என்று சொல்லிப் பகவான் திருவடிகளைப் பிடித்துக்கொண்டார் நாரதர்.

"நீ பயப்படாதே; கொடுத்த வாக்கை நிறைவேற்ளுமல் இருக்கும் கிருபண வர்க்கத்தைச் சேர்ந்தோமல்லோம் நாம்."

நாரதர் விடை பெற்றுக்கொண்டார். அமரலோகம் குதூகலத்தை அடைந்தது.

## 2

"பக்தா, மெச்சினேம் உன்னுடைய தவத்திறனே. உனக்கு என்ன வேண்டும்?" என்று வினவினன் மணி வண்ணன்.

"பிரபோ, இந்த ஏழைக்கு இரங்கித் தேவரீர் தரிசனம் தந்தபோதே தன்யனுனேன். எனக்கு நீண்ட ஆயுள் வேண்டும். அல்பாயுளுள்ளவன் மனிதன் என்ற அபக்கியாதியை என்னளவிலாவது போக்கிக்கொள்ள வேண்டும்."

"தேவலோகத்துக்கு வந்துவிடு. அமரர்களில் ஒருவஞக வாழலாம். அமிர்தம் நுகர்ந்து மரணத்தை வெல்லலாம்" என்ருன் ஆழிவண்ணன்.

"அப்படி இருக்க இஷ்டம் இல்லை. நான் பழகின பூலோகந்தான் எனக்கு ருசிக்கிறது. இந்த உலகத்திலேயே பல்லாயிரம் வருஷங்கள் வாழ வரங் கொடுக்கவேண்டும்" என்ருன் அம் மனிதன்.

"பல்லாயிரம் வருஷங்களென்று சொல்கிருயே; இத்தனை வருஷங்களென்று குறிப்பிட்டுச் சொல்."

"பதினுயிரம் வருஷங்களாவது வாழ வரந்தர வேண்டும்" என்று பிரார்த்தித்தான் மனிதன்.

கடவுள் அவனுடைய பேராசையை அறிந்து திருவுள்ளத்துக்குள் நகைத்துக்கொண்டான்.

"பதினுயிரங் கொடுப்பது பெரிதல்ல. அவ்வளவு வருஷங்கள் வாழவேண்டுமா? யோசித்துச் சொல்."

"பகவானே,கேட்டதைக் கொடுக்கும் தயாளுவென்று தேவரீரை வருணிக்கிருர்களே; அது பொய்யோ?"

"பக்தா, உன்னுடைய விருப்பத்தை நிறைவேற்றி விடுவது பெரிதல்ல என்று மீண்டும் சொல்லுகிறோம். யோசித்துச் சொல். ஆயிர வருஷங்கள் உனக்கு வாழ்வு தருகிறோம். அதற்குமேல் உனக்கு வாழவேண்டு மென்று அப்பொழுது தோன்றினால் நாம் மீட்டும் பத்தா யிரம் வருஷங்கள் வாழ்வு தருகிறோம். இதில் சிறிதும் சந் தேகம் வேண்டாம்" என்று மாயன கூறினான்.

மனிதன் யோசித்தான். பகவானை நம்பாமல் பின் வேறு யாரை நம்புவது? "சரி; அப்படியே அருள் செய்ய வேண்டும். ஆயிரவருஷங்களானவுடன் மீட்டும் தரிசனம் தந்து என் ஆயுள் பின்னும் நீடிக்கும்படி கிருபை செய்ய வேண்டும்" என்றான்.

"அப்படியே செய்வோம். ஆயிர வருஷத்துக்குப்பின் என்ன? இடையிடையே உனக்குத் தரிசனம் தந்து உன் யோக க்ஷேமங்களை விசாரித்து வருகிறோம். ஒரே ஒரு நிபந்தனை."

"என்ன அது பிரபோ!"

"இந்த வரத்தை மாற்றும்படி இந்த ஆயிர வருஷங் களுக்கு இடையில் நீ கேட்கக்கூடாது. கேட்டால் நாம் மாற்றமாட்டோம். ஆயிர வருஷங்கள் நிச்சயமாக நீ வாழ் வாய். அதில் குறைவாகவோ கூடுதலாகவோ வாழ விரும்பி னால், இந்த ஆயிர வருஷங்களுக்குள் நம்மிடம் தெரிவிக்க வேண்டாம்; அதனால் சிறிதும் பயன் உண்டாகாது. என்ன, சம்மதமா?"

"ஆயிரத்திலும் குறைவாக வாழ்வதா! ஒருகாலும் இல்லை" என்று சிரித்தான் மனிதன்.

"அப்படியானால் நாம் போகிறோம்."

பகவான் அந்தர்த்தானமானான்.

## 3

இருபத்தைந்தே வயசு நிரம்பியிருந்த அந்த மனிதன் புத்துணர்ச்சி பெற்று வாழத் தொடங்கினான். சிரஞ்சீவித்

தன்மை பெற்றுவிட்டோமென்ற மிடுக்கிலே அவன் தன் வாழ்வைச் செப்பஞ் செய்யப் புகுந்தான். வாழ்வின் பல விதமான சுகங்களை நின்று நிதானித்து அநுபவிக்கலானான். கல்வி கற்று மகாபண்டிதனானான். வியாபாரம் செய்து லக்ஷாதிபதியானான். வீட்டிலே சகல சௌபாக்கியங்களும் நிறைந்திருந்தன.

அவனுடைய வாசஸ்தலம் ஒரு க்ஷேத்திரமாக விளங்கியது. இமயமுதல் குமரி வரையில் உள்ளவர்களெல்லாம் இந்தச் சிரஞ்சீவி மனிதனைத் தரிசனம் செய்து வந்தார்கள். இருபத்தைந்தாவது வயசில் ஆயிர வருஷம் ஆயுள் வரம் பெற்ற அவனுடைய உடம்பின் வளர்ச்சி பத்து மடங்கு மெதுவாக அமைந்தது. இயற்கையாக மற்றவர்களிடம் ஒரு வருஷத்தில் உண்டாகும் வளர்ச்சி அவனிடம் உண்டாகப் பத்து வருஷகாலம் வேண்டியிருந்தது. ஆகவே இன்னும் அவன் கட்டிளங் குமாரனாகவே இருந்தான்.

அவனுடைய தாய் தந்தையர் இறந்தார்கள். அவனுடைய மனைவி அவனைக் காட்டிலும் பத்து வயசு சிறியவள். இருபத்தாறாம் வருஷத்தில் அவன் மணம் செய்து கொண்டான். அவனுக்கு நாற்பது வயசு ஆனபோது அவன் இருபத்தாறு பிராயம் நிறைந்த காளையாகவே தோற்றினான். அவனுடைய மனைவியோ முப்பது வயசுக்குரிய தோற்றமுடையவளானாள்; அவள் வயசு முப்பது தான். பார்க்கிறவர்களெல்லாம் அவளைச் சிரஞ்சீவி மனிதனுடைய தமக்கையாக நினைத்தார்கள்.

அவனுக்குக் குழந்தைகள் பிறந்தார்கள். பிறந்து வளர்ந்தார்கள்; வெகு வேகமாக வளர்ந்தார்கள். அவனுக்கு அறுபது வயசு ஆனபோது அவன் வீட்டில் இருந்த யாவரும் அவனைக் காட்டிலும் முதியவர்களாக இருந்தார்கள். அவன் இருபத்தேழு இருபத்தெட்டு வயசுள்ளவனைப் போல இருந்தான். அவனுக்குப் பத்து வருஷத்துக்கு ஒரு வயசு ஏறுகிறது! மற்றவர்களுக்கோ ஒரு வருஷத்துக்கு ஒரு வயசு! ஐம்பது பிராயமுள்ள அவனுடைய மனைவி

யைப் பார்க்கும்பொழுது அவனுக்கே வேடிக்கையாக இருந்தது. அவன் அவளுடைய பிள்ளையென்று சொல்லும்படி இருந்தான். அவள் மனைவி, தான் புருஷன் என்ற உறவு அவர்களிடையே இருக்க நியாயம் ஏது?

அவன் மீண்டும் பதினெட்டுப் பிராயமுடைய ஒருத்தியை மணம் செய்துகொண்டான். பழைய குடும்பம் ஒன்று தனியே இருக்க, புதுக் குடும்பத்தை ஆரம்பித்தான். புதிய போகத்தில் ஆழ்ந்து புதிய மனைவியிடம் இன்பம் துய்த்தான்.

முதல் மனைவி இறந்து போனாள். அதனால் அவனுக்குக் கொஞ்ச நாள் துக்கம் இருந்தது. புதிய மனைவியின் போகத்திலே அவனுக்கு ஆறுதல் கிடைத்தது. அவளையே தன் உயிராக மதித்தான். அவளிடம் பிறந்த குழந்தைகளைத் தன் கண்மணிகளைப்போல் பாவித்தான். இப்படி இரண்டாவது குடும்ப விருத்தி நடைபெறுகையில் முதற் குடும்பத்தினர் ஒவ்வொருவராக மரணம் அடைந்தனர்.

4

மரண தேவன் இப்போது சிரஞ்சீவி மனிதனது இரண்டாம் குடும்பத்தை அணுகினான். அவனுக்கு நூறு வயசு. ஆனால், என்ன? அவன் இப்போதுதான் முப்பத்தைந்து வயசு நிறைந்தவனைப் போலக் காணப்பட்டான். அவனுடைய ஆருயிர்க் காதலியாகிய இரண்டாவது மனைவியும் இறந்துபோனாள். முதல் மனைவி இறந்தபோது அவனுக்கு இவ்வளவு துக்கம் உண்டாகவில்லை. இப்போதுதான் அவனுக்கு வாழ்க்கையின் உண்மை புலப்படலாயிற்று. ஒரு நூறு வருஷம் தான் வாழ்ந்த பயன் தன் அன்புக்குரிய பொருளை இழந்துவிடும் துக்கந்தான் என்ற உண்மையை அவன் நெஞ்சு உணரத் தொடங்கியது.

ஆனாலும், அவன் மனம் தளரவில்லை. மூன்றாவது மனைவியைத் தேடினான். இப்போது உலகம் அவனிடம் முன்னைப்போல் அவ்வளவு மரியாதை காட்டவில்லை.

'இந்த மனிதன் சிரஞ்சீவிப் பட்டம் பெற்றவன்' என்று சொல்லிப் போற்றிய மனித பரம்பரை இப்போது அடி யோடு போய்விட்டது. அவனுடைய முதற் குடும்பத்தில் உற்பவித்தவர்களின் பேரர்களுக்குப் பேரர்கள் வாழும் காலம் இது. இப்போது அவனைக் கண்டு எல்லோருக்கும் பயம் உண்டாகிவிட்டது. அவனை அணுகவும் அஞ்சினார் கள். "இவன் துடைகாலி. தன் குடும்பத்தில் ஒவ்வொருத் தராகத் தொலைத்துவிட்டுத் தனி மரம்போல் நிற்கிறான்" என்று ஏச ஆரம்பித்தார்கள். பெண் கேட்கப் போனால், "இவன் ஜாதகம் களத்திர தோஷம் உள்ளது. பல மனைவி களை இழந்துவிடும் பாக்கியவான் இவன்!" என்று சொல்லி யாவரும் தூர விலகினார்கள்.

அவன் தன் ஆயுளில் நூறு வருஷங்களை ஒருவாறு கடந்துவிட்டான். அந்த நூறு வருஷங்களையும் நினைத்துப் பார்த்தான். தன்னைத் தெய்வமாகக் கொண்டாடிய முதற் குடும்பத்தைப்பற்றி எண்ணியபோது, 'அவர்கள் இப் பொழுது இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!' என்று நினைத்து ஏங்கினான். தன் உயிருக்கும் உயிராக இருந்த இரண்டாவது மனைவியைப் பறி கொடுத்த துக் கத்தை எண்ணியபோதோ அவன் உடம்பெல்லாம் நடுங் கியது. மரண தேவதை தன்னைப் பழி வாங்குகிறதோ என்று எண்ணி எண்ணி நைந்தான்.

"கடவுளே, நான் வாழவேண்டும். வாழ்வதற்குச் சௌகரியம் வேண்டும். தன்னந்தனியனாக எப்படி வாழ முடி யும்? என்னிடம் அன்பு பாராட்டவும் நான் என் அன்பை வைத்துப் போற்றவும் ஒருவர் இந்த உலகத்தில் கிடைக்க வில்லையே!" என்று அவன் தெய்வத்தை நினைந்து உருகிய போது, பகவான் அவனுக்கு முன்னே பிரத்தியக்ஷ மானான்.

"பிரபோ, நல்ல சமயத்தில் எழுந்தருளினீர்கள். என் வேண்டுகோளை நிறைவேற்றவேண்டும்" என்று காலில் விழுந்து எழுந்து பிரார்த்தித்தான்.

"ஆயிர வருஷங்களுக்கு மேலும் வாழவேண்டுமா?" என்று நீலமேனி நெடியோன் வினவினான்.

"அதைப்பற்றிப் பிறகு பார்த்துக் கொள்ளலாம். இப்பொழுது எனக்கு வாழ்க்கையில் இன்பம் தருவதற்கு ஒரு மனைவி வேண்டும்" என்று வேண்டினான்.

பகவான் புன்னகை பூத்தான். "இதற்கெல்லாம் நாம் சம்மதிக்கவில்லையே! உன் யோக க்ஷேமத்தை விசாரிக்கத்தான் வந்தோமே தவிர உனக்குக் கல்யாணம் செய்து வைக்க வரவில்லை" என்றார்.

"அந்த மாதிரி திருவுள்ளம் பற்றக் கூடாது. என் ஆயுள் விஷயமாகத்தான் தேவரீர் நிபந்தனையிட்டீர்களே யொழிய, இந்த விஷயங்களில் ஏழையாகிய எனக்கு அருள் புரியத்தான் வேண்டும்" என்று கெஞ்சினான்.

"சரி; அப்படியே ஆகட்டும். உனக்கு இதுகாறும் கிடைக்காத அருமையான மனைவி கிடைப்பாள்" என்று அருள் செய்து மறைந்தான் மாயவன்.

நூறு ஆண்டுகள் நிரம்பிய அவன் மீண்டும் புத்துயிர் பெற்றான். யாரோ ஒருவர் அவனைத் தேடிக்கொண்டு வந்து தம் பெண்ணை மணம் செய்து வைத்தார். அழகினாலும் குணத்தினாலும் அவளுக்கு அவளே நிகராக இருந்தாள். அன்பைப்பற்றிச் சொல்லவேண்டுமா என்ன? அவளுடைய அன்புப் பிணைப்பிலே சிரஞ்சீவி மனிதன் கண்டறியாத இன்பத்தைக் கண்டான். தேவர்களெல்லாம் கண்டு பொறாமைப்படும் வாழ்வை நடத்தினான்.

யமன் தன்னுடைய பரிவார தேவதைகளை அனுப்பினான். அவள் உடல் தளர்ந்தாள். அவனுக்கோ இளமை முறுக்குத் தளரவில்லை. "ஐயோ! இதென்ன, நீ என்னை விட வயசு முதிர்ந்து வருகிறாயே!" என்று திடுக்கிட்டான் அவன். பழைய ஞாபகங்களெல்லாம் வந்தன. "ஐயோ! கடவுளே, இவளுக்கும் என்னுடைய சிரஞ்சீவித் தன்மையை அளிக்கக்கூடாதா? இவளுக்குத் தனியே

அந்த வரம் அளிக்காவிட்டாலும், என் ஆயுளில் பாதியை இவளுக்கு நான் பகிர்ந்து கொடுக்கத் தயாராக இருக்கிறேன். எனக்கு ஆயிர வருஷங்களுக்கு மேலே ஆயுள் வேண்டாம். அந்த ஆயிரத்திலும் பாதி இவளுக்குத் தந்துவிடுகிறேன்" என்று புலம்பினான். அன்ன ஆகாரம் இல்லாமல் தவங்கிடந்தான். கடவுள் இப்போது அவன் நினைத்தபடி அவ்வளவு சுலபமாகக் காட்சி அளிக்கவில்லை.

அவன் மனைவி நோய்வாய்ப்பட்டாள். அவன் உடனிருந்து சுச்ரூஷை செய்தான். ஒரு தாய்க்கு மகன் தொண்டு புரியும் நிலை என்றுதான் அதைச் சொல்ல வேண்டும். "என்ன அபசாரம்! நீங்களா எனக்கு உபசாரம் செய்வது? நான் அல்லவா உங்களுக்குச் சுச்ரூஷை செய்யவேண்டும்?" என்று கூறி அந்த மங்கை நல்லாள் மறுகினாள்.

உண்மைதான். நோய்வாய்ப்பட்ட கணவனுக்கு வேண்டிய சுச்ரூஷைகளைச் செய்து அந்தத் தொண்டிலே இன்பங் காணும் மங்கையரை வீடுதோறும் அவன் பார்த்திருக்கிறான். அவன் வீட்டில் அவன் ஆருயிர்க் காதலி அவ்வாறு செய்யமாட்டாளா? செய்வாள். யுகயுகாந்தரங்களாக அவனுக்குத் தொண்டு புரிய அவள் உள்ளம் சித்தமாக இருக்கிறது. ஆனல்? அவனுக்குச் சுச்ரூஷை தேவையில்லையே! அவன் உடற்கட்டு ஓர் அணுவளவாகிலும் குறையவில்லையே! அவள்தானே தளர்ந்து பிணி வாய்ப்பட்டு அவதி உறுகிறாள்? "ஐயோ! தெய்வமே, எனக்கு வியாதியைக் கொடுத்துப் படுக்க வைத்திருக்கக் கூடாதா? என் காதலியின் சிகிர்சைகளைப் பெற்று அதிலே கிடைக்கும் தனி இன்பத்தை நுகர எனக்கு வழியில்லாமல் போயிற்றே!" என்று அவன் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி மனம் புண்ணானான்.

எதிர்பார்த்தது நிகழ்ந்துவிட்டது; அவன் உயிர்க் காதலி அவனைப் பிரிந்து சென்றாள். உலகத்தில் மீண்டும்

அவன் தனியனுனன். இப்போது அவன் அந்தத் தனிமையை உணர்ந்து உணர்ந்து அடைந்த வேதனை சொல்லத் தரமல்ல. தன் காதலியோடு தானும் மரணமடைந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும் என்றுகூட எண்ணினான். மற்றவர்கள் நோய் வந்ததற்காகத் துயர் அடைவார்கள். அவனோ தனக்குத் தளர்ச்சியும் நோயும் வரவில்லையே என்று அங்கலாய்த்தான். மரணத்தைப் போன்ற துன்பம் வேறு இல்லை என்று எண்ணும் உலகத்தில் தன் காதலியோடு சேர்ந்து இறப்பதானால் அந்த மரணத்தை அவன் வரவேற்றான்.

பாவம்! தன்னுடைய நூற்றைம்பதாவது வயசிலும் அவன் உலக வாழ்க்கையின் இன்பத்தை முழுவதும் நுகர்ந்தானென்று சொல்வதற்கில்லை. உலகம் அவனை விட்டு வேகமாய்ப் போய்க்கொண்டே இருந்தது. அந்த வேகத்தை அவனால் பிடிக்க முடியவில்லை. அவன் ஆமையைப்போல் ஊர்ந்துகொண் டிருந்தான். அவ்வப்போது பிரயாணப் பாதையிலே அவனை அணுகுகிறவர்களெல்லாம் சில நிமிஷங்களே அவன் கண்ணிற்குப் பட்டுப் பிறகு காணமல் போய்விட்டார்கள். நிரந்தரமான அன்பு, நிரந்தரமான சுகம் ஒன்றும் அவனுக்கு இல்லை. அவன் நித்தியத்துவத்தைத் தவங்கிடந்து பெற்றான். ஆனால் உலகம் அவனை க்ஷணத்துக்கு க்ஷணம் மறந்துவிட்டுச் சென்றது. அவன் இறக்கவில்லை என்பது உண்மைதான்; ஆனால் அவனைச் சுற்றிலும் உள்ள எல்லாம் இறந்துகொண் டிருந்தன. அவன் இறந்து புதிய உலகத்துக்குச் செல்லவில்லை. ஆனால் அவனுக்கு முன்னே புதிய புதிய உலகங்கள் வந்துகொண் டிருந்தன. ஆகவே உலகத்துக்கும் அவனுக்கும் ஒட்டுதல் இல்லை; பற்றில்லை; உலகத்தில் இருந்தும் அவன் வாழவில்லை. ஐயோ பரிதாபம்!

## 5

இருநூறு வருஷங்கள் ஆயின. உலகத்தில் ஜீவராசிகள் நிரம்பியிருந்தும் அவனுக்கு எல்லாம் சுடுகாடாக

இருந்தது. "பகவானே, எனக்கு ஆயிர வருஷ காலம் ஆயுள் கொடுத்தாய். ஆனால், அவ்வளவு வருஷத்திலும் நான் சுகமாக வாழவேண்டுமென்று நியமிக்கவில்லையே!" என்று அழுதான் சிரஞ்சீவி மனிதன்.

"சௌக்கியமாக இருக்கிறாயா?" என்று கேட்டுக் கொண்டே ஸ்ரீமந் நாராயணன் பிரசன்னமானான்.

"வந்தீர்களா? இந்த நாயின்மீது தேவரீருக்குக் கருணை பிறந்ததா?" என்று கடவுளின் திருவடிக் கமலங் களைப் பற்றிக்கொண்டு கோவென்று கதறிவிட்டான் மனிதன்.

"ஏனப்பா, இவ்வளவு துக்கம்?" என்று கேட்டான் மாயன்.

"சுவாமி, எனக்கு ஆயிர வருஷங்கள் ஆயுள் கொடுத் தீர்களே; அதை மாற்றிவிட வேண்டும்."

"இன்னும் அதிகமாக்க வேண்டுமா?"

"ஐயையோ! வேண்டவே வேண்டாம். நான் இன் னும் ஐம்பது வருஷங்கள் வாழ்ந்தால் போதும். ஆனால் அதற்குள் எனக்குப் பல வியாதிகளும் வரும்படி அருள் புரியவேண்டும். நரை திரை மூப்பு எல்லாம் இப்பொழுதே கிடைத்தாலும் பரம சந்தோஷத்துடன் ஏற்றுக்கொள் கிறேன். எனக்கு ஒரு பத்தினிப் பெண் வேண்டும். அவள் என் அருகில் இருந்து சுச்ரூஷை செய்யவேண்டும். அவளுடைய உபசாரங்களைப் பெற்றுக்கொண்டு நான் மரணம் அடையவேண்டும்" என்று விம்மி விம்மிப் பிரார்த்தனை செய்தான் சிரஞ்சீவி மனிதன்.

"அதெல்லாம் நமக்குத் தெரியாது. நாம் முன்பே உன்னை எச்சரித்திருக்கிறோம். ஆயிர வருஷ ஆயுளில் ஒரு நாள்கூடக் குறைக்க முடியாது. உலகத்தில் எல்லோரா லும் பூஜிக்கப்படும் நிலையை வேண்டுமானால் உனக்கு அருள் செய்கிறோம். ஆயுளைக் குறைப்பதென்பது மட்

டும் நடக்காத காரியம்'' என்று அருள் செய்துவிட்டு மறைந்தான் திருமால்.

கடவுளின் வாக்குப் பலித்தது. இருநூறு வயசு நிரம்பிய அவனை உலகத்தார் கொண்டாட ஆரம்பித்தனர். உலக அதிசயப் பொருள்களுள் ஒருவனாக அவன் ஆனான். பெரிய கோயில் ஒன்று கட்டி அவனை அதில் வைத்துப் பூஜை செய்யலானார்கள். ராஜாதிராஜர்களெல்லாம் அவன் முன் வந்து கீழ் விழுந்து வணங்கித் தோத்திரம் செய்து சென்றார்கள்.

உலகம் முழுவதும் சேர்ந்து அவனுக்கு உபசாரம் செய்தது; பாராட்டியது; ஸகஸ்ரநாம அர்ச்சனை செய்தது. ஆனால் அவனுக்குச் சுகம் இருந்ததா?

'ஐயோ! என்னைத் தனியாக அணுகி என் உள்ளத்தோடு ஒட்டிப் பேசுவார் ஒருவரைக் காணேனே! கூட்டங் கூட்டமாக வந்து என்னைக் கும்பிடுகிறார்களே! நான் என்ன சிலா விக்கிரகமா? விளையாட்டாகப் பேசிக்கொண்டிருக்கலாமென்றால் அதற்கு ஒருவரும் கிடைக்கவில்லையே! உலகம் முழுவதும் ஒரு ஜாதி, நான் ஒரு ஜாதி என்று பிரிக்கப்பட்டுப் போனேனே! எனக்கு இந்தச் சிறையை திருமாணித்துக் கோயிலென்று சொல்லிப் போற்றுகிறார்களே! இவ்வளவும் என்னைப் பரிகசிப்பவைபோல அல்லவா இருக்கின்றன? காலாறத் தனியே நடக்க விடமாட்டேன் என்கிறார்கள். ஒரு நாள் பட்டினி கிடக்க எனக்கு உரிமை இல்லை. சோர்ந்தாற்போல இரண்டு நாள் குறட்டை விட்டுத் தூங்கலாமென்றால், உலகமே என் தூக்கத்தைக் கலைப்பதற்கு ஆயத்தமாக அல்லவோ இருக்கிறது? நிமிஷத்துக்கு நிமிஷம் மணியோசையும், முரசொலியும், சங்கநாதமும், மேளத்தின் முழக்கமும் இந்தச் சிறையிலே இடியைப்போல இடித்து என்னைத் திடுக்கிட வைக்கின்றனவே! ஐயோ! மனிதர்கள் பாக்கியசாலிகள். அவர்களுக்கு மரணம் என்னும் திவ்ய அமிர்தம் கிடைத்திருக்கிறது. எனக்கும் அதுதான் மருந்து. இனி நான் தவம் புரிவேன்'

என்று சிரஞ்சீவி மனிதன் சிந்தனை செய்தான். அன்று முதல் அவன் மௌனமாக இருக்கத் தொடங்கினான். அவனைத் தரிசிக்க வந்தவர்களுக்குப் பின்னும் அவனிடம் பக்தி முதிர்ந்தது. அவனைக் கோயில் விக்கிரகம் போலவே நினைத்து வழிபாடு புரியலாயினர்.

அவன் மௌனமாக இருந்தாலும் அவன் உள்ளத்தின் கொந்தளிப்பு மிகுதியாயிற்று. முன்பு அவன் வாழ்வை வேண்டித் தவம் புரிந்தான். இப்பொழுதோ—?

## ௬

முந்நூறு வருஷங்கள் நிரம்பின. அவன் தவம் பலித்தது; கடவுள் தரிசனம் கிடைத்தது. "இனி எனக்குச் சாகும் வரம் வேண்டும். அப்பனே, என் ஆருயிரே, எனக்கு மரணப்பிச்சை தா. போதும் உலக வாழ்வு. சாவிலே உண்டாகும் இன்பத்தைத்தான் நான் வேண்டுகிறேன். அடுத்த பிறவி எனக்கு உண்டென்றால் அற்பாயுசிலே நான் இறந்துவிட வேண்டும். என் அப்பனே, பக்த பராதீனனே, தீன தயாளுவாகிய உன்னிடத்தில் நான் இரக்கின்றேன். எனக்கு இறந்துபோகும் பாக்கியத்தை இந்த க்ஷணத்திலே அருள் செய். வாழ்வு என்ற பெயரோடு எனக்குக் கிடைத்த சித்திரவதை போதும். இனி மரணம் என்னும் அமிர்தந்தான் எனக்கு வேண்டும். எனக்கு அதைத் தா!" என்று அவன் கதறினான்.

"என்னப்பா, அதற்குள் சலித்துப் போய்விட்டாயே; முந்நூறு வருஷங்களே ஆகியிருக்கின்றன; இன்னும் எழுநூறு வருஷகாலம் இருக்கிறதே. நீ பதினாயிர வருஷம் வாழவேண்டுமென்று முதலில் வரம் கேட்டாயே!"

"பகவானே, அநாத ரக்ஷகா, தீனபந்தோ, உன்னுடைய மாயா லீலைகளைக் காட்டுவதற்கு இந்தப் பேதை ஆளல்ல. பதினாயிர வருஷம் வேண்டுமென்று கேட்ட என் நாவைத் துண்டு துண்டாக வெட்டிப் போட உத்தரவாகட்

டும். நான் சந்தோஷத்தோடு ஏற்றுக்கொள்கிறேன். இனி ஒரு க்ஷணமும் உலக வாழ்வு வேண்டாம். இந்த க்ஷணத்தி லேயே நான் மரணத்தைத் தழுவிக்கொள்ளச் சித்தனுக இருக்கிறேன்.''

''ஏன், உலகத்தில் உனக்கு என்ன குறை? உனக்குக் கோயில் கட்டியிருக்கிறார்கள். தெய்வத்தைப்போல உன்னை வழிபடுகிறார்கள். தெய்வ பூஜையை மறந்தாலும் மறப்பார்கள்; உன் பூஜையை மனிதர்கள் மறவாமல் எவ் வளவு உற்சாகமாகப் பயபக்தியோடு கொண்டாடுகிறார் கள்!'' என்று மந்தகாசத்தோடு வைகுண்டநாதன் சொன்னுன்.

''போதுமே இந்த வாழ்வு! தெய்வங்களெல்லாம் கல் லாகவும் செம்பாகவும் இருப்பதனுல்தான் கோயில் சிறைக்குள் அடைபட்டு இந்தப் பூஜைகளை ஏற்றுக் கொள்கிறார்கள். என்னையும் உணர்வற்ற கல்லாகச் சமைத்துவிட்டால் நானும் ஒருகால் ஏற்றுக்கொள்வேன். அதெல்லாம் இருக்கட்டும். நான் கதறுகிறேன். கண்ணு, மணிவண்ணு, என்னைக் காப்பாற்ற வேண்டும். நான் முன்னே தவம் செய்தது பொய்; இப்போது செய்வது தான் மெய். முன்னே வரங்கேட்டது பைத்தியக்காரத் தனம்; இப்பொழுது கேட்கும் வரந்தான் என் மனப் பூர்வமாக யாசிப்பது. எனக்குச் சாகும் வரத்தை உடனே தந்தருள். இனி ஒரு கணமும் தரியேன்.''

அவனுடைய பிரலாபத்தைக் காதில் வாங்கிக்கொள் ளாமல் கமலக்கண்ணன் மறைந்தான். இந்தத் தடவை அவன் சிரஞ்சீவி மனிதனுக்கு ஒன்றுமே கூறுமல் போய் விட்டான். 'ஐயோ! இனி யாரைத் தேடிச் சரணடை வேன்! மரணத்தை யாரிடம் பெறுவேன்! யமதர்மராஜனை நோக்கித் தவம் புரியலாமா?—ஆம். அதுதான் வழி' என்று சிந்தித்தான். தென்திசைக் கடவுளைத் தியானம் செய்யலானுன்.

பயங்கரமான உருவத்தோடு யமராஜன் சிரஞ்சீவியின் எதிரே தோன்றினன்; "உனக்கு என்ன வேண்டும்?" என்று இடிக்குரலிலே அவன் கேட்டான்.

"எம்பெருமானே, எனக்கு மரணம் வேண்டும்; இந்த க்ஷணத்திலே மரணம் வேண்டும்" என்று விநயத்தோடு விண்ணப்பித்துக்கொண்டான் மனிதன்.

"மரணமா? உனக்கு மரணம் இன்னும் எழுநூறு வருஷங்களுக்கு அப்புறமல்லவா விதித்திருக்கிறது? அதற்குள் மரணத்தைக் கேட்கிருயே! மரணம் அவ்வளவு சுலபமாகக் கிடைக்கக் கூடியதா? தேவர்களுக்குக்கூட எளிதில் கிடையாத பொருளாயிற்றே அது?" என்று சொன்னபோதே கட்டடம் முழுவதும் கிடுகிடுத்தது.

"தர்ம ராஜாவே, மரணத்தின் பெருமையை என்னைப்போல உணர்ந்துகொண்டவர்கள் இந்த உலகத்திலே வேறு யாரும் இருக்கமாட்டார்கள். மரணம் வேண்டும், மரணம் வேண்டும் என்ற தாகம் எனக்கு மிதமிஞ்சியிருக்கிறது. வேண்டாதவர்களுக்கெல்லாம் அதை அளித்துக் கஷ்டப்படுத்துகிருய் என்று உலகம் உன்னைப் பழிக்கிறதே; நான் இப்போது அதை வேண்டுகிறேன்; என் மனப்பூர்வமாக வேண்டுகிறேன். தேவர்கள் அமிர்தத்துக்காகத் தவம் செய்ததுபோல நான் மரணத்துக்காகத் தவம் புரிந்துகொண் டிருக்கிறேன். என் தவம் பலித்து மரண தெய்வத்தைத் தரிசனம் செய்யும் பாக்கியம் இதோ எனக்குக் கிடைத்திருக்கிறது. தர்மராஜாவே, தென்றிசைக் கடவுளே, மிருத்யுதேவனே, உன் கருணை வெள்ளம் என்மேல் பாயட்டும்; என்னுடைய தீர்க்காயுளென்னும் நரகத்திலிருந்து என்னைக் கரையேற்றட்டும். உன்னுடைய திருக்கரத்திலுள்ள பாசத்தை என் மேல் வீசு. சர்வாங்க சுந்தரி ஒருத்தியின் மணமாலையைப்போல அதை நான் ஏற்றுக் கொள்கிறேன். என்னைக் காப்பாற்று; எனக்கு மரணத்தைத் தா!"

அவனுக்கு இருந்த ஆத்திரத்தில் அவன் என்ன என்னவோ சொல்லிக் கதறித் தீர்த்துவிட்டான். கடைசியில் அலுத்துப் போய் மூர்ச்சையானான்.

மூர்ச்சை தெளிந்து விழித்தபோது வைவஸ்வதனைக் காணவில்லை; அவன் மறைந்துவிட்டான். எங்கிருந்தோ ஒரு பயங்கரமான சிரிப்பொலி மாத்திரம் அவன் காதில் ஒலித்தது.

அவன் மூர்ச்சை தெளிந்தபொழுது உடம்பில் ஓர் ஆனந்த உணர்ச்சியைக் கண்டான். அவன் தூங்கி எவ்வளவோ காலங்கள் ஆயின. மூர்ச்சையாக இருந்தபோது அவன் தூக்கத்தைக்காட்டிலும் சிறந்த இன்பத்தை அடைந்தான்; சில நிமிஷநேரம் மரணத்தின் சுவையை உணர்ந்தவனைப்போல இருந்தான். "ஆஹா! என்ன இன்பம்! மரணதேவனின் தரிசன மாத்திரத்தில் கிடைத்த இந்த இன்பமே இப்படி இருந்தால், அவனுடைய முழு அருளும் கிடைத்தால் எப்படி இருக்கும்!" என்று அவன் கற்பனை செய்யலானான்.

காலம் போய்க்கொண்டிருந்தது. அவன் மௌனியாக இருந்தான். உலகம் அவனை விட்டு நெடுந்தூரம் விலகிப் போய்க்கொண்டிருந்தது. மனிதர்களோடு பழகாததனால் அவனுக்குப் பாஷை புரியவில்லை; பழக்க வழக்கங்கள் விளங்கவில்லை. எல்லாவற்றிலும் அவன் தனி மனிதனாகவே, தனிப் பிராணியாகவே இருக்கலானான்.

## 7

அவனுடைய ஆயுளில் நாலு நூற்றாண்டுகள் நிரம்பிவிட்டன. இப்போது அவனுக்கு உலகமே புரிபடவில்லை. மனிதர்களோடு கலந்து பழகாமையால், அவர்கள் எண்ணங்களோடு செல்ல இயலவில்லை; அவர்கள் பாஷையே மாறிவிட்டது. பழங்காலத்தில், நானூறு வருஷங்களுக்கு முன் அவனுக்குப் பழக்கமாகிய தாய்மொழியை அவன் கேட்கவில்லை. அவர்கள் சத்தமெல்லாம் விசித்திர ஒலியா

கவே பட்டன. அவர்கள் நடையிலும் உடையிலும் உணவிலும் எவ்வளவோ வேறுபாடுகளைக் கண்டான். அவனே ஒரேமாதிரி இருந்தான்.

அவர்கள் அவனை எப்படிப் பார்த்தார்கள்? அது தான் பின்னும் வேடிக்கை. அவனை வழிபட்டுவந்த காலம் மலையேறிப் போய்விட்டது. உடம்பெல்லாம் ரோமக்காடு மூடியிருந்த வாலில்லாக் குரங்கு ஒன்றைக் கண்காட்சியில் வைத்து வேடிக்கை பார்க்கிறார்களே, அந்தமாதிரி உலகத் தாருக்கு இப்போது அவன் விநோதப் பொருளாக ஆகி விட்டான். அவன் வேதனை தாங்காமல் என்னவோ சொன் ஞல், அந்த வார்த்தைகள் ஜனங்களுக்குப் புரியவில்லை. 'இந்த மிருகம் மனிதனைப்போலவே சத்தமிடுகிறதே!' என்று பள்ளிக்கூடத்துக் குழந்தைகள் ஆச்சரியப்பட்டார் கள். கடைசியில் உலகம் அவனை ஒரு விசித்திர மிருக மாகவே வைத்துவிட்டது.

இப்பொழுது அவனுடைய கோயிலின் கர்ப்பக்கிருகம் ஒரு மரக்கூடு ஆகிவிட்டது. கண்காட்சி சாலை ஒன்று அங்கே எழுந்தது. ஆகார விவகாரங்களெல்லாம் அந்த இடத்தில் இருந்தபடியே செய்துகொள்ளும் பரிதாப நிலைக்கு வந்து சேர்ந்தான். அவனை வேடிக்கை பார்க்க வருப வர்கள் பழத்தை வீசி எறிவார்கள். குழந்தைகள் சிறு கல்லை வீசி எறிவார்கள். அபூர்வப் பிராணியாகிய அவனை எவ்வ ளவோ பேர் படம் பிடித்தார்கள்; எவ்வளவோ ஆராய்ச்சிக் காரர்கள் அந்தப் பிராணியைப்பற்றிய ஆராய்ச்சிகளை எழுதினார்கள். கர்ண பரம்பரையாக வந்த கதைகளையெல் லாம் தொகுத்துச் சிரஞ்சீவி மிருகத்தின் வரலாற்றை வெளியிட்டார்கள். 'இமாசலம் அநாதிகாலமாக இருக்கும் அதிசயம்; அதற்கு அடுத்த அதிசயம் இது' என்று விளம் பரங்கள் பறந்தன. ஜனக்கூட்டம் வந்து கட்டணம் கட்டிக் கண்டு களித்துச் சென்றது.

சிரஞ்சீவியின் நித்தியத்துவம் வியாபாரப் பொரு ளாகிவிட்டது!

அவன் கதறினாலும், கூச்சலிட்டாலும், அழுதாலும், சிரித்தாலும் எல்லாவற்றையும் விநோத நிகழ்ச்சிகளாகப் பார்த்துக் கைகொட்டி உலகம் நகைத்தது. அவனோ தன் நினைவை இழந்து பைத்தியம் பிடித்தவனைப் போலானான். பைத்தியமே பிடித்திருந்தால் அவன் மகிழ்ச்சியை அடைந்திருப்பான். அதுதான் இல்லையே! தன் உருவத்தைத் தானே பார்த்துக்கொண்டு அவன் சிரித்தான். "அட பாழும் உடம்பே! ஆயிர வருஷ வாழ்வைப் பெற்று வந்த திருமேனியே! உனக்குத்தான் எத்தனை கோலங்கள்! படு; மரணத்தைத் தழுவாத உடம்பு மணமற்றதென்று சொல்லிச் சொல்லிப் படு" என்று சொல்லிச் சிரித்தான். மயிரைப் பிய்த்துக்கொண்டான்; முகத்தில் அறைந்துகொண்டான். "தெய்வமே! பாழும் தெய்வமே! நான்தான் தெரியாமல் கேட்டேனென்றால் உனக்குக் கூடவா ஞானம் இல்லாமல் போய்விட்டது? ஆயிர வருஷமென்று குறைத்துச் சொன்னாயே; ஐந்நூறாகக் குறைத்திருக்கக் கூடாதா? அடுத்துக் கெடுக்கும் ஸ்வபாவம் தெய்வத்துக்கு அடுக்குமா? என்னுடைய சிரஞ்சீவித்துவத்தைக் கண்டதுண்டமாக்கி எட்டுத் திசையிலும் வீசி எறிந்துவிடுவேன். அது முடியவில்லையே! கடவுளே, உனக்கு மனம் இரங்கவில்லையா?" என்று முறையிட்டான்.

ஐந்நூறு ஆண்டுகள் ஆயின. மகாவிஷ்ணு மீண்டும் அந்தப் பேதை மனிதனுக்குத் தன் திருக்கோலத்தைக் காட்டினான். "மகாபாவி, தெய்வமென்று சொல்லிக்கொண்டே ராக்ஷஸச் செயலைப் புரியும் பேயே, உன் நெஞ்சு கல்லா? இரும்பா? நீ நாசமாய்ப் போக!" என்று கோபத் தீ விழியிற் கொப்புளிக்க, பல்லை நறநறவென்று கடித்துக்கொண்டு தன் ஆத்திரத்தைக் கொட்டினான், அந்த மனிதன். பகவான் தண்ணிலவனைய இன்னகை முகிழ்த்தான். "இப்படித் தூஷித்தால் நாம் சபித்து வேறு பிறவி தந்துவிடுவோம் என்று நினைக்கிறாயா? தெய்வம் தான் கொடுத்த வாக்கைப் பூரணமாக நிறைவேற்றும். எப்படி இருக்கிறது உலக வாழ்வு?" என்று மெல்ல வினவினான்.

சிரஞ்சீவிக்கு வந்த கோபம் பயங்கரமான கோஷத்தைக் கிளப்பியது. காறித் துப்பினான். மார்பில் அடித்துக் கொண்டான். "சாகும் வரம் தா! இல்லாவிட்டால் நீ செத்துப்போ" என்று கர்ஜித்தான்.

"யமன் என்ன சொன்னான்?" என்று கேட்டான் கருடவாகனன்.

"அவன் நாசமாய்ப் போனான்!"

"அவனா! அவன் நாசமாய்ப் போனால் உலகம் ஏது? உன்னுடைய தீர்க்காயுளில் இம்மியளவேனும் குறைப்பதற்கு யாராலும் முடியாது. சரி, அடங்கியிரு. அதுதான் வழி" என்று சொல்லிவிட்டு அவனுடைய விடையை எதிர்பாராமலே மறைந்துவிட்டான் லக்ஷ்மீபதி.

## 8

"அடங்கி இரு! நல்ல உபதேசம். வேறு வழி இல்லை. உடம்பை உலகத்தாரே அடக்கிவிட்டார்கள். மனசை அடக்கலாம். அடங்கி இருந்தால் காலத்தைக் கடந்து மரண சாம்ராஜ்யத்தை அணுகலாமா? கடவுளை நாம் என்ன என்னவோ வைதோம். ஆனாலும் அந்தக் கருணாநிதி நல்ல உபதேசத்தைத்தான் அருள் புரிந்தான். - மாயம் வல்லவனே, என்னைப் பொறுத்தருள். நான் அடங்காமல் இருந்தேன். நீ அடங்கும்படி உபதேசம் செய்தாய். இதோ அடங்கிவிடுகிறேன். இந்த மூச்சு அடங்கும் வரையில் அடங்கிக் கிடக்கிறேன். இன்னும் ஐந்நூறு வருஷங்கள்! அடேயப்பா! அவ்வளவு காலமா நான் காத்திருக்க வேண்டும்? ஆம், வேறு விதியில்லை; நான் அடங்கத்தான் வேண்டும்—"

கலகலவென்று சிரித்தான். "அட பாழும் தவமே! தவத்துக்கு இதுதானா பயன்? நான் ஆயிர வருஷம் வாழப் போகிறேனென்று இறுமாந்திருந்தேனே! அந்த இறுமாப்பிலே, இப்படியெல்லாம் நடக்குமென்று கடுகளவாவது எண்ணிப் பார்த்தேனா? தூ! என்ன வாழ்வு! அமர வாழ்

வாம், அமர வாழ்வு! மரணத்தாலே கனியாத வாழ்வுக்குச் சுவை ஏது? அமிர்தம் உண்ட தேவர்கள் ஏமாந்து போய் விட்டார்கள். ஐயோ! அவர்கள் நஞ்சையல்லவா உட்கொண் டிருக்கிறார்கள்? மனித உலகம் மரணத்தைப் பெற்றதோ பிழைத்ததோ! மரணம்—அதுதான் தெய்வம்; அதுதான் இன்பம்; அதுதான் மோக்ஷம்.''

மறுபடி ஒரு சிந்தனைச் சுருள்: "அமிர்தம் உண்ட தேவர்களுக்கு முன்பு மகாதேவன் நஞ்சை உண்டான். அவன்தான் பேரின்ப உருவம்; மரணத்தின் தலையிலே ஆனந்த தாண்டவம் இடும் கோலாகல மூர்த்தி; கால காலன்.'' இப்படி எண்ணினவுடனே அவனுக்கு ஞானோ தயமானது போல ஓர் உணர்ச்சி உண்டாயிற்று. "அட, என்ன காரியம் செய்தோம்! காலனை நோக்கித் தவம் கிடந் தோமே; காலகாலனை, சர்வலோகத்துக்கும் தன்னுடைய மகாசங்காரத்தாலே ஓய்வு தந்து தூங்கவைத்து, வேறு வேலையில்லாமையால் அந்தத் தனிமையிலே அன்னை பரா சக்தியுடன் ஆனந்த தாண்டவம் புரியும் மகாப்பிரபுவை மறந்துபோனோமே! எல்லாவற்றையும் அழிக்கும் ஆற்ற லுடைய அப்பெருமானுடைய தியானந்தான் இனி நமக்கு வழி. அடங்கும் வழி அதுதான்; கடைசியில் முடங்கும் வழியும் அதுவே'' என்ற திடசங்கற்பத்திலே அவன் வைராக்கியத்தை ஊன்றிக்கொண்டு காலகால மூர்த்தியின் தியானத்திலே ஆழ்ந்தான். "காலகால, மரணம் தா, கால கால, மரணப்பிச்சை தா'' என்பதுவே அவன் தியான மந்திரமாயிற்று.

என்ன ஆச்சரியம்! அவன் கண்ணை மூடிக்கொண்டு தியானத்தில் ஆழ்ந்தான்; கண்ணைத் திறக்கவே இல்லை. உடம்பு அசையவில்லை; உள்ளம் மாத்திரம் குமுறிக்கொண் டிருந்தது. உணவும் மறந்தான். பிறகு உள்ளமும் ஓயத் தொடங்கியது. 'காலகால, மரணப்பிச்சை தா' என்ற மந் திரமயமாக ஆகிவிட்டான் அவன். இவ்வளவு நாட்களாக அவனுக்குக் காலம் கடத்துவது மிகவும் வேதனையாக

இருந்தது. ஒரு நாள் ஒரு யுகமாகப் போயிற்று. ஒவ்வொரு கணமும் அவனைப் பயமுறுத்திவிட்டே கழிந்தது.

இப்பொழுதோ? அவன் அடங்கிக் கிடந்தான். காலத்தையும் அடக்கிவிட்டானே! ஆம், பத்து, இருபது, முப்பது, நாற்பது, நூறு, இருநூறு என்று வருஷங்கள் சென்றன; ஓடின. ஆனால் அவன் அசையவில்லை. உள்ளம் நடுங்கவில்லை. ததேகத் தியானமாய், "காலகால, மரணப் பிச்சை தா!" என்ற மந்திரஜபத்திலே லயித்திருந்தான்.

உலகம் எவ்வளவோ மாறுதல்களை அடைந்தது. அந்த மாறுதலில் ஓர் அணுவளவேனும் அவனுள்ளே புகவில்லை. காலக்கடலின் பேரலைகளையெல்லாம் அவன் அலக்ஷ்யமாக மலையைப்போலத் தாங்கி நின்றான்.

இருள் கவிந்திருந்த அதன் உள்ளப்பரப்பிலே ஒளி உதயமாயிற்று. பயமும் நடுக்கமும் வேதனையும் நிரம்பின அகத்தில் அவை இருந்த சுவடே தெரியாமல் மறைந்தன. உள்ளம் நிர்மலமாயிற்று. அங்கே தனி மோனத் தவச்சுடரின் ஒளி படரத் தொடங்கியது. அவன் வாய் முணுமுணுக்கவில்லை; உள்ளம், "காலகால, மரணப்பிச்சை தா" என்ற மந்திரத்தை வண்டைப்போல முரன்றது. உணவில்லாமல், இயக்கமில்லாமல் இருந்த அந்த உடம்பில் வாட்டம் காணவில்லை. உள்ளே முளைத்த சோதி வெளியிலும் பொசிந்தாற்போல அந்த மேனியிலே ஒரு பொன்னிறம் பொலிந்தது; நறுமணம் பரவியது.

ஒளியின் பரப்பு உள்ளமாகிய நிலத்திலே அதிகமாயிற்று. எங்கும் பரந்து நிரம்பி இனிக்கும் பேரொளி, வெள்ளமாகப் பாயத் தொடங்கியது. அதோ, ஜல்ஜல் என்ற சிலம்பொலி கேட்கிறதே. சூரியன் தன் பதினாயிரங் கிரணங்களோடும் உதயமாவது போன்ற ஒளிப்பிழம்பு அதோ, அதோ வருகிறது. ஒளிப் பிழம்பினூடே கண்ணைக் குளிர்விக்கும் அழகிய திருக்காட்சி! 'குனித்த புருவமும், கொவ்வைச்செவ் வாயிற் குமிண்சிரிப்பும், பனித்த

சடையும், பவழம்போல் மேனியில் பால் வெண்ணீறும், இனித்தமுடைய எடுத்தபொற் பாதமும்' உடைய அற்புதத் திருக்கோலம்! ஆஹா! மகாகாலகால சர்வ சங்கார தாண்டவமூர்த்தி வந்துவிட்டார்.

"என் அப்பனே! காலகாலனே! மாணப்பிச்சை தா!" என்று அடி நாபியிலிருந்து தொனி எழுந்தது. மகாதேவர் தம்முடைய சூலத்தின் நுனியால், மரணப்பிச்சை யாசித்து அலந்து நிற்கும் அந்த உடலைத் தொட்டார். "அப்பனே! உய்ந்தேன்" என்ற உள்ளொலி அந்தப் பேருளாளர் காதில் மட்டுந்தான் விழுந்திருக்க வேண்டும்.

உடம்பிலிருந்து உயிர் பிரிந்தது. காலகாலனது சூலத்தின் ஸ்பரிசம் சாகும் வரம் தந்துவிட்டது. உயிர் முக்தி அடைந்தது. சரியாக ஆயிரம் ஆண்டுகள் அந்தக் கணத்தோடு முடிந்தன.

# நீலப் பந்து

"பந்து பந்து என்று பொழுது விடிந்தால் நச்சுப் பண்ணிக்கொண்டே இருந்தாயே; இந்தா, இதை எடுத்துக் கொள். இனிமேல் தொந்தரவு பண்ணாதே" என்று ராமநாத முதலியார் தம் பையன் கையில் நீல நிற மான பந்து ஒன்றைக் கொடுத்தார். மேலே துணியுறை போட்ட ரப்பர்ப் பந்து; டென்னிஸ் விளையாட்டில் உப யோகிக்கும் பந்து. ஆனல் அது நீலச்சாயத்தில் தோய்க்கப் பெற்றிருந்தது. மற்றப் பந்துகளெல்லாம் பழுப்பு நிறமாகத் தானே இருக்கும்? இது நல்ல நீல நிறமாக இருந்தது.

ராமநாத முதலியாருடைய பையன் மாணிக்கம் அதை ஆவலோடு வாங்கிக்கொண்டான். ஒரு குதி போட்டுக் கொண்டு வீதிக்கு ஓடினன். "டேய்! இங்கே பாருடா! எங்கப்பா வாங்கித் தந்தார்" என்று முழக்கிக்கொண்டே வீதியிலுள்ள தன் தோழர் கூட்டத்தில் சேர்ந்துகொண் டான். அவனுக்கு அன்றைக்கு ஏதோ பெரிய ராஜ் யத்தை ஜயித்துவிட்டது போன்ற சந்தோஷம் உண்டா யிற்று.

அவனுக்கல்லவா தெரியும் அதன் பெருமை? அப்படி ஒரு பந்து வேண்டுமென்று எத்தனை தடவை அப்பாவை நச்சியிருப்பான்! சதா சிடுசிடுவென்று இருக்கும் ராம நாத முதலியாருக்கு அவனிடத்தில் பிள்ளை என்ற பாசம் இருக்கலாம்; இருந்தும் என்ன? 'ஏதடா குழந்தை கேட்கிறனே; ஒன்று வாங்கித் தரலாம்' என்ற எண்ணம் உண்டா? ஊஹூம். "நீ கெட்ட கேட்டுக்குப் பந்து ஒன்றுதான் பாக்கி" என்று உறுமுவார். அதோடு நிற் பாரா? சிபாரிசு செய்ய வரும் மனைவியையும் வைவார். என்றைக்காவது யாரிடமாவது கடன் கேட்டுக் கிடைக்

காமல் இருக்கவேணும்; அன்று மாணிக்கம் பந்து கேட்க வேணும்; பிடித்தது சனியன் அவனுக்கு. கையிலே எது இருந்தாலும் பிரயோகித்து விடுவார். "சாமி, இந்தப் பிள்ளையை இந்தப் பாவி வவுத்திலே ஏன் பொறப்பிச்சே? இந்தக் கண்ராவியைப் பார்க்காமெ என்னைக் கொண்டு போயிட மாட்டியா?" என்று வயிறெரிந்து மாணிக்கத்தின் தாய் புலம்பும்படியாக முதலியாரின் தண்டனையின் கடுமை இருக்கும்.

குழந்தைப் பிள்ளை; அவனுக்கு முதல் நாள் பட்ட அடியும் வாங்கின வசவும் அன்று ராத்திரித் தூக்கத்தோடே போய்விடும். மறுநாள் மறுபடியும் பந்தைப் பற்றி அம்மாவிடம் முணுமுணுப்பான். அதை அவன் மறந்தாலும் அவன் தோழர்கள் மறக்க விடுகிறார்களா? வீதியிலே விளையாடப் போனால் அடுத்த வீட்டு வேலன், "இதோ எங்க மாமா இந்தப் பந்தை வாங்கித் தந்தாங்க" என்று குதித்துக்கொண்டே வருகிறான். தங்கமணியின் தகப்பனார் உத்தியோகஸ்தர் அல்ல; கூலி வேலை செய்கிறவர். ஆனாலும் அவனுக்கு ஒரு சின்னப் பந்தையாவது வாங்கிக்கொண்டு வந்து தந்திருக்கிறார். கோலி, பம்பரம், ஊதல், பலூன், மோட்டார், ரெயில் இன்னும் என்ன என்னவோ விளையாட்டுச் சாமான்கள் வீதியிலே வருகின்றன; விற்க அல்ல; ஒவ்வொருத்தனும் விளையாட வரும் போது தன் வீட்டிலே வாங்கித் தந்திருக்கும் பண்டத்தைக் காட்டி ஜம்பமாகப் பேசிக்கொள்கிறான். அவ்வளவு பேருக்கு நடுவில் இரண்டு மாக்கோலியும் இரண்டு பொக்கைக் கண்ணாடிக் கோலியுமே தன் சொத்தாக வைத்திருக்கும் மாணிக்கத்துக்கு அழுகை வராமல் என்ன செய்யும்?

"உனக்கு உங்க அப்பா ஒண்ணும் வாங்கித் தரமாட்டாங்களா?" என்று வேலன் கேட்கும்போது, ஏழு வயசுக் குழந்தை எப்படிப் பதிலளிப்பான்?

"எங்கம்மா சொன்னாங்க; அவுங்க அப்பா காசு செலவழிக்க மாட்டாராம்!" என்று தங்கமணி வீட்டுப்

பேச்சை அம்பலத்துக்குக் கொண்டு வரும்போது கொஞ்ச நஞ்சம் இருந்த தைரியமும் அந்தச் சிறு குழந்தையினிடமிருந்து விடை பெற்றுக்கொள்ளும்.

வீதியில் நாலு பிள்ளைகளுக்கு முன் அவமானம் அடைவதைவிட வீட்டில் உதைபட்டாலும் குற்றமில்லை என்று தோன்றிவிட்டது, மாணிக்கத்துக்கு. அதனால்தான் தினந்தோறும் அம்மாவிடமும் சமயம் வந்தபோது அப்பாவிடமும் 'பந்து பந்து' என்று கெஞ்சியும் அழுதும் வீம்பு பிடித்தும் கேட்டு வந்தான்.

"அம்மா, நம்ம அப்பா, காசு செலவழிக்காத கருமியின்னு அவுங்க வீட்டிலே சொல்லிக்கிறுங்களாம்" என்று கூட ஒரு நாள் தன் அம்மாவிடம் சொன்னான். அது அவள் ஆத்திரத்தைக் கிளப்பிவிட்டது. அன்று முதலியார் ஆபீஸிலிருந்து வந்ததும், "கொழந்தைக்கு ஒரு நாலணுப் பந்து வாங்கியாற வக்கில்லே. ஊரெல்லாம் கருமியின்னு சொல்லும்படி வச்சுக்கிறது நல்லால்லே" என்று கூறிவிட்டு, முதலியாருடைய கைப்பலத்தைக் குழந்தையோடு தானும் உணர்ந்தாள், அந்தப் பேதை மாது.

## 2

இவ்வளவு தூரம் பூர்வ கதை நடந்திருக்க, அன்று ஆபீஸிலிருந்து வந்தவுடன் பந்தைத் தூக்கிக் கொடுத்தால்? பெரியவராக இருந்தால் மூர்ச்சை போட்டிருக்கும். பையன் குழந்தைதானே? வாங்கிக்கொண்டு என்றும் இல்லாத குதூகலத்தோடு ஓடினன். அதோடு மற்றொரு விஷயமும் சேர்ந்துகொண்டது. நாலு நாளாகப் பக்கத்து வீட்டு வேலன் பந்து கொண்டு வருகிறதில்லை. அது எங்கேயோ கெட்டுப் போய்விட்டதாம். தினந்தோறும் அவன் கையிலே பந்தைப் பார்த்தால், நமக்கு இல்லையே என்று ஏங்கும் மாணிக்கத்துக்கு இன்று இரட்டிப்புச் சந்தோஷம். பழிக்குப் பழி வாங்குவது போன்ற உணர்ச்சி வேறு.

"இங்கே பாருடா: நீல நிறப் பந்து; உன் பந்து இப்படி இருக்குமா?" என்று கர்வத்தோடு அதைக் காட்டியபடி மாணிக்கம் கேட்டான். வேலன் அவனைவிட இரண்டு வயசு பெரியவன்.

"ஆமாம்; உங்கப்பா இதை எங்கேருந்து கொண்டாந்தாரோ!" என்று ஏளனமாகச் சொன்னான் வேலன்.

"கடையிலிருந்துதான் வாங்கிக்கிட்டு வந்தார்" என்று மாணிக்கம் பதில் சொன்னான்.

"இதைப் பாத்தா, புதிசு மாதிரி இல்லையே! பழைய பந்திலே வர்ணம் பூசினது போலே இருக்கு."

"இதுவா பழைய பந்து? இதோ நல்லாப் பாரு" என்று ஆத்திரத்தில் அந்த இளம்பிள்ளை நீலப் பந்தை வேலன் கையில் கொடுத்தான்.

அதை அவன் கையில் உருட்டிப் பார்த்து எதையோ கண்டுபிடித்தவன்போல், "ஆ! இது என் பந்துன்னு!" என்று கூவினான். "இதோ கறுப்பா யிருக்குதே, நெருப்புச் சுட்டது. அண்ணெக்கி வெந்நீரடுப்புலே பட்டு வெந்து போன இடம் இது" என்றான்.

மாணிக்கம், "டேய், உன் பந்து நீலப் பந்தாடா?" என்று ஆத்திரமும் அழுகையும் பொங்கி வரக் கேட்டான்.

அதற்கு வேலன், "எங்கம்மா கிட்டே சொல்றேன்" என்றபடியே வேகமாக அதை எடுத்துக்கொண்டு தன் வீட்டுக்குள் நுழைந்தான். அவன் பின்னாலே மாணிக்கமும் ஓடினான்.

"அம்மா அம்மா! என் பந்துதானே இது? நீ பாத்துச் சொல்லு" என்றான் வேலன்.

"இல்லே இல்லே; எங்கப்பா வாங்கியாந்து தந்தார். குடுத்திடு அதை" என்று அழுதான் மாணிக்கம்.

வேலன் தாய் அதை வாங்கிப் பார்த்தாள். அவள் பிள்ளையின் பந்துதான் அது. அந்தச் சுட்ட அடையாளம் ஒன்றே போதுமே! பின்னே நீலச் சாயம் எப்படி வந்தது? முதலியார் வேண்டுமென்றே நீலச் சாயம் தோய்த்திருக்கிறார்.

3

இதே சாக்காக இரண்டு வீட்டுக்கும் சண்டை மூண்டது. முதலில் பெண்களுக்குள் முன் காண்டங்கள் ஆயின.

"கொளந்தைக்குக் காசு போட்டுப் பந்து வாங்கியாந்தா, அதை ஒருத்தி புடுங்கி வச்சுக்கவாவது!" என்று மாணிக்கத்தின் தாய் ஆரம்பித்து வைத்தாள்.

"ஆமாம், புத்தம் புதிசு! புதுக் கருக்கு அழியல்லே, பாவம்! வெக்கங்கெட்டுப் போய்ப் பேச வாராங்க. எம் புள்ளே கூடக் கண்டுபிடிச்சுட்டுது, சுட்ட அடையாளத்தைக் கண்டு. நீலத்திலே தோச்சுப்பிட்டாங்காட்டியும் வேறே பந்தாயிடுமா?" என்று அடுத்த வீட்டிலிருந்து வந்தது குரல்.

பெண்களுக்குள் சண்டை, ஆண்களுக்குள் மனஸ்தாபம். ஆனால் நஷ்டம் என்னவோ குழந்தை மாணிக்கத்துக்குத்தான். அவனுக்குக் கிடைக்காமல் கிடைத்த பந்து இப்போது போய்விட்டது. அதோடு நின்றதா? வீதியிலே விளையாடப் போனால் பையன்களெல்லாம், 'திருடன்' என்ற பட்டம் வேறு கொடுத்துவிட்டார்கள். அவன் இளைய உள்ளத்தில் இன்னதென்று விவரிக்க முடியாத ஒரு வேதனை.

விஷயம் இதுதான்: முதலியார் கொல்லைப்புறத்தில் குளித்துக்கொண்டிருந்தபோது அங்கே வந்து விழுந்த பந்தை யாருடையதென்று ஆராய்ச்சி செய்ய அவர் முற்படவில்லை. அடிக்கடி பந்தைப்பற்றித் தம் மகன் நச்சும் போது, அந்த நச்சைத் தீர்க்கக் கடவுளே அந்தப் பந்தை

அவருக்குக் கிடைக்கும்படி அருள் செய்தாரென்று அவர் தமக்குள்ளே சொல்லிக்கொண்டார். இல்லையானால் அது அவரைத் தேடி வருவானேன்? அதன் திருமேனி வண்ணத்தை மாற்ற வேண்டுமென்று நினைத்ததற்கு என்ன காரணமென்று அவரைக் கேட்க யார் இருக்கிறார்கள்? வர்ணம் பூசிவிட்டால் பந்துக்குரியவர் கண்டுபிடிக்க மாட்டாரென்று எண்ணினதாகக் குற்றஞ் சாட்ட நமக்கு உரிமை ஏது?

ஆனால் இந்தச் சண்டையில் முதலியார் அதிகமாகத் தலையிடவில்லை. ஏதோ இரண்டொரு பேச்சு முதலில் சொன்னாரே ஒழிய, அதற்கு மேலே விவகாரத்தை வளர்த்தவில்லை.

அதற்குப் பதிலாக இப்போது அவர் அதிகமாக மௌனமே சாதித்து வந்தார். சில காலமாகக் கோபங் கூட அவரை விட்டுப் போயிற்றோ என்று சந்தேகப் படும்படி இருந்தது அவர் நிலை. ஆபீஸிலிருந்து வந்ததும் வராததும் தம் பையனைக் கூப்பிடுவார். "இண்ணைக்கி விளையாடப் போனியா?" என்று கேட்பார். அவன் நடுங்கிக்கொண்டு, "இல்லை" என்பான்.

"போகிறதுதானே?"

"அவங்க சேத்துக்கமாட்டேங்கறாங்க."

"ஏன்?"

இதற்குப் பதில் இல்லை; விம்மி விம்மி அழும் அழுகைதான் பதில்.

அவர்களுடைய ஏச்சும் பேச்சும் குழந்தையின் உள்ளத்துக்குள்ளே ஆழ்ந்து பதிந்தன. அதைப் பற்றிய பேச்செடுத்தாலே அவன் குன்றிப்போய் நிற்பதும், வேதனை தாங்காமல் அழுவதும் முதலியார் உள்ளத்திலே சிறிதளவு சென்றன. அவருக்கும் மான உணர்வு தலை காட்டியது. என்னவோ யோசனையில் ஆழ்ந்தார்.

இரண்டு மூன்று நாள் இந்த யோசனையில் இருந்தார். நான்காவது நாள் ஆபீஸிலிருந்து வந்ததும் வராததும், "டேய், மாணிக்கம்!" என்று கூப்பிட்டார். அவன் வழக்கம் போல வந்து நின்றான். "இந்தா, புதுப் பந்து; நீ கொண்டு போய் விளையாடு" என்று சொல்லிக் கொடுத்தார். உண்மையிலே புத்தம் புதிய பந்து!

மாணிக்கம் இந்த முறை ஓடவில்லை; நடந்தே வீதிக்குப் போனான். சில இளம் பிள்ளைகள் புதுப் பந்து மோகத்திலே அவனோடு சேர்ந்து விளையாடத் தொடங்கினார்கள்.

முதலியார் உள்ளே போய்ச் சட்டையைக் கழற்றி வைத்துக் கைகால் கழுவிக்கொண்டார். தாகசாந்தி செய்துவிட்டு வெளியே வந்தார். வீதிக்கே வந்துவிட்டார். என்றும் இல்லாத காட்சி!

தம் பையன் பந்தை வீசி விளையாடுவதைப் பார்த்தார். மற்றப் பையன்களும் சேர்ந்து குதூகலமாக விளையாடுவதையும் கண்டார். ஏதோ பெரிய பாரத்தை இறக்கி வைத்தவர்போலப் பெருமூச்சு விட்டார். அவர் முகத்தில் சிறிது ஒளி படர்ந்தது. அப்படியே திண்ணையில் உட்கார்ந்து பந்து விளையாட்டைப் பார்ப்பதிலே லயித்துப் போனார்.

# கதையும் கத்திரிக்காயும்

பாட்டி கதை சொல்வதில் இணையற்றவள். குழந்தைகளுக்குக் கதை சொல்வதில் மாத்திரம் அல்ல; பெரியவர்களுக்கும் கதை சொல்லி அவர்கள் உள்ளத்தை எங்கேயாவது அனுப்பிவிடுவாள். தலைமுறையாக வந்த கதைகளை அவள் தன்னுடைய கைச்சரக்கையும் சேர்த்து மெருகு கொடுத்துச் சொல்லும்போது யாராக இருந்தாலும் சரி, வாயில் ஈப்புகுந்தது தெரியாமல் கேட்டுக்கொண்டிருக்கத்தான் வேண்டும். அவன் எவ்வளவு முரட்டாத்மாவானாலும் சரி, பாட்டிக்கு முன்னிலையில் மரப்பாச்சியைப் போல அடங்கி ஒடுங்கித் தன் நினைவையே இழந்து உட்கார வேண்டியதுதான்.

அவள் அப்பொழுதப்பொழுது தன்னுடைய உள்ளத்துக்குக் கற்பனைச் சிறகைப் பூட்டிப் பறக்கவிடுவாள். அவளிடமிருந்து வரும் கதைகளை அப்போது பார்க்க வேண்டும்! வானுலகத் தேவரையும், நாகலோகத்து மகளிரையும் பிணைத்துவிடும். மலைக்குகையின் பூதத்தையும் ஆழ்கடலின் திமிங்கிலத்தையும் சண்டைக்கு இழுக்கும். அடர்ந்த வனத்தின் மோகினிகளையும் பூலோக ராஜ குமாரர்களையும் இணைந்து குரவையாடச் செய்யும்.

அவளுடைய பூஜை புரஸ்காரங்கள், நேமநிஷ்டைகள், சுசிருசிகள், ஆசாரசீலங்கள் ஆகியவைகளைப் பார்த்தால் பெண்ணுருவத்தில் எழுந்தருளியிருக்கும் பெருந்தவ முனிவர் என்றுதான் சொல்ல வேண்டும். அந்தக் காலத்து ஔவைப் பாட்டி இப்படித்தான் இருந்திருப்பாளோ, என்னவோ!

பாட்டிக்குத் தெய்வபக்தி அதிகம்; வேதாந்தக் கொள்கைகளிலே பற்றுடையவள். உலகத்தில் அவள் பார்த்துச்

சந்தோஷிக்க வேண்டிய காட்சிகளை எல்லாம் பார்த்தா யிற்று. வாழ்க்கையில் அவளுக்கு ஒரு குறைவும் இல்லை.

வயசு எண்பதுக்குமேல் ஆகியும் பாட்டியின் திடத் திற்குக் குறைவில்லை. பேச்சு வெடுக்கு வெடுக்கென்று வரும்போது அவளுடைய பேத்திகூட நாணமடைய வேண்டும். இந்தக் காலத்து நோஞ்சான்களைப்பற்றி அவள் பரிகாசம் பண்ணிக் கேட்கவேண்டும்: எத்தனையோ ரஸ மாக இருக்கும். உள்ளதைத்தான் சொல்வாள்; ஆனல் சொல்லும் தோரணையிலே ஒரு தனிச் சுவை படர்ந் திருக்கும்.

பாட்டிக்கு ஆசை அதிகம் இல்லை; வாய்க்கு ருசியான பதார்த்தங்களில் மாத்திரம் இன்னும் சபலம் போகவில்லை. அவைகளிலும் கத்திரிக்காய் என்றால் அவளுக்குப் பிரா ணன். ஊரில் யார் வீட்டில் கத்திரிக்காய் சமைத்தாலும் முதல் நைவேத்தியம் அவளுக்குத்தான். அந்த நிவே தனத்திற்குக் கைமேல் பலன் கிடைத்துவிடும். அருமையான கதை ஒன்று அவள் திருவாக்கிலிருந்து அன்று உதய மாகும்.

அவளுடைய பேரன் எங்கேயோ ஒரு கத்திரிச்செடி வாங்கிவந்து தன் வீட்டில் நட்டான். “பாட்டி, இந்தச் செடி காய்க்கட்டும்; உனக்கு இளம் பிஞ்சாக அப்படியே பறித்துவந்து கறி பண்ணிப் போடச் சொல்லுகிறேன்” என்று அவன் சொல்வான். அப்பொழுது பாட்டியின் நாக்கில் நீர் சுரக்கும். தன் பேரன் கையால் நட்ட கத்திரிச் செடி காய்த்துக் கறி பண்ணிச் சாப்பிடவேண்டுமென்ற ஆசை அவள் மனசில் இடங்கொண்டது. அதுவரையிலும் இல்லாத சபலம் அவளுக்கு உண்டாயிற்று. இந்த உலகத் தில் வேறு ஒரு பொருளும் சுவை உடையதாகத் தோன்ற வில்லை. அவ்வளவு தூரம் அவளுடைய ஆசை ஓங்கி நின்றது.

கத்திரிச்செடி தளிர்த்து இலை விட்டது; தளதள வென்று வளர்ந்தது. ஆனல் அந்தச் செடி வந்த வேளை

நல்ல வேளையாகத் தோன்றவில்லை. என்றைக்குப் பேரன் அதைக் கொண்டுவந்து நட்டானே அன்றைக்கே என்றும் இல்லாதபடி பாட்டிக்குக் கொஞ்சம் தலைவலி உண்டாயிற்று. தன் வாழ்நாளில் பற்று அரைத்துப் போட்டுக்கொண்டவள் அல்ல அவள். தலைவலியைப் பொறுத்துக்கொண்டிருந்தாள். மறுநாள் தலைவலி கொஞ்சம் படிமானத்துக்கு வந்தது; ஆனால் உடம்பு சுடத்தொடங்கியது. ஜ்வரம் வந்திருக்கிறதென்று அவள் தெரிந்துகொண்டாள். வயசு காலத்தில், வியாதியே வராதவர்களுக்கு ஏதாவது நோய் வந்தால் அது நல்ல காலத்திற்கல்ல என்பதைப் பாட்டி எவ்வளவோ பேருக்கு எடுத்துச் சொல்லியிருக்கிறாள். இப்போது அவள் விஷயத்திலேயே அந்த விதியைப் பொருத்திப் பார்க்கும் காலம் வந்துவிட்டது.

தனக்கு உடம்பு சரியில்லாமல் இருப்பது அவளுக்குக் கவலை கொடுக்கவில்லை. அவள் கைலாச யாத்திரை செய்யத் தயாராகவே இருந்தாள். நிச்சயமாகத் தனக்குக் கைலாசத்தில் ஓர் இடம் உண்டு என்பதிலும் அவளுக்குச் சந்தேகம் இல்லை. ஆனால், தன்னுடைய அருமைப் பேரன் நட்டுவளர்த்த கத்திரிச்செடி காய்த்து, அந்தக் காயைத் தின்னமல் உயிர்விட அவளுக்கு இஷ்டமில்லை. தின்றுவிட்டே சாகவேண்டும் என்று, சிவபெருமான் திருநாமத்தைச் சொல்லிச் சங்கற்பம் செய்துகொண்டாள். எவ்வளவோ பேர்களைக் கதை சொல்லி மயக்கும் தந்திரம் வல்ல அவள், யமகிங்கரர்களையும் கதை சொல்லி மயக்கலாம் என்று எண்ணினாள். ஆனால் அதற்குமுன், தன் உயிரைக் கொண்டு போக வரும் கூற்றுவன் தன் கண்ணுக்குத் தெரியவேண்டுமே! சிவபக்தர்களுடைய கண்ணுக்குக் காலன் புலப்படுவான் என்பதை அவள் கேட்டிருக்கிறாள். சிவநாமத்தை மூச்சுவிடாமல் கோடிக்கணக்காக உருவேற்றின பாட்டி சிவபக்தைகளில் முன்நிற்கக் கூடியவளாயிற்றே. சிவபிரான் தன்னைக் கைவிட மாட்டார் என்ற திண்ணிய எண்ணம் அவளுக்கு இருந்தது. மேலும் சிவநாமத்தை ஜபிக்கத் தொடங்கினாள்.

கத்திரிச்செடி நன்றாகத் தழைத்து வளர்ந்து பூ விட்டது. பூ உதிர்ந்து கடுகளவு பிஞ்சாக இருந்தது. "இன்னும் ஒரு வாரத்துக்குள் கத்திரிப் பிஞ்சைக் காணலாம், பறிக்கலாம், கறி சமைக்கலாம்" என்று பேரக் குழந்தை ஜபம் பண்ணாத வேளை பார்த்துப் பாட்டியின் காதில் ஓதி வந்தான்.

கத்திரிக்காய் காய்ப்பதற்கு முன்பே யமதர்மராஜனே பாட்டியைத் தேடிக்கொண்டு வந்துவிட்டான். மகா சிவபக்தையாகிய பாட்டியை அழைத்துப்போகக் காலதூதர்களை ஏவக்கூடாதென்று எண்ணி அவனே நேரில் ஒரு நாள் இரவு வந்து சேர்ந்தான். பாட்டியின் ஜபம் பலித்தது. அதாவது யமதர்மராஜாவை அவள் தன் கண்ணால் பார்க்கும் சக்தியை அடைந்தாள். அவன் வந்து நின்றதைப் பார்த்த பாட்டிக்கு மனசுக்குள் கொஞ்சம் அச்சம் உண்டாயிற்று. எத்தனையோ கடுமையான நரக தண்டனைகளைப் பற்றியும், யமகிங்கரர்களைப் பற்றியும் கதை சொல்லிச் சொல்லி அவர்களைப்பற்றிய பயம் அவளுக்கு இல்லாமல் போய்விட்டது. ஆகவே அவள் ஒரு கணம் திகைத்தாலும் மறுகணம் சிவநாமத்தை உச்சரித்துக்கொண்டே தைரியத்தை அடைந்தாள்.

"வாராய் யமதர்மராஜனே!" என்ற குரலைக் கேட்டுக் கூற்றுவன் திடுக்கிட்டான். பூவுலகத்தில் உள்ளவர்களின் ஊனக் கண்களுக்கு அவனைப் பார்க்கும் சக்தி ஏது? சாவித்திரிக்கு மாத்திரம் அந்த ஆற்றல் இருந்தது. சாவித்திரியின் ஞாபகம் யமதர்மராஜனுக்கு வந்தவுடன் உடல் குலுங்கியது. 'அந்தப் பெண் என்னைத் தர்மசங்கடத்தில் மாட்டிவிட்டாள். உலகம் உள்ளளவும் என் அறியாமையையும் தன்னுடைய சாமர்த்தியத்தையும் நிலவும்படி செய்துவிட்டாள்' என்று எண்ணும்போதுதான் யமதர்மனுக்குத் தன்னைக்காட்டிலும் பெரியவர்கள் பூலோகத்தில் வாழும் மனுஷ ஜாதியிலும் இருக்கிறார்கள் என்ற ஞாபகம் வந்தது.

"இந்தப் பாட்டி மார்க்கண்டேயர், சாவித்திரி முதலியவர்களின் இனத்தைச் சேர்ந்தவளா, என்ன?" என்று அலட்சிய புத்தியோடு புன்முறுவல் பூத்தான்.

"தர்மராஜன் என்னும் பெயருக்கு ஏற்றபடி மந்தஹாஸ முகத்தோடு தரிசனம் தரும் உன் கருணையை நான் எப்படிப் புகழ்வேன்!" என்றாள் பாட்டி.

'நம்முடைய சிரிப்புக்கு வியாக்கியானம் அல்லவா செய்கிறாள்?' என்று எண்ணி உதட்டை இறுக மூடிக் கொண்டான் யமதர்மன்.

"ஹே சூரியகுமார, சிவபெருமானுடைய அம்சம் உன்னிடம் இருக்கிறதென்பதை உன்னுடைய மௌனத்தாலும் தெளியவைக்கும் அருமையை நான் பாராட்டாமல் இருக்க முடியுமா?"

தர்மராஜனுக்குச் சங்கடமாகப் போய்விட்டது. தன் கையினால் தன் வாகனமாகிய எருமைக்கடாவின் பிடரின் மேல் ஒரு தட்டுத் தட்டினான். ஒன்றும் பேச இயலாமலும் செய்ய இயலாமலும் போன நிலையில் அதைத்தான் அவன் செய்ய முடிந்தது.

"உன்னுடைய இங்கிதத்தை அடியேன் நன்றாகத் தெரிந்துகொண்டேன். உன் வாகனத்தைத் தட்டி அதற்கு நீ உற்சாகத்தை மூட்டுகிறாய். தர்மஸ்வரூபமாகிய உனக்கு உள்ள வாகனம் வேகம் வேண்டிய பொழுது வேகம் காட்டும்; சாந்தம் வேண்டுமானால் சாந்தத்தை உடையதாக விளங்கும். அதனுடைய சாந்த அவசரத்தில் உண்டாகியவைகளைத்தான் இன்று பூவுலகத்தில் பார்க்கிறோம். பொறுமைக்கும், சாந்தத்திற்கும், எது எதிர்வந்தாலும் லட்சியம் செய்யாத உறுதிக்கும் இருப்பிடமாகப் பூலோக மனிஷ ஜாதி இருப்பதை நாங்கள் பார்க்கிறோமே!"

யமனுக்குச் சிரிப்பு வந்தது; ஆனாலும் அடக்கிக் கொண்டான். அவன் கைகள் பாசத்தைத் தொட்டன.

"இந்த மகிஷ மகாவாகனத்தைக் கண்டவுடன் எனக்கு அருமையான கதை ஒன்று ஞாபகத்துக்கு வருகிறது. முட்டாளான ராஜகுமாரன் மகிஷ வாகனத்தின் மகிமையால் பரமரூப செளந்தரியவதியாகிய ஒரு நாரீமணியைக் கல்யாணம் செய்துகொண்டான். அவனுக்கு வந்த பாக்கியம் அவ்வளவும் அந்த மகிஷ வாகனத்தினுல்தான். உன்னுடைய வாகனத்தைத் தரிசிக்கும்போது எனக்கு அந்தக் கதை ஞாபகத்துக்கு வருகிறது. சாமான்யமான மகிஷத்துக்கே அவ்வளவு பெருமை என்றால் மகா சக்திமானுகிய உன் வாகனத்துக்கு எவ்வளவு பெருமை இருக்கவேண்டும்!"

கீழே எதையோ பார்த்துக்கொண்டிருந்த மகிஷ வாகனம் பாட்டியின் வார்த்தைகளைக் கேட்டு நிமிர்ந்தது. அதற்கு உள்ளுக்குள்ளே சந்தோஷம் பொங்கியது. யமதர்மராஜன் கையிலிருந்து பாசம் தானே நழுவியது. மீட்டும் ஒரு தடவை தன் வாகனத்தின் பிடரின்மேல் தட்டினுன்.

"ஆமாம்; அந்த ராஜகுமாரன் நல்ல நாயகியை அடைந்தான்; மகிஷவாகனத்திலிருந்து ஆரம்பிக்கிறது கதை. மிகவும் சுவாரஸ்யமான கதை. முட்டாள் என்றால் சாமான்ய முட்டாளா? சுந்தரி என்றால் சாமான்யமான அழகியா?"

தென்றிசைத் தலைவன் தன் தொழிலை மறந்தான். பாட்டியின் வார்த்தைகள் அவன் காது வழியே சென்று உள்ளத்தே ஒரு தினவை உண்டாக்கின. கதையைக் கேட்க வேண்டும் என்ற ஆசை எழுந்தது.

"ஹும்! அந்த ராஜகுமாரன் யார்? அவன் எப்படி அந்த அழகியை அடைந்தான்?" என்ற கம்பீரமான தொனியால் வைவஸ்வதன் கேட்டான்.

பாட்டி, "பாக்கியம்! உன் திருவாக்கால் கேட்கும்போது கதையைச் சொல்லாமல் இருக்கலாமா? இதோ சொல்லுகிறேன்" என்று ஆரம்பித்துவிட்டாள்.

## 2

அளகாபுரி அளகாபுரி என்ற பட்டணத்தில் அள கேசன் அளகேசன் என்ற அரசன் அரசாட்சி புரிந்து வந்தான். தர்ம நியாயம் தவறாமல் ராஜ்யபரிபாலனம் செய்து வந்தாலும் அவன் பூர்வ ஜன்மத்தில் எருமைக் கடாவுக்குத் தீனி போடாமல் வதைத்தமையால் புத்திர பாக்கியம் இல்லாமல் பல காலம் தவம் செய்தான். கடைசி யில் சிவபிரான் திருவருளால் ஒரு புத்திரன் பிறந்தான். அவன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தாலும் அக்ஷராப்பியாசம், யானையேற்றம், குதிரையேற்றம் முதலாகிய ராஜகுமாரனுக்கு ஏற்பட்ட காரியங்களில் மனசு போகாமல், சாப்பிடுவதும் தூங்கு வதுமாகவே காலத்தைப் போக்கிவந்தான். ராஜலக்ஷணத் தில் ஒன்றும் குறைவில்லாமல், கண்டோர் கருத்தை வசீ கரிக்கும் வடிவமுள்ளவனாக இருந்தும், அஸ்திர சஸ்திர வித்தைகளில் பயிற்சி இல்லாமல் பெண் பிள்ளையைப் போல அந்தப்புரத்திலே உள்ள வேலைக்காரிகளோடு விளை யாடிக்கொண்டே நாள் முழுவதும் கழிக்கலானான்.

தவம் செய்து பெற்ற பிள்ளை இப்படிச் சாதுவாகவும் சுறுசுறுப்பு இல்லாதவனாகவும் இருப்பதைக் கண்ட அள கேசன் என்னும் மன்னனுக்கு வரவரக் கவலை அதிகரித்து வந்தது. "இந்தப் பிள்ளையால் நம்முடைய குலம் விளங் கும் என்று நினைத்தோமே; ராஜவம்சத்தில் பிறந்தும் அதற்கேற்ற வீரம் இல்லாமல் இருக்கிறானே! இவன் போருக்குப் போகாவிட்டாலும் ராஜ்யபாரத்தையாவது வகிப்பானா? வகிப்பானென்று தோன்றவில்லையே! இவன் வகிக்காவிட்டாலும் இவனுக்கு மதியூகியாகிய பெண் ஒருத்தியை விவாகம் செய்து வைத்து அவள் மூலமாக ராஜகாரியங்கள் நடைபெறும்படி செய்யலாம் என்றாலோ, இவனை விரும்பி வரும் பெண் யார் இருக்கிறாள்? ஆள் அழகனாக இருந்து என்ன பிரயோஜனம்? ஆண்மை இல் லாதவனை ஆண் என்று எப்படிச் சொல்வது?'' என்று

பலவாறாக அங்கலாய்த்துத் துக்காக்கிராந்தனாக இருந்தான் அந்த அரசன்.

ஒரு நாள் அரண்மனை ஜோசியனை அழைத்துத் தன் குமாரன் ஜாதகத்தைப் பார்க்கச் சொன்னபோது, அந்த ஜோசியன் வேந்தன் மனம் குளிரும்படி நம்பிக்கையூட்டும் சில வார்த்தைகளைச் சொன்னான்.

“அரசே, இந்தப் பிள்ளையினால் இந்த ராஜ்யத்துக்கு ஒரு பெரிய லாபம் உண்டாகப்போகிறது. சாக்ஷாத் லக்ஷ்மீ தேவியைப் போன்ற பெண்மணி ஒருத்தி இவனுக்குப் பட்டமகிஷியாக வாய்ப்பாள். ஆனால் ஒரு விஷயத்தை மாத்திரம் நான் மகாராஜாவுக்கு வியக்தமாகச் சொல்லா விட்டால் பெரிய அபராதி ஆகிவிடுவேன். பதினெட்டு வயசுக்குப் பிறகு இவன் தனியே இந்த நகரத்திலே இருப்பானானால் பைத்தியம் பிடித்துவிடும். பெண் துணையின்றி இந்த நகரத்தில் இவன் உலாவுவது அபாயத்தையே விளைவிக்கும்” என்று ஜோசியன் சொல்லிவிட்டுப் போனான்.

அரசனுக்கு ஒரு விதத்தில் சந்தோஷம் ஏற்பட்டாலும் மற்றொரு விதத்தில் மிகுந்த கவலை உண்டாயிற்று. ‘பதினெட்டு வயசுக்குப் பிறகு இவன் தனியே இங்கே இருக்கக் கூடாதென்றால், இவனுக்கு ஒரு மணமகளைத் தேடிக் கொண்டு வந்து கல்யாணம் செய்வதா? அல்லது இவனையே ஊரை விட்டு ஓட்டிவிடுவதா? என்ன செய்வதென்று விளங்கவில்லையே! இந்த மடையனை விரும்பிக் கல்யாணம் செய்துகொள்ள இங்கே யார் தேடிக்கொண்டு வருவார்கள்? இவன் ஊரை விட்டுப் போனால் இவனுடைய முட்டாள்தனம் உலகம் முழுவதும் பரவும்படி அல்லவோ இவன் நடந்துகொள்வான்? இந்தச் சங்கடத்திற்கு என்ன செய்வது?’ என்று பலபல யோசனைகளில் ஆழ்ந்து தவித்தான். கடைசியில் பரமசிவன் விட்டபடியே நடக்கட்டும் என்று தீர்மானித்தான்.

தன் குமாரனை அழைத்து, “அப்பா, நீ சில காலம் தேசாடனம் செய்து வந்தால் நல்லது. அங்கங்கே உள்ள

அதிசயங்களை எல்லாம் கண்டு வரலாம். உனக்கு என்ன வாகனம் வேண்டுமோ அதையும், என்ன பொருள் வேண்டுமோ அதையும் கொண்டு போகலாம். துணைக்கு எவ்வளவு பேர் வேண்டுமோ அவ்வளவு பேரை அழைத்துக் கொண்டு போ'' என்று அளகேசன் சொன்னான்.

ராஜகுமாரன் அதைக் கேட்டுச் சிரித்தான். "நான் இந்த ஊரை விட்டுப் போக வேண்டும் என்று சொல்கிறீர்களோ? அதெல்லாம் முடியாது. வாகனம், கீகனம் எல்லாம் எனக்கு எதற்கு? எனக்குத்தான் ஏறி ஓட்டத் தெரியாதே'' என்றான்.

"அப்படி அல்ல குழந்தாய்; உனக்குக் கல்யாணம் ஆகும் வயசு வந்துவிட்டது. பூலோகத்தில் எவ்வளவோ ராஜகுமாரிகள் இருக்கிறார்கள். அவர்களுக்குள் மிகவும் அழகுடைய ஒருத்தி உனக்கு மனைவியாக வருவாளென்று சோதிடர்கள் சொல்கிறார்கள். நீ அவளைத் தேடிக்கொண்டு போனால் அவளை நீ அடையலாமாம்'' என்று அரசன் சொன்னான்.

கல்யாணம் என்ற பேச்சு வந்தவுடன் ராஜகுமாரனுக்கு உற்சாகம் உண்டாயிற்று. "அப்படியானால் நான் இன்றைக்கே புறப்படுகிறேன். எனக்கு யானை, குதிரை முதலிய வாகனங்களைக் கண்டால் பயமாக இருக்கிறது. பல்லக்கில் போகலாம். ஆனால் பெண்டாட்டியைத் தேடிக் கொண்டு போகும் என்னோடு வேறு யாரும் வரக்கூடாது. பல்லக்குச் சுமக்கும் ஆள் கூடக் கூடாது. அவர்கள் வந்தால் என் ராணியோடு பேசுவதற்கு எனக்கு வெட்கமாக இருக்கும். மாட்டு வண்டியாக இருந்தால் நல்லது. காளை மாடு என்றால்கூட எனக்குப் பயமாக இருக்கிறது. கூடில்லாத மொட்டை வண்டியில் இரண்டு எருமைக் கடாக்களைப் பூட்டித் தாருங்கள். அந்த வாகனமே எனக்குப் போதும். எனக்கு வேண்டிய பணமும் உணவுப் பொருளும் கொண்டுபோகிறேன்; வேறு ஒன்றும் வேண்டாம்;

துணைக்கு ஒருவரும் வேண்டாம்" என்று ஆசை ததும்பக் கூறினான் ராஜகுமாரன்.

அளகேச ராஜனுக்குச் சிரிப்பு வந்தது. "மகிஷ வாகனந்தானா இவனுக்குப் பிரியமானது?" என்று இகழ்ந்தான். வேறு வழி இல்லாமையால் பரமசிவனைத் தியானித்துக்கொண்டு, ராஜகுமாரன் சொன்னபடியே அவன் பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான். நல்ல நாள் ஒன்று பார்த்துப் பிரயாணத்தை ஆரம்பிக்கச் சொன்னான். அன்றைக்கு அரசன் மிகவும் கவலையோடு தன் குமாரனைத் தழுவிக்கொண்டு அவன் கையில் ஒரு விபூதிப் பையைக் கொடுத்து, "குழந்தாய், உனக்கு யாரும் துணை வேண்டாம் என்று சொல்லிவிட்டாய். பரமசிவன்தான் உனக்குத் துணையாக இருக்கவேண்டும். இந்தப் பையிலுள்ள விபூதியை அடிக்கடி நெற்றியில் இட்டுக்கொள். சிவநாமத்தை அடிக்கடி சொல். அதிகமாக யாரிடமும் பேச்சுக் கொடுக்காதே" என்று புத்திமதி கூறி வழி அனுப்பினான்.

ராஜகுமாரன் எருமை மாடு பூட்டிய மொட்டை வண்டியில் புறப்பட்டான். அந்தத் தேசத்தில் உள்ளவர்கள் தங்கள் ராஜகுமாரன் இந்த அருமையான ரதத்தில் ஆரோகணம் செய்து வருவதைப் பார்த்துப் பரிகாசம் செய்தார்கள். ஆனாலும் அந்த ராஜகுமாரனுடைய இயல்பை முன்பே அறிந்தவர்களாகையால் அதில் ஒன்றும் ஆச்சரியம் தோன்றவில்லை. ராஜகுமாரன் தன் நெற்றியில் அழிந்த போதெல்லாம் விபூதியை இட்டுக்கொண்டும், சிவநாமத்தை உச்சரித்துக்கொண்டும் உல்லாஸமாகப் பிரயாணம் செய்தான். எருமைக்கடாக்களை உசுப்பிச் சில சமயங்களில் சிறிது வேகமாக ஓட்டினான்; பல சமயங்களில் அந்தப் பிராணிகள் போகும் போக்கிலே விட்டான். எந்தத் திக்கில் போகிறோம், எந்த ஊருக்குப் போகிறோம் என்ற கவலையே இல்லாமல் ராஜகுமாரன் மகிஷ ரதத்தில் போய்க்கொண்டிருந்தான்.

'நமக்கு அழகியான பெண்மணி ஒருத்தி கிடைக்கப் போகிருள்' என்ற ஆசை ஒன்றே அவனைச் சிறிதும் கவலைப்படாமல் வைத்தது. 'அழகி எங்கேயிருந்து வருவாள்? எப்படி வருவாள்?' என்பதைப்பற்றி எல்லாம் அந்த அறிவிலி யோசிக்கவில்லை. ஒரே குருட்டுப் போக்காக மகிஷவாகனங்களை முடுக்கிக்கொண்டும், இடையிடையே ஆகாரப் பொருள்களை விழுங்கிக்கொண்டும், அங்கங்கே கிடைத்த பழத்தையும் சிற்றுண்டியையும் விலை கொடுத்து வாங்கிக்கொண்டும் அவன் தன் உல்லாஸ யாத்திரையை நடத்திஞன். எருமைக் கடாக்களுக்கும் குறைவில்லாமல் வேண்டிய தீனி வாங்கிவைத்தும், மாலை நேரங்களில் அவிழ்த்துவிட்டும் பாதுகாத்தான்.

சில நாட்கள் ஆயின. அளகேசனுடைய நாட்டைத் தாண்டி வேறு தேசத்துக்குப் போய்விட்டான். நல்ல அழகான வடிவங்கொண்ட அவனைப் பார்த்தவர்கள் யாவரும் மயங்கிஞர்கள்; ஆனுல் அவன் எருமைக்கடா வண்டியை ஓட்டிச் செல்வது பொருத்தமாகத் தோன்றவில்லை.

'இந்தச் சுந்தர புருஷனைப் பார்த்தால் யாரோ ராஜகுமாரன் மாதிரி இருக்கிறது; ராஜ களை வடிகிறது இவன் முகத்தில். இவன் பஞ்சகல்யாணிக் குதிரையில் ஏறப் பிறந்தவன்; இந்த எருமை வண்டியில் வருகிருனே! என்ன தோஷமோ! யார் செய்த வினையோ! மாற்றுந்தாய் செய்த வஞ்சனையோ!' என்று ஜனங்கள் எண்ணிஞர்கள். கூட்டம் கூட்டமாக வந்து அவனைப் பார்த்தார்கள். பலர் பழம், பால் முதலிய பண்டங்களைக் கொண்டுவந்து தந்தார்கள்.

ராஜகுமாரன் தன் தகப்பஞர் சொன்ன உபதேசங்களைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண் டிருந்தான். யாரிடமும் அதிகமாகப் பேசவில்லை. சிவநாமத்தை மாத்திரம் உச்சரித்துக்கொண் டிருந்தான். அவனை அணுகினவர்களெல்லாம் அவன் அடிக்கடி சிவநாமத்தை உச்சரிப்பதையும் திருநீற்றைப் பூசுவதையும் கண்டு, "இவன் பெரிய

மகானாக இருக்கவேண்டும். தன் தேசத்தைத் தியாகம் செய்துவிட்டு வந்திருக்கிறான். ஆனால் இந்த வண்டியை ஓட்டிக்கொண்டு வருவதற்குக் காரணந்தான் விளங்க வில்லை. என்ன விரதமோ? என்ன சங்கற்பமோ? மகான் களுடைய போக்கே அலாதியானது'' என்று சொல்லிக் கொண்டார்கள். "அதிகமாகப் பேசாமல் இவன் போகி றான். நிச்சயமாக இவன் ஏதோ பெரிய காரியத்தைச் சாதிக்கப் போகிறான். நம்மைப்போன்ற மூடப் பிணங்களே சளசளவென்று பேசிக்கொண் டிருக்கும்'' என்று சிலர் சொன்னார்கள். பலர் அவன் போன வண்டிச் சுவட்டின் மண்ணை எடுத்துத் தரித்துக்கொண்டார்கள். இப்படியாக அவன் தன் நாட்டை விட்டுத் தூரப் பிரதேசத்திற்கு வர வர, ஜனங்களுக்கு அவனிடம் மதிப்பும் பயபக்தியும் உண்டாயின. அவன் அவற்றை யெல்லாம் கவனிக்கவே இல்லை. தன்னைத் தேடி வரும் அழகியைக் காணும் ஆசையை உள்ளத்தில் இருத்தி, திருநீற்றையும் சிவநாமத் தையும் கைவிடாமல் போய்க்கொண்டே இருந்தான்.

## 3

சிவபுரி, சிவபுரி என்று ஒரு பட்டணம். அந்தப் பட்டணத்தில் சைவசீலன் என்ற ராஜா ராஜ்ய பரிபால னம் பண்ணிக்கொண்டு வந்தான். அவன் பெரிய சிவபக் தன். அவனுடைய ராஜ்யத்தில் சிவனடியார்களுக்கு மதிப்பு அதிகம். சிவநாமம் சொல்கிறவர்களானால் அவர் கள் செய்யும் குற்றத்தை மன்னித்துவிடுவான். அவனுக் குச் சிவகாம சுந்தரி என்று ஒரே பெண்; சர்வாங்க சுந்தரி யாகவும், சாதுர்ய புத்தி படைத்தவளாகவும் இருந்தாள். அவளுடைய அழகுக்கும் அறிவுக்கும் ஏற்ற புருஷனைத் தேடிக் கல்யாணம் செய்துவைக்க வேண்டுமென்று சைவ சீலன் நினைத்தான். அதற்காக எவ்வளவோ தேசத்து ராஜ குமாரர்களுடைய படங்களையெல்லாம் வருவித்துப் பார்த் தான். ஒருவனாவது அவன் மனசுக்குத் திருப்தி அளிப் பவனாக இல்லை. நல்ல சுந்தர புருஷனாகவும் சிவபக்தனாக

வும் இருக்கவேண்டும் என்பது அவனுடைய எண்ணம். அந்த எண்ணம் ஒன்றும் சரியானபடி நிறைவேருமையால் கவலேயோடு இருந்து வருகையில் ஒரு நாள் ஒரு பெரிய வர் அவனிடம் வந்தார். அவன் முகக்குறிப்பைக் கண்டு, "ஹே மகாராஜ, நீ கவலேப்படாதே. உன் மருமகன் உன் நாட்டைத் தேடிக்கொண்டு வருவான். அழகு, சிவபக்தி, அறிவு என்னும் மூன்று யோக்கியதையை நீ அவனிடம் எதிர்பார்க்கிருய். உலகத்தில் எல்லாம் ஒருங்கே சேர்வது துர்லபம். ஆகையால் உன்னுடைய மருமகனுக்கு அந்த மூன்றில் இரண்டு இருக்கும். அதனுல் குறை ஒன்றும் இல்லே. உன்னுடைய புதல்வி அவனே வசப்படுத்திக் கொள்வாள்" என்று சொல்லிப் போய்விட்டார். அது முதல் அவன் ஒருவாறு கவலே நீங்கிக் கடவுளின்மேல் பாரத்தைப் போட்டுவிட்டுத் தன் மகளுக்கேற்ற கணவன் வரும் நாளே எதிர்பார்த்துக்கொண் டிருந்தான். பெரியவர் சொன்ன செய்தியை அறிந்த சிவகாமசுந்தரியும் தன் மணுளன் இன்று வருவான், நாளே வருவான் என்று எதிர் பார்த்துக்கொண்டு இருந்தாள்.

இப்படியாக அவர்கள் எதிர்பார்த்துக்கொண் டிருக் கிற காலத்தில், மகிஷ ரதத்தில் வரும் ராஜகுமாரன் அந்த ஊருக்கு வந்து சேர்ந்தான். அவனே மகானுகவும், சிவபக்த சிரோமணியாகவும் எண்ணிய ஜனங்கள் சைவசீல னுக்கு அவன் வரவைத் தெரிவித்தார்கள். இவ்வரசன் அந்த மகிஷ ரத ராஜகுமாரனே எதிர்கொண்டழைத்து உபசரித்தான். அவனே யார் வீட்டிற்கும் செல்லாமல் எங்கும் தங்காமல் போய்க்கொண்டே இருப்பவனுகையால் அரண்மனைக்குச் செல்லவில்லே. அரசன் மாத்திரம் வந்து பார்த்துவிட்டு அரண்மனே சென்று தன் குமாரியை அந்த ராஜகுமாரனேப் பார்த்து வரும்படி அனுப்பினுன்.

வண்டி மெதுவாகப் போய்க்கொண் டிருந்தது. அரச னுக்குரிய பூங்காவனத்துக்குப் பக்கத்தில் உள்ள சாலே வழியே போகும்போது அங்கிருந்து ராஜகுமாரி தன்

சேடிகளுடன் சாலேக்கு வந்தாள். ராஜகுமாரனுடைய ரூபசௌந்தரியத்தைக் கண்டதும் அவள் யாருக்காகக் காத்திருக்கிறளோ, அந்தப் புருஷசிங்கம் அவன்தான் என்று தெரிந்துகொண்டாள். உடனே அவள் தன் சேடிகளையெல்லாம் அனுப்பிவிட்டுத் தன்னந் தனியே அந்த வண்டியை அணுகினாள்.

"ஹே மகாநுபாவ!" என்று குயில் போன்ற தொனியில் அழைத்துக்கொண்டே வண்டிக்கு அருகில் சென்றாள். அப்போதுதான் ராஜகுமாரன் தன் தலையைத் திருப்பிப் பார்த்தான். தன்னுடைய லாவண்யம் ஜோதி வீசிக் கண்டோர் கருத்தை அழியும்படி செய்ய, பூங்கொடி போலச் சர்வாங்க சுந்தரி ஒருத்தி நிற்பதைக் கண்டான். அவன் உள்ளத்திலே என்றும் இல்லாத தண்மை, அமுதம் பெய்தாற்போல உண்டாயிற்று. "சிவ, சிவ" என்ற நாம சப்தத்தோடு அவளை ஏறெடுத்துப் பார்த்தான்.

"ஹே சுந்தர குமார, என்ன ஆச்சரியம்! தாங்கள் வீற்றிருக்கும் இந்த நிலை தங்களுடைய சிவபக்தித் திறத்தை விசதமாகத் தெரிவிக்கிறது. நானும் எவ்வளவோ சிவபக்தர்களைக் கண்டிருக்கிறேன். ஆனாலும் இப்படி ஒருவரைக் கண்டதில்லை. உங்கள் வாகனங்கூட உங்கள் சிவபக்தியை விளக்குகின்றதே!" என்று சொல்லி அவனிடமிருந்து விடை வருவதற்குமுன் அந்த வண்டியின் பின்பக்கத்தில் ஏறிக்கொண்டாள்.

ராஜகுமாரன் புன்னகை பூத்தான். அவளும் குறுமுறுவல் அரும்பினாள். "சிவ சிவ" என்ற அவனுடைய நாம சப்தத்தோடு, "மகாநுபாவ" என்ற அவள் குரல் ஒன்றியது.

* * *

கதை சொல்லிக்கொண்டே வந்த பாட்டி திடீரென்று நிறுத்திவிட்டாள். அந்த இரவில் மற்றவர்களெல்லாம் தூங்கிக் குறட்டை விட்டுக்கொண் டிருந்தார்

கள். யமதர்மராஜன் பாட்டி சொல்லும் கதையில் ஈடுபட்டிருந்தான். "கதை முடிந்து விட்டதா?" என்று கேட்டான். "முடிவதா? இப்போதுதானே ஆரம்பமாகியிருக்கிறது!" என்றாள் பாட்டி.

"கதையை முடித்துவிடு" என்றான் தர்மராஜன்.

"சிரமமாக இருக்கிறது. நாளைக்கு முடிக்கப் பார்க்கிறேன். உனக்கும் வேலை கொடுக்கிறேன். இவ்வளவு நேரம் கதை கேட்டாயே. சிவகாம சுந்தரி ஏன் ராஜகுமாரனைச் சிவபக்தர்களுக்குள்ளே சிறந்தவனாக எண்ணினாள்? வாகனங்கூட அவன் சிவபக்தியைத் தெரிவிப்பதாகச் சொன்னாளே, எதற்காக?" என்று கேட்டாள்.

"இதுதானா பிரமாதம்?" என்றான் தர்மராஜன்.

"பிரமாதம் அல்ல; இதற்குச் சரியாய் விடை சொல்லிவிட்டால் நீ இப்போதே என் உயிரைக் கொண்டுபோகலாம். இல்லாவிட்டால் நாளைக்கு வந்து பாக்கிக் கதையையும் கேட்டுவிட்டுக் கொண்டுபோகலாம்."

"அவனுடைய சிவநாம ஜபமும் விபூதி தாரணமும் கண்டு சிவபக்தியுடையவனாக நினைத்தாள். மகிஷவாகனத்தின் முகத்திலும் விபூதி அணிந்திருப்பான். அதனால்தான் வாகனத்தால்கூட அவன் சிவபக்தி புலப்படுகிறது என்றாள்" என்று யமதர்மராஜன் பதில் சொன்னான்.

"இதைக் குழந்தைகூடச் சொல்லுமே. இது அல்ல காரணம். யோசித்துப் பார். வேறு காரணம் தெரிகிறதா?"

தர்மராஜன் யோசித்தான்; தெரியவில்லை. "நீயே சொல்லிவிடு, பாட்டி" என்றான்.

"அப்படியானால் இன்றைக்கு என்னை விட்டுவிட்டு நாளைக்கு ராத்திரி வருகிறாயா?"

"அப்படியே ஆகட்டும்."

பாட்டி புதிரை விடுவித்தாள். "அந்த வண்டியில் காளைமாட்டைப் பூட்டுவது வழக்கமாக இருக்க, ராஜகுமாரன் எருமைக்கடாவைப் பூட்டி வந்ததை ராஜகுமாரி பார்த்தாள். காளைமாடு பரமசிவனுக்கு வாகனம் அல்லவா? அதைப் பூட்டி ஓட்டுவது சிவாபராதம் என்று அவன் நினைத்து எருமை மாட்டைக் கட்டிக்கொண்டு வந்தான் என எண்ணி, அவனைச் சிறந்த சிவபக்தனாக நினைத்தாள்" என்றாள்.

"பாட்டி, நான் தோல்வி அடைந்தேன். நீ ஜயித்தாய். உன் இஷ்டப்படியே நாளைக்கு ராத்திரி வருகிறேன். நீ நாளைக்கே கதையை முடித்துவிடவேண்டும்" என்றான் தென்றிசைக்கோன்.

"பார்க்கலாம் அப்பா" என்றாள் பாட்டி. யமன் மறைந்தான்; பொழுதும் விடிந்தது.

4

அடுத்த நாள் ராத்திரி கூற்றுவன் வந்தான். "பாட்டி, வந்துவிட்டேன்" என்று அவள் முன்னே நின்றான்.

"வா, அப்பா, உன் தரிசனம் சாட்சாத் பரமசிவன் தரிசனத்தைப் போல இருக்கிறது. ஆனால் அவன் கருணாமூர்த்தி; தர்மமே ரிஷபமாக உடையவன். நீயோ லோகத்துக்கு அச்சத்தை உண்டாக்குபவன்; காரெருமை வாகனம் உடையவன். மற்றப்படி காலனாகிய உனக்கும் மகாகாலனாகிய அவனுக்கும் வித்தியாசமே இல்லை."

பாட்டி கிண்டல் பண்ணுகிறாளென்று யமன் தெரிந்து கொண்டான். இப்போது அவன் அவளிடம் அகப்பட்டுக் கொண்டானே!

"சரி, சீக்கிரம் கதையை முடி" என்றான் வைவஸ்வதன்.

"சொல்ல ஆரம்பிக்கிறேன்; முடிந்தால் உன் அதிருஷ்டம்" என்று வீறுடன் பேசிக் கதை சொல்லத் தொடங்கினாள் பாட்டி.

கட்டை வண்டியின் பின்னே ராஜகுமாரியும் முன்னே ஏர்க்காலில் ராஜகுமாரனும் உட்கார்ந்து போய்க்கொண்டே இருந்தார்கள். அதிகமாகப் பேசவில்லை. ஆனாலும் ராஜகுமாரனுக்குச் சந்தோஷம் தாங்கமுடியவில்லை. ராஜகுமாரியைத் திரும்பித் திரும்பிப் பார்த்துப் பார்த்து உள்ளம் பூரித்தான். அவள் தன்னைச் சிவபக்தனென்று சொல்லிவிட்டாள் அல்லவா? 'இனிமேல் உண்மையிலேயே சிவபக்தனாக இருக்கவேண்டும். இன்னும் அதிகமாகச் சிவநாம உச்சாரணம் செய்யவேண்டும். திருநீற்றைப் பூசவேண்டும்' என்று எண்ணிக்கொண்டான்.

சிறிது தூரம் போனவுடன் அங்கே ஒரு மைதானம் இருந்தது. மிகவும் பழங்காலத்தில் ஒரு கோயில் அங்கே இருந்திருக்கவேண்டும். இப்போது அது இடிந்துபோய் உடைந்த விக்கிரகங்களும் கற்களுமாகக் கிடந்தன. வண்டி அந்தப் பக்கமாகப் போனபொழுது ராஜகுமாரன் கண்கள் அந்தக் கற்குவியலின் இடையே, ஆவுடையாரினின்றும் கழன்று தனியே கிடந்த சிவலிங்கம் ஒன்றைப் பார்த்தன. அவன் இப்போது உண்மையான சிவபக்தன் அல்லவா? அந்தப் பக்தியைத் தன்னுடன் வரும் மோகினிக்கு இன்னும் அதிகமாக வெளிப்படுத்தினால் எவ்வளவு நன்றாக இருக்கும்!-இந்த எண்ணம் அவன் நெஞ்சத்தில் தோன்றியதுதான் தாமதம்; உடனே கீழே குதித்தான்; விரைவாகச் சென்று அந்த லிங்கத்தை எடுத்து வந்து தன் வண்டியில், ராஜகுமாரிக்கு அருகில் வைத்துவிட்டான். ராஜகுமாரி பார்த்தாள்; "ஹே சர்வாங்க சுந்தர, தங்களுடைய அதிசயமான யுக்தியை நான் மெச்சுகிறேன். தங்கள் திருவுள்ளத்தை நான் உணர்ந்துகொண்டேன். இதோ, தங்கள் கட்டளையின்படியே செய்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே- ராஜகுமாரனுக்குச் சமீபமாக வண்டியின் முன் பக்கத்தில் போய் உட்கார்ந்துகொண்டாள். ராஜகுமாரன் பிரம்மானந்த லாகிரியில் மூழ்கினவனைப் போல் ஆகிவிட்டான்.

பாட்டி இதோடு நிறுத்திப் பெருமூச்சு விட்டாள்.

"ஏன் பாட்டி, அவர்கள் கல்யாணம் செய்துகொண்டார்கள் என்று சொல்லிக் கதையை முடித்துவிடுகிறது தானே?" என்று வந்தது யமதர்மன் குரல்.

"அப்படி இல்லை; கதையை அதன் போக்கிலே விட வேண்டுமே அல்லாமல் நம் போக்கிலே இழுக்கக்கூடாது. இன்னும் கதை இருக்கிறது. கதையில் இது ஒரு கட்டம். இங்கேயும் ஒரு கேள்வி கேட்கிறேன். பதில் சொல்கிறாயா?"

"பார்க்கிறேன்" என்று விநயமாகச் சொன்னான் காலன்.

"பார்ப்பது என்ன? இது சாதாரணமான கேள்வி தான். ஆனால் இதை நீ சொல்லாவிட்டால் இன்னும் இரண்டு நாள் எனக்கு வாய்தா தரவேண்டும். அதாவது நாளைக்கு நீ வரக்கூடாது; அதற்கு அடுத்த நாள் வா; கதை கேட்கலாம்."

"சரி, சரி, கேள்வியைக் கேள், பார்க்கலாம்."

"ராஜகுமாரி ராஜகுமாரனுடைய அதிசயமான யுக்தியை மெச்சுவதாகச் சொன்னாளே, அது என்ன யுக்தி?"

"அதுதான் நீயே சொன்னாயே; அவன் தன் சிவபக்தியைப் பின்னும் அதிகமாக அவளுக்குத் தெரிவிக்கச் செய்த யுக்திதான்."

"இதைப் போய்க் கேட்பேனா? வேறே யுக்தி உண்டு. யோசித்துப் பார்.

"பாட்டி, எனக்குப் பொறுமை இல்லை. ஒரு நாள் தவணை நேற்றுக் கொடுத்தேன். தலைக்குமேல் போனபிறகு சாண் போனால் என்ன? முழம் போனால் என்ன? நாளை போய் மறுநாள் வருகிறேன். கேள்விக்கு நீயே விடை சொல்லிவிடு."

"அப்படி உண்மையிலே தர்மராஜனாக அல்லவா இருக்கவேண்டும்! சரி, நான் சொல்லிவிடுகிறேன். சிவலிங்கம் கல்தானே? அந்தக் கனமான கல்லைக் கொண்டு வந்து வண்டியின் பின்னாலே வைத்தால், ராஜகுமாரியும் சிவலிங்கமும் சேர்ந்து பின்பாரம் அதிகமாகிவிடாதா? வண்டியின் ஏர்க்கால் தூக்கி அடிக்காதா? ஆகவே சிவ லிங்கத்தைப் பின்னால் வைத்தால் ராஜகுமாரி பாரம் சரி யாக இருப்பதற்காக முன்னே நகர்ந்து தன் அருகில் வருவாளென்றும் பின்பாரம் இல்லாமல் அவளை அருகே வருவிப்பது கூடாது என்றும் அவன் நினைத்து அந்தத் தந்திரத்தைச் செய்ததாக ராஜகுமாரி எண்ணி னாள். வாயினால் சொல்லாமல் தந்திரமாகத் தன்னை அருகில் வரச் செய்வதற்கு இப்படி யுக்தி செய்பவன் சாமர்த்திய சாலியாகத்தானே இருக்கவேண்டும்? இதுதான் அவள் அப்படிச் சொன்னதற்குக் காரணம்" என்றாள் பாட்டி.

"பாட்டி, நீ மகா சாமர்த்தியக்காரி. சரி, நான் நாளை நின்று வருகிறேன்" என்று யமன் மறைந்தான். பொழுதும் விடிந்தது.

* * *

மறு நாளுக்கு மறு நாள் இரவு, "இன்றைக்கு எப்படியாவது உன்னை அழைத்துக்கொண்டு போவதாகவே வந்திருக்கிறேன். ஏமாற்றிவிடாதே, பாட்டி!" என்று சொல்லிக்கொண்டே மரணதேவன் பாட்டியின் எதிரே வந்து நின்றான்.

"வந்தாயா, அப்பா? நல்ல வேளை: எங்கே கதை முடியாமல் நின்றுவிடுமோ என்று எண்ணியிருந்தேன்; வந்துவிட்டாய்" என்று பாட்டி வரவேற்றாள்.

"வந்துவிட்டேன்; சீக்கிரம் கதையை முடித்துவிட்டு என்னுடன் வா" என்றான் யமன்.

"கதையை முடிக்காமல் வரக்கூடாதா?"

"இன்னும் கொஞ்சந்தானே இருக்கப்போகிறது? முழுவதையும் கேட்டுவிட்டே நான் உன்னை அழைத்துப் போகிறேன்."

"அப்படியானால் கேளப்பா, சொல்கிறேன்" என்று மறுபடியும் கதையைத் தொடர்ந்து சொல்ல ஆரம்பித்தாள் அந்தக் கிழவி.

* * *

எருமை மாட்டுவண்டி போய்க்கொண் டிருந்தது. ராஜகுமாரனுக்குப் பக்கத்தில் அவன்மேல் படாதபடி ராஜகுமாரி உட்கார்ந்திருந்தாள். அவனுடைய அங்க சௌந்தரியத்தை அவள் கண்டு கண்டு களித்தாள்.

"ஹே புருஷோத்தம, தாங்கள் எந்தத் தேசத்திலிருந்து வருகிறீர்கள்? இந்த ஏழையினிடத்தில் இவ்வளவு கருணை உண்டாவதற்குக் காரணம் என்ன?" என்று தன் குயில்மொழியால் கொஞ்சலாகக் கேட்டாள்.

அவன், "சிவ, சிவ" என்று சொன்னானே ஒழிய, வேறு ஒன்றும் சொல்லவில்லை.

"எல்லாம் சிவபெருமான் திருவருளால் நடைபெறுகின்றன என்று தாங்கள் குறிப்பிடுகிறீர்கள். நான் தங்கள் சுந்தர ரூபத்தையும், சிவபக்தியையும், பலத்தையும் கண்டு கண்டு ஆச்சரியக்கடலில் மூழ்குகிறேன். என்ன புண்ணியம் செய்தேனோ! தங்கள் தரிசனம் கிட்டியதோடன்றித் தங்களோடு ஒரே ரதத்தில் பிரயாணம் செய்யும் பாக்கியமும் கிடைத்தது."

ராஜகுமாரனுக்கு அவளோடு வாய்திறந்து பேச வேண்டுமென்ற ஆவல் எழுந்தது. தன்பால் அவளுக்கு உண்டாயிருக்கும் மதிப்பை அவன் உணர்ந்தான். அந்த மதிப்புக்கு உண்மையிலேயே பாத்திரனாக வேண்டுமென்ற உணர்ச்சி அவனுக்கு வந்துவிட்டது.

"தாங்கள் இவ்வடியாளிடம் ஒரு வார்த்தையாவது பேசக்கூடாதா? தங்களைப் பெற்றதனால் எந்த நாடு விளக்கம் அடைந்தது? தங்களுக்கு அடையாளமாகிப் புனிதமடைந்த திருநாமம் எது?"

ராஜகுமாரனுக்கு அவள் பேசுவது தெளிவாகத் தெரியவில்லை. சிவநாமத்தையே அடிக்கொரு தரம் சொல்லிக்கொண்டிருந்தான். அவளைக் கணத்துக்கு ஒரு முறை பார்த்துப் புன்னகை பூத்தான். அந்த மோகன முறுவல் வலையிலே அவள் தன் உள்ளத்தைப் பறிகொடுத்தாள்.

வண்டி ஒரு வேலி ஓரமாகப் போகும்படி நேர்ந்தது. பறங்கியும் பூசணிக்காயும் அந்த வேலிக்கு வெளியே காய்த்திருந்தன. வெள்ளை வெளேரென்று இருந்த பூசணியைப் பார்த்தவுடனே ராஜகுமாரனுக்கு விபூதி ஞாபகம் வந்துவிட்டது.

'இந்தக் காய் இப்படி விபூதியைப் பூசிக்கொண்டு கிடக்கிறதே. இதுவும் சிவபக்தி உடையதுபோல் இருக்கிறது. அப்படியானால் இதைப் பறித்து நாம் வைத்துக் கொள்ளலாம்' என்று எண்ணித் திடீரென்று கீழே குதித்து அந்தச் சாம்பற் பூசணிக்காயைப் பறித்து வந்து தனக்கும் ராஜகுமாரிக்கும் நடுவில் வைத்துக்கொண்டான். அவன் அதை வைத்துவிட்டு வண்டியில் ஏறினவுடன் சுந்தரிக்கு உண்டான ஆவல் கட்டுக்கு மீறிப் போயிற்று.

"என்ன இங்கிதம்! என்ன குறிப்பு! இதோ என்னை ஏற்றுக்கொள்ளுங்கள்" என்று ஆவேசம் வந்தவளைப் போல அவன் கையில் தன் கையை வைத்தாள். அவன் தன்னையும் அறியாமல் அதைப் பற்றிக்கொண்டான். அவள் உடனே அவனைத் தழுவினாள். அவனும் தழுவினான். "என் ஆருயிர் நாதா, தங்களுக்கு என்னைப் பாணிக்கிரகணம் செய்துகொள்ள வேண்டுமென்ற கருத்து இருப்பதை எவ்வளவு அழகாகக் குறிப்பித்தீர்கள்! எனக்கும் அந்த ஆவல் இருந்தது. ஆனால் சொல்வதற்கு நாணமாக

இருந்தது. தாங்களும் வாயால் சொல்லாமலே காரியத்தைச் சாதித்துக் கொண்டீர்கள். இந்தப் பூசணியை நம்மிடையில் வைத்துத் தங்கள் கருத்தைத் தெரிவித்துவிட்டீர்கள். இனி நம்மை யாரும் பிரிக்க முடியாது'' என்று தன்னுடைய ஆனந்தக் கொந்தளிப்பை அவள் வார்த்தைகளால் ஒருவாறு வெளிப்படுத்தினாள்.

* * *

பாட்டி இங்கே சிறிது நிறுத்தி யமதர்மராஜனை ஒரு கேள்வி கேட்டாள்.

"அவள் அந்தக் காயைக் கொண்டு எதை அறிந்து கொண்டாள்? எதற்காக அவ்வளவு குதூகலம் அடைந்தாள்?''

மிருத்யுதேவனால் இந்த முறை தவறாகக்கூடச் சொல்ல இயலவில்லை. யோசிக்கவும் பொறுமை இல்லை. "பாட்டி, பாட்டி, அந்தக் கேள்விகளைத் திருப்பிக் கேட்கிறேன்; பதில் சொல்லு. ஆனால் கதையை இன்றே முடித்துவிடவேண்டும். பதில் சொல்லத் தெரியாததற்காக இன்னும் நாள் தள்ளமாட்டேன்'' என்றான்.

"இதோ சொல்லிவிடுகிறேன். கதையையும் விடிவதற்குள் முடித்துவிடுகிறேன். சரி. இப்போது பூசணிக்காய்க்கு அர்த்தம் சொல்கிறேன். ராஜகுமாரன் பூசணிக்காயைச் சைவக்கோலம் உடையதாகத் தோன்றுவதனால் பறித்துக் கொண்டுவந்து வைத்தானல்லவா? அவன் கருத்தை அவள் கவனிக்கவில்லை. அவள் வேறு அர்த்தம் செய்துகொண்டாள். பூசணிக்காயைக் கல்யாணப் பூசணிக்காய் என்று சொல்வது உண்டு அல்லவா? நமக்கு நடுவில் கல்யாணம் வேண்டும் என்ற விஷயத்தை வெளிப்படையாகச் சொல்லாமல் குறிப்பாகத் தெரிவிக்கக் கல்யாணப் பூசணியை வைத்தானென்று அவள் நினைத்துக் கொண்டாள். அதனால்தான் அவளுக்கு அவ்வளவு குதூகலம். இப்போது தெரிந்ததா?''

"பாட்டி, நீ மிகவும் சாதுர்யம் படைத்த பேர்வழி; சரி, இனிமேல் கதையை முடித்துவிடு."

மேலே பாட்டி கதையைத் தொடர்ந்து வர்ணனைகளுடன் சொல்லத் தொடங்கினாள்.

"ராஜகுமாரன் ராஜகுமாரியின் அணைப்பில் இன்பங் கண்டு பிறகு பேச ஆரம்பித்தான்; புத்திசாலித்தனமாகவே பேசினான். அவளைத் தன் ஊருக்கு அழைத்துப் போய்க் கல்யாணம் செய்துகொண்டான்." இந்தக் கதையை அவள் விடியுமட்டும் வருணனையோடு விரித்துச் சொல்லி நிறைவேற்றி, "அப்பா, கதை முடிந்தது; கத்திரிக்காய் காய்த்தது" என்று சொல்லி முடித்தாள்.

யமதர்மராஜனுக்கே இப்போது ஒரு சந்தேகம் வந்துவிட்டது. "பாட்டி, பாட்டி! அதென்ன கதை முடிந்தது, கத்திரிக்காய் காய்த்தது என்றாயே; கத்திரிக்காய் எங்கிருந்து வந்தது?" என்று கேட்டான்.

"அதுவா? உனக்குக் கதை சொல்லிப் போது போக்கினதற்கு அதுதானப்பா காரணம். என் பேரன் வைத்த கத்திரிச்செடி பூப்பூத்துக் காய் காய்க்கும் தருணம், நீ வந்துவிட்டாய். அந்தக் காயைக் கறி பண்ணிச் சாப்பிட வேணுமென்று எனக்கு மிகுந்த சபலம். நீ முதல் நாள் வந்தாயே, அன்று அது இளம் பிஞ்சாக இருந்தது; இன்று காய்த்துவிட்டது. அதைக் கறி பண்ணித் தின்னுமட்டும் நீ கருணை செய்து காத்திருந்தால் நல்லது; இல்லையென்றாலும் குற்றம் இல்லை. என் கதை முடிந்தது, கத்திரிக்காயும் காய்த்தது என்று சந்தோஷப்படுகிறேனே, இதுவே போதும்" என்றாள்.

யமதர்மராஜனுக்கு நாளுக்கு நாள் பாட்டியினிடம் மதிப்பும் வியப்பும் பெருகியிருந்தன. இன்றோ எல்லையில்லாத இரக்கம் ஏற்பட்டது. "இதுவா சமாசாரம்? அப்படியானால், பாட்டி, நீ அந்தக் கத்திரிக்காயைக் கறி பண்

ணிச் சாப்பிடுகிறது மட்டுமல்ல; இன்னும் பல தடவை காய் காய்த்துக் கறி பண்ணிச் சாப்பிட்டுக்கொண்டும் கதை சொல்லிக்கொண்டும் இருப்பாயாக! உனக்கு எப்போது இந்த உலகத்தை விட்டுப் போகவேண்டுமென்று தோன்றுகிறதோ அப்போது என்னை நினை. நான் அப்போது வந்து உன்னை அழைத்துப் போகிறேன். அப்போதும் எனக்குக் கதை சொல்கிறேனென்று ஆரம்பித்துவிடாதே, பாட்டி!" என்று வரம் கொடுத்துவிட்டுக் காலதேவன் மறைந்தான்.

முற்றும்